

# சியாம்சுந்தர்தாஸ்

சுதாகர் பாண்டே



இந்திய
இலக்கியச்
சிற்பிகள்

உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில் பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை மன்னர் சுத்தோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்தரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

(நாகார்ஜுன மலைச்சிற்பம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு.
பட உதவி : நேஷனல் மியூசியம். புதுதில்லி)

இந்திய இலக்கிய சிற்பிகள்

# சியாம்சுந்தர்தாஸ்

இந்தி மூலம்:

**சுதாகர் பாண்டே**

தமிழில்:

**தி.இரா. சின்னப்பன்**



சாகித்திய அக்காதெமி

*SHYAMSUNDARDAS* - Tamil Translation by T. R. Chinnappan of Sudhakar Pande's monograph in Hindi, Sahitya Akademi, New Delhi 1995 Rs.15.


முதல் வெளியீடு 1995

ISBN 81-7201-750-2

**சாகித்திய அக்காதெமி**

**தலைமை அலுவலகம்**

ரவீந்திர பவன், 35, பெரோஸ்ஷா சாலை, புது தில்லி 110 001.

**விற்பனை**

'ஸ்வாதி' மந்திர் சாலை, புது தில்லி 110 001.

'குணா பில்டிங்' : 304-305, அண்ணா சாலை.
தேனாம்பேட்டை, சென்னை 600 018.

ஜீவன் தாரா பில்டிங், 4வது மாடி,
டைமண்ட் ஹார்பர் சாலை, கல்கத்தா 700 053.

172, பம்பாய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை,
தாதர், பம்பாய் 400 014.

109, ஜே.ஸி. சாலை, பெங்களூர் 560 002.

விலை ரூ. 15

ஒளி அச்சு : சிஸ்டெக், சென்னை - 2

அச்சிட்டோர் : உதயம் ஆப்செட், சென்னை - 2

# சமர்ப்பணம்

டாக்டர். சியாம்சுந்தர்தாஸ் தற்கால இந்திமொழிக்கு நல்ல வடிவை வழங்கி, அதன் வளர்ச்சிப்பெரு நிலைக்காகப் பாடுபட்ட சான்றோருள் மூத்த வராவார். இம் மொழிக்குரிய வரலாற்றில் இவர்தம்காலத்தில் ஆற்றிய நற்பணிகள் சிறப்பாக இடம் பெற்றிருப்பதைக் காணலாம். இதன் வளர்ச்சி மாற்றத்திற்கு இவர் ஆற்றிய தொண்டு அளப்பரிது. அதற்குரிய திட்டங்களைத் தீட்டியதோடு நின்றுவிடாமல், எதிர்காலத்து ஆக்கப்பணிகளின் சிருஷ்டிகர்த்தாவாகவும் திகழ்ந்திருந்தார். இம் மொழி வளர்ச்சிக்கு மட்டுமன்று, இதன் உயர் கல்வி முறைக்கும் தொடக்க காலத்தில் இவர் ஆற்றிய பணியானது, தத்தம் மொழிக்காகப் பாடுபட்ட பிறமொழிப் பணியாளர்கட்கும் ஒரு கலங்கரை விளக்கமாகத் திகழ்ந்தது எனலாம். அவர்தம் நற்பணியைப் பாராட்டி காசி இந்து பல்கலைக் கழகம் டிலிட். பட்டம் வழங்கிப் பாராட்டியது. இந்தி இலக்கிய வட்டத்தினர் 'சாகித்திய வாசஸ்பதி' என்ற பெரும் பட்டத்தை வழங்கி கௌரவித்தனர். அன்றைய அரசு 'ராய்பகதூர்' என்ற கௌரவ பட்டத்தை வழங்கிச் சிறப்பித்தது. இந்தி இலக்கிய வட்டம் மட்டுமன்று, பிறமொழி இலக்கிய வட்டமும் பாராட்டும் பெரும்பேறு பெற இவர்தம் சிறந்த படைப்புகளே காரணமாக அமைந்திருந்தன.

இத்தகைய பல்வகைப் பெருமை பெற்ற ஒரு சிந்தனையாளரின் இலக்கியப் படைப்புக்களை அறிமுகப்படுத்தும் நூல் ஒன்றினை எழுதுவதில் எம் மனிதனாக இருப்பினும் பெருமகிழ்ச்சியே உருவாகும். இச்சிறு நூலில், அவர்தம் வாழ்க்கை வரலாறு, சிறப்புப் பண்புகள், இலக்கிய படைப்புக்கள், மேற்கொண்ட ஆக்கப் பூர்வமான நற்பணிகள் தொடர்பான கருத்துக்களைக் கூறுவதோடு, இலக்கிய உலகிற்கு அவ்வப்பொழுது நற்கருத்துக்களை வழங்கி, ஒரு இலக்கியச் சக்ரவர்த்தியாகத் திகழ்ந்து பெருமை பெற்ற வரலாறும் கூறப்பட்டிருக்கிறது. இத்தகைய பயனுள்ள நற்பணியைச் செய்வதற்குக் கிடைத்த சந்தர்ப்பமே என் பேருவகைக்குக் காரணமாக அமைந்துவிட்டது எனலாம்.

நம் நாட்டு மொழிகளின் மேம்பாட்டிற்கும், வளர்ச்சிக்கும் பாடுபட்ட இத்தகைய இந்திய இலக்கியச் சிற்பிகளின் வாழ்க்கை வரலாற்றினை நூலாக வெளியிடும் திட்டத்தை உருவாக்கிச் செயல் பட்டு வரும் சாகித்திய அக்காதெமிக்கு நான் என்றும் கடமைப்பட்டவனாவேன். சிந்தனை வாய்ந்த இத்துறையின் பணியாளர்க்கு என் வாழ்த்துக்கள்!

25, சென்ட்ரல் லேன்,
புது தில்லி – 1

சுதாகர் பாண்டே

# பொருளடக்கம்

# 1. எளிய வாழ்வின் பெரிய கதை

**இ**ந்கால இந்தி மொழியின் தந்தை பாரதேந்து அரிச்சந்திரரின் மறைவுக்குப் பிறகு டாக்டர் சியாம்சுந்தர்தாஸ் 1876 ஆம் ஆண்டு சூலை 14 ஆம் நாள் காசியில் தோன்றினார். துளசி, கபீர் ஆகியோர் தோன்றிய இந்நகரில் தான் சியாம்சுந்தர்தாஸுக்கு முந்திய இந்தி வளர்ச்சிக்குரிய வரலாற்றின் இருபெரும் சூத்திரதாரிகளாகத் திகழ்ந்தவர்கள் ராஜா சிவபிரசாத் 'சிதாரே இந்து' அவர்களும், பாரதேந்து அரிச்சந்திரரும் ஆவர். ராஜா சிவபிரசாத் 'சிதாரே இந்து' அவர்கள் பாரதேந்து அரிச்சந்திரரின் கல்விக் குருவாகத் திகழ்ந்தவர். இருவரும் காசி மாநகரின் புகழ்பெற்ற செல்வந்தர் குடும்பத்தின் இரத்தினங்கள் ஆவர்.

இருவருமே இந்தி மொழியை மேன்மையடையச் செய்த பெரியோர் ஆவர். ஆயினும், குருவைக்காட்டிலும் சீடனே மக்கள் கருத்தை அடிப்படையாக ஏற்றுப் போற்றிய தியாகமூர்த்தியாகத் தோன்றி, புதியன படைப்பவனாகத் திகழ்ந்தான். குரு, ஆங்கிலேயர்களைப் பேரரசர்களாக எண்ணி, அவர்கள் காட்டிய வழியை விரும்பி ஏற்று, அதனால் கிடைத்த பதவியையும், கௌரவத்தையும் விரும்பியவராகத் திகழ்ந்தார். ஆயினும், பாரதேந்து இந்தி பேசும் மக்களின் சந்திரனாக ஒளிபெற்று, ஆட்சியாளரின் கருணைக்குரிய 'சிதாரே' என்னும் நட்சத்திர ஒளி மங்குமாறு செய்து, குருவிற்கு மிஞ்சிய சீடராகத்திகழ்ந்தார்.

எவரது உள்ளம் மக்களுக்காக உள்ளதோ அவரையே மக்கள் மதிக்கின்றனர். மக்களை வழிபடுவதே உலகின் மிகச் சிறந்த தவமெனக் கருதப்படுகிறது. அம்மாதிரியான சாதகர்களுக்கு - தவசிகளுக்கு - தங்கள் ஆணவத்தை ஒழித்து அனைத்தையும் சமூகத்தின் காலடியில் மனப்பூர்வமாக அர்ப்பணிக்க வேண்டியது அவசியமாகும், இம்மாதிரியான அர்ப்பணிக்கும் செய்கையானது தவசிகளை, மக்களை ஆராதிப்பவர்களாக ஆக்கிவிடுகிறது, அத்துடன் பூசிப்பவர்களைத் தெய்வமாக்கிவிடுகிறது. மக்களின் பாததூளியை வணங்குவதால் தொண்டன், தானே இவ்வுலகில் மகானாகிவிடுகிறான்.

காசி மாநகரின் இலக்கியப் பணிக்குரிய பரம்பரை எப்பொழுதும் மக்களைச் சார்ந்ததாகவே இருந்து வருகிறது. எனவே, அரசைச் சார்ந்த இலக்கியப் பணி எப்பொழுதும் விரும்பத்தகாத ஒன்றாகவே கருதப்பட்டு வந்திருக்கிறது. பாரத நாட்டின் இலக்கிய வரலாற்றில் மக்கள் ஆதரவு பெற்ற

பரம்பரையின் அளவுகோலே மிகப்பழமையான பெருமைக்குரிய ஒன்றாகக் கருதப்பட்டு வருகிறது. பாரதேந்துவின் குடும்பத்தினர் அளவற்ற பெருந்தனவந்தர்களாக இருந்ததோடு அன்றைய ஆட்சியாளர்களின் ஆதரவையும் நிறைவாகப் பெற்றிருந்தனர். அவர் தம் செல்வம் அனைத்தையும் இந்தி மொழியின் வளர்ச்சிக்காகவே செலவு செய்தார். தியாகம் எனப்படும் உயர்ந்த நெறிதான் வைணவ மதத்தின் உயிர்நாடி; அதன் அடிப்படையில் அவரது வாழ்வும் இலக்கியமும் மக்களின் நலனுக்காகவே பூர்ணமாக அர்ப்பணிக்கப்படும் அமுத கலசமாகத் திகழ்ந்தது.

இந்தி இலக்கியமென்ற மேடையிலிருந்து பாரதேந்து மறைந்த பிறகு அவரால் உருவாக்கப்பட்டவை கூட மறைந்தொழிந்தன. உடனிருந்தோரின் ஒழுங்கற்ற, அலங்கோலமான, நம்பிக்கை இழந்த நிலையால் அத்துறை இழிநிலை அடைய நேரிட்டது. எனவே, இந்தி உலகில் எல்லாத் துறையிலும் நெறிமுறையற்ற நிலையையே எதிர்நோக்கியிருக்க வேண்டியதாயிற்று. இந்தி மொழியின் எல்லா வளர்ச்சி நிலைக்களுக்குமுரிய சூழ்நிலைகளும் முடமாகியே கிடந்திருந்தன.

இந்திய இலக்கியச் சிற்பிகளின் நிலைமை இப்படியிருக்க, நாட்டு நடப்பும்கூட இந்திக்கு அனுகூலமாக அமைந்திருக்கவில்லை. இந்தியின் வளர்ச்சி தனிப்பட்டதொரு லட்சியமல்ல. இதன் வளர்ச்சியின் அடிப்படையில் நாட்டின் எல்லாவிதமான உன்னதத்திற்கும் விழையும் தவவேட்கை இருந்தது. இந்த நிலையில், எதிர்காலத்தின் ஏற்றத்திற்குரிய தொலைநோக்குக் கொண்டோரின் ஆக்கப்பூர்வமான செயல் முறைகள், மேலான நிலையைஉருவாக்கும் திடமான சங்கல்பம், நன்முறையில் செலுத்தி வெல்ல முடியாத தளர்ச்சியற்ற குறிக்கோள் எனப் பல்வகைத் திறமையுள்ள கற்பனை வளமிக்கோர் தேவைப்பட்டனர். இத்தகைய மேலான தனித்தன்மை கொண்ட எவரும் அச்சமயத்தில் இந்தி மொழியில் உருவாகவில்லை.

பாரதேந்து மண்டல், இலக்கியவாதிகள் இலக்கியப் படைப்பில் மாத்திரம் தம்மை ஈடுபடுத்தி வந்தனர். அவர்கள் அனைவரும் அறிவார்ந்த மதிநுட்பமுடைய எழுத்தாளர்களேயன்றி, தலைவர்கள் அல்லர். ராஜா சிவபிரசாத் 'சிதாரே இந்து' தேவநாகரி எழுத்தில் எழுதப்பெற்ற பாரசீக மொழித் தன்மை வாய்ந்த உருது மொழியைத்தான் இந்திமொழி எனக்கருதி செயல்பட்டுவந்தார். ராஜா லட்சுமணசிங் என்பவர் இந்தியின் மூலவடிவையும், தன்மையையும் இலக்கியப் படைப்பில் அமைத்துவிட முயற்சி செய்துகொண்டிருந்தாரே யல்லாமல், பாமர

மக்களிடையே இந்தியை நிலைநாட்டும் பணிக்குரிய வலுவான சக்தியை வளர்த்துக்கொள்ளவில்லை. அவரும் நிர்மாணிப்பவர் அல்லர். எழுத்தாளராகவே இருந்தார். சர் சையத் அகமதுகான், ஆங்கிலேயரின் உதவியோடு இத்தகைய நற்பணியை மேற்கொண்டு வெற்றியும் பெற்றிருந்தார். அவருடைய சொந்தப் பகுதியாகிய ஐக்கியப் பிராந்தியத்தில் அமைந்திருந்த வழக்கு மன்றங்களின் மொழியாக இந்தி ஏற்கப்படாமலிருந்தது. ஒரிசாவில் ஒரியா மொழியும், வங்கத்தில் வங்க மொழியும், குஜராத்தில் குஜராத்தியும் வழக்குமன்ற மொழியாக ஏற்கப்பட்டிருந்தும்கூட, ஐக்கிய பிராந்தியத்தின் வழக்குமன்றத்தில் தேவநாகரி எழுத்திற்கும், இந்திக்கும் சந்தர்ப்பமோ, நியாயமோ கிடைக்கவில்லை. அங்கு நீதி வழங்கும் மொழியாக பாரசீக எழுத்தில் எழுதப்பட்ட உருது மொழியே இடம்பெற்றிருந்தது. இந்திமொழிக் கல்வியுங்கூட பெரும்பாலும் உயர் தொடக்கப்பள்ளி (7 ஆம் வகுப்பு) வரையில்தான் கற்பிக்கப்பட்டு வந்தது. இத்தகைய எதிர்ப்பான சூழலில்தான் இந்திமொழி யாதொரு ஆதரவுமின்றி செயல் திறனற்ற நிலையில் பவனி வந்துகொண்டிருந்தது.

இந்தி மொழியின் பேராற்றலை எந்த அளவிற்குக் காண விழைகிறோமோ, அந்த அளவிற்கு அளவிறந்த சிறப்புடன் தோற்றமளித்திருந்ததென்றாலும், அம்மொழி அந்தச் சமயத்தில் தன் இல்லத்திலேயே அஞ்ஞாதவாசம் செய்துவர நேரிட்டது. இத்தகைய சூழ்நிலையில்தான் பாபு சியாம் சுந்தர்தாஸ் அவர்கள், சாதனையாளர் பாரதேந்து அரிச்சந்திரரின் வழித்தோன்றலாகத் தோன்றலானார். அவருடைய முன்னோர்களின் பூர்வீகம் லாகூர் ஆகும். குடும்பம் வறுமையின் காரணமாகத் தம் ஆற்றலைக் கொண்டு அதிர்ஷ்டத்தைச் சோதித்துப் பார்க்கவே அமிர்தசரஸ் வந்தது. ஆயினும், அங்கும்கூட அவர்களுக்கு அதே கதிதான் ஏற்பட்டது. எனவே, அமிர்தசரஸ் நகரைவிட்டு அவர்கள் காசிமாநகர் வந்து சேர்ந்தனர். இங்கு அவர்களுடைய துணி வியாபாரம் நன்கு வளரத் தொடங்கி, அவர்களுடைய இனமாகிய 'கத்ரி' இனத்தவரிடையே பெருமதிப்பும், பாராட்டும் கிடைத்தன. இவருடைய தந்தைவழிப் பாட்டனாரின் பெயர் ஹஜாரிமல்; தந்தையின் பெயர் தேவிதாஸ்; தாயின் பெயர் தேவகி ஆகும். இவர் பிறப்பதற்கு முன்பே இவரது குடும்பம் செல்வத்தால் செழிப்புற்றிருந்தது.

ஆசிரியர் அனுமான் பிரசாத் அவர்களிடம் இவர் ஆரம்பகாலத்தில் சமஸ்கிருதமும் ஆங்கிலமும் பயின்றார். 1890 ஆம் ஆண்டு இவர் உயர்தொடக்கப்பள்ளித் தேர்வு எழுதித் தேர்ச்சி

பெற்றார். சிறுவயதிலிருந்தே துளசிதாசின் 'இராமசரிதமானஸ்' காவியத்தின்மீது அதிக ஈடுபாடு இருந்தது. இதன் காரணமாகவே இவருக்கு இந்திமொழியின்மீது அதிகப் பற்று தோன்றலாயிற்று. இவர் 1892ஆம் ஆண்டு உயர்பள்ளித் தேர்வில் தேர்ச்சி பெற்றவுடன் காசிமாநகர் ராணி கல்லூரியில் புகுமுக வகுப்பில் சேர்ந்து படிக்கலானார். பிறகு பிரயாகைப் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து பட்டப்படிப்பை முடிக்கப் பெரும் முயற்சி செய்தும் பயனற்றுப் போய்விட்டது. இத்தடைக்கு உடல்நலக்கேடே காரணமாயிற்று.

பாரத நாட்டவரால் மறக்கவொண்ணா மிகச் சிறந்த பேராசிரியராகத் திகழ்ந்த டாக்டர் வெனிஸ் என்பவர்தான் அச்சமயம் ராணி கல்லூரியின் விரிவுரையாளராகப் பணிபுரிந்துவந்தார். சியாம் சுந்தர்தாஸ் அவர்கட்கு அங்குதான் டாக்டர் வெனிஸ் அவர்களுடைய ஆதரவு கிடைத்தது. இவரது உதவியால் மீண்டும் பட்டப்படிப்பைத் தொடர்ந்து முடித்தவுடன் 1899ஆம் ஆண்டு ஆசிரியர் பயிற்சிப் பெற லக்னோ சென்றார். ஓராண்டிற்குப் பிறகு காசிமாநகரில் உள்ள இந்து உயர் பள்ளியில் உதவியாசிரியராக நியமனம் பெற்றார்.

இந்த இந்து உயர்பள்ளிதான் திருமதி அன்னிபெசண்ட் அம்மையார், பண்புமிகு பண்டிட் மதன்மோகன் மாளவியா, டாக்டர் பகவன்தாஸ் ஆகியோரின் நற்பணிக் கேந்திரமாகத் திகழ்ந்துவந்தது. இதை மையமாகக் கொண்டுதான் நம் நாட்டுச் சான்றோர் பலரும் பண்பாட்டுணர்வு, தேசிய உணர்வு, சுதந்திர உணர்வு போன்றவற்றை நாட்டில் வளர்ப்பதற்குரிய ஞான கங்கையைத் தோற்றுவிக்கப் பகீரதப் பிரயத்தனம் செய்து வந்தனர். அந்தக் காலத்தில் இந்த இந்துக் கல்லூரிதான் தேசிய உணர்வெனும் விரிந்த ஜோதியைத் தானமாக வழங்கும் ஞானபீடமாகத் திகழ்ந்திருந்தது. காலப்போக்கில் அம் மையம்தான் காசி இந்து பல்கலைக் கழகமாக உருப்பெற்றது.

சியாம்சுந்தர்தாஸ் தன் நற்பணியாலும், மதிநுட்பத்தாலும் படிப்படியாகப் பதவி உயர்வுபெற்று, இந்து கல்லூரியின் இளநிலை விரிவுரையாளராகப் பதவி உயர்வு பெற்றார். ஸ்ரீதர் பாடக் அவர்களின் தூண்டுகோலாலும், உதவியினாலும் ஓராண்டு விடுமுறை பெற்று நீர்ப்பாசனத் துறையில் பணிபுரிய சிம்லா சென்றுவிட்டார். ஆனால், உடல்நலம் பாதித்ததாலும், அப்பணியில் மனம் ஈடுபடாததாலும் மீண்டும் திரும்பிவந்து காசி இந்து கல்லூரியிலேயே பணிபுரியத் தொடங்கினார். கலைமகளின் கருணையை முழுமையாகப் பெற்றவரை அரசினரின்

நீர்ப்பாசனத்துறை அறிக்கை தயாரிக்கும் அலுவலராக உருவாக்க முடியவில்லை என்றே கூறவேண்டியிருந்தது.

1909ஆம் ஆண்டு மீண்டும் ஜம்மு அரசுத் துறையில் பணிபுரிய காஷ்மீர் சென்றுவிட்டார். அங்கு மூன்றாண்டு சேவை செய்தபிறகு முன்பு ஏற்பட்ட அதே பரிதாப நிலை உருவாகி மீண்டும் காசிமாநகர் வந்து சேர்ந்தார். 1913ஆம் ஆண்டுவரை லக்னோ நகரில் இருந்த காளிச்சரண் உயர்பள்ளித் தலைமையாசிரியராக நியமனம் பெற்றார். இந்தி மொழிமீது கொண்ட பற்றின் காரணமாக மிகச்சிறந்த இலக்கியங்களைப் படைக்கும் பணியில் தம் உயிரையே பிணைத்துக் கொண்டு விட்டார். இத்துடன் நாகரி பிரச்சாரணி சபாவைத் தோற்றுவிக்க வேண்டுமென்ற மனவுறுதியும் கொண்டிருந்தார்.

1921ஆம் ஆண்டில் பண்டிட் மதன் மோகன் மாளவியா அவர்களின் உதவியால் காசி இந்து பல்கலைக் கழகத்தில் இந்திமொழித் துறையின் முதல் ஆசிரியராகவும், பிறகு துறைத் தலைவராகவும் நியமனம் பெற்று பெருமை பெற்றார். அக்காலத்தில் காசி இந்து பல்கலைக் கழகம் நாட்டின் பல்வேறு பேரறிஞர், கல்விப்பணியாளர், தேர்ச்சிபெற்ற கல்விச் சிந்தனையாளர்களின் பணிக்களமாகத் திகழ்ந்திருந்தது.

வேறு எங்கும் காணமுடியாத சிறப்பு வாய்ந்த கற்பிக்கும் முறையைப் பின்பற்றி முதுகலை வகுப்பை நன்முறையில் நடத்திப் பெருமைபெற்ற ஒரு துறையின் தொடக்ககால பேராசிரியராகத் திகழ்ந்தவர் பாபு சியாம்சுந்தர்தாஸ். ஒன்றுமேயில்லாதிருந்த அத்துறையைத் தம் தவமேம்பாட்டால் நன்கு உயர்த்தி, புகழ்ச்சி எனப்படும் இமயவரம்பிற்கு உயரச்செய்து நற்புகழ் பெறுமாறு செய்தார். பணியிலிருந்து ஓய்வுபெறும் காலம் வரை அதே பணியில்தான் அமர்ந்திருந்தார். 1945ஆம் ஆண்டு ஆகஸ்டு 8ஆம் நாள் அவர் இறைவனின் மலரடியை அடைந்தார். வாழ்வில் மொழிக்காகத் தம்முடைய உயர்ந்த மானுட நற்செயல்கள் வழியாக எப்பொழுதும் நலமே புரிய முயன்ற பாபு சியாம் சுந்தர்தாஸ் அவர்களின் நேர்மையான நல்வாழ்வின் கதை இவ்வளவுதான்.

இவர்தம் இலக்கிய படைப்புகள் பல்விதமாய்ப் பல்கியிருந்தன. இவர் எதனையும் அடிப்படையாக உருவாக்கும் செயல்திறம் கொண்டவராகத் திகழ்ந்தார். மாணவராக இருந்தபொழுதே இவர், தம் படைப்புப் பணிகளைத் தொடங்கி விட்டார். இஃது இடைவிடாமல் தொடர்ந்து வளர்ச்சியுற்று இடுகாட்டுப் புழுதியில் இரண்டறக்கலந்து நற்கதியடையும் வரை இடையறாது நடைபெற்று வந்தது. வாழ்க்கைப் பயணத்தில்

அவரால் அர்ப்பணம் செய்யப்பெற்றத் தனிப்பட்ட இந்தி மொழிச் சேவையானது தியாகத் திருவொளியாகவும், தன்மானத் தகழியின் சுடராகவும் இடைவிடாமல் பிரகாசித்து நல்ல நல்ல பயனுள்ள படைப்புகளைப் படைத்தவண்ணம் இருந்தது.

இவரது ஆக்கப்பணிகளில் மிகச் சிறந்ததாகக் கருதப்படுவது இந்திமொழியுலகத்தின் நிரந்தரமான ஒளிப்பிழம்பாய்த் திகழ்ந்து வரும் 'நாகரி பிரச்சாரிணி சபை' யே யாகும். இவர் ஆசிரியப் பெருந்தகையாகவும் திகழ்ந்தார். பிற்கால இந்திமொழிச் சேவைக்குரிய மாணவச் செல்வங்களைச் சிறப்பாகவும், தொடர்ந்தும் உருவாக்க முடிந்தது. அத்தகைய மாணவர்கள் மேலும் முன்னேறிச் சென்று இந்தியெனும் தீபத்தைச் சுடர்விட்டுப் பிரகாசிக்குமாறு செய்தனர்.

இவர் மிகச்சிறந்த இணைப்பாளரும்கூடத்தான்; தம் காலத்திய நல்லறிஞர்களை ஒன்றுதிரட்டி ஒரு மாலையாகக் கோத்து மிகச்சிறந்த அற்புதமான இந்தி இலக்கியப் படைப்புக்குரிய பணிகளைச் செய்வித்தார். அவையே, இருபதாம் நூற்றாண்டின் இந்திமொழி வளர்ச்சிக்கு வேறு எவராலும் ஆற்றமுடியாத நற்பணியைச் செய்ய வழிவகுத்தது. பாரதநாட்டின் பிற மொழிகளில்கூட இத்தகைய பேரறிவாளரையோ, படைப்புத் தொண்டனையோ அதிகம் முயன்று தேடினாலொழிய காண்பது அரிதே. பாபு சியாம் சுந்தர்தாஸ் பத்திரிக்கையாசிரியர், திறனாய்வாளர், வாழ்க்கை வரலாற்று எழுத்தாளர், தொல்பொருள் அறிஞர், கட்டுரையாளர், மொழிப்புலவர்,கல்விச் சிந்தனையாளர் எனப் பல சிறப்புகளைப் பெற்றவர். இவ்வாறு, எல்லாத் துறையிலும் அவர்தம் புகழொளி வரலாற்றின் பொன்னேட்டில் பதிந்துள்ளது. அதுதான், இந்திமொழி வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைந்து நற்கௌரவத்தையும் நல்கியது. இவர் இருபதாம் நூற்றாண்டின் இந்தி மொழியை உருவாக்கியராகவும், அதன் தலைவிதியை நிர்ணயம் செய்பவராகவும் திகழ்ந்தார் என்றால் மிகையாகாது.



## 2. சமூக சாதனை

### நாகரி பிரச்சாரிணி சபையின் தோற்றம்

*பாரதேந்து அவர்களின் மறைவிற்குப்பின் இந்தி உலகம் முறைபிறழ்ந்து சிதறிக் கொண்டிருந்தது. பாரதேந்து தோழமைக்குழு வாயிலாக உருவாக்கிச் சென்ற படைப்பாக்கப் பணிகளைத் தொடங்கி வைத்தார். ஆனால், மக்கள், ஊர்கூடித் தேர் இழுக்கும் பணியில் நம்பிக்கைக் கொண்டிருந்த காலம் அது. அக்காலத்தில் அரசாங்கம் முதற்கொண்டு மதம் வரை, சமூகம் முதற்கொண்டு இலக்கியம் வரை எல்லாமே தம் செயல் முறைகளையும், காரிய சாதனைகளையும் மன்றம், மாநாடு போன்றவற்றின் மூலமாக உருவாக்கிக்கொள்ளும் அடிப்படை நிலையைத் தோற்றுவித்து, அவற்றின் மேம்பாட்டிற்காகப் பாடுபட்டு வந்தன. இந்திமொழித் தொடர்பான இத்தகைய பணிகள் எதுவும் குறைந்துவிடவில்லை. ஓரளவு அங்குமிங்குமாகச் சில பயனுள்ள பணிகள் நடைபெற்றுகொண்டுதான் இருந்தன. ஆயினும், அவை போதிய வெற்றியைத் தரவில்லை. மேலும், அவை அனைத்தும் முறை பிறழ்ந்தும், தனித்தும் காணப்படலாயின.*

*இந்திமொழியைப் பெயரளவிற்கேனும் ஆதரிக்க முன்வருவார் எவருமிலர். அப்படி யாரேனும் துணிந்து தைரியமாக முன்வந்து ஒருசிலவற்றைச் செய்தால், அது யாரேனும் புகழத்தக்க காரியமாகக் கருதப்படமாட்டா. மக்களின் தாய்மொழியான இந்தி அதிகபட்சம் உயர்தொடக்கப்பள்ளி வரைதான் போதனா மொழியாக இருந்துவந்தது. மாணவர்களுக்கிடையே உருது மொழிதான் வேலைவாய்ப்பின் பொருட்டு விரும்பத்தக்கதாக இருந்தது. நடைமுறையில் பின்பற்றும் சந்தர்ப்பம் இல்லாத காரணத்தால் இந்தியைமிகக்குறைந்த அளவினரே விரும்பிக்கற்று வந்தனர். இந்தியை பேசுவோரும், படிப்போரும், படிப்பறிவற்ற பாமரமக்கள்போல், கருதப்பட்டனர். அத்தகையோர் பரிதாபத்திற் குரியவராகவே கருதப்பட்டு வந்தனர். வழக்கு மன்றத்தில் பெயரளவிற்குக்கூட இந்திக்கு இடம் இல்லை. இந்தியில் விண்ணப்பம் தருவதுகூட குற்றமாகக் கருதப்பட்டது.*

*இந்தச் சூழ்நிலையில் புகுமுக வகுப்பில் கற்கும் ஒரு மாணவன் மனதில் இந்திமொழி வளர்ச்சிக்கென்று ஒரு அமைப்பை உருவாக்கிச் செயல்பட வேண்டுமென்று உருவான எண்ணம், அம்மொழிக்காக ஒரு புரவலர் கிடைத்துவிட்ட பெரும்பேறு என்றுதான் கருதவேண்டியிருந்தது. 1884ஆம் ஆண்டில் இந்திய தேசிய காங்கிரஸ் உருவாகிவிட்டது. 18 வயது*

நிறைந்த ஓர் இளைஞன், 9 ஆண்டுகள் கழித்து இந்தி மொழிவளர்ச்சிக்கென அமைத்த ஒரு நிறுவனம் சாதித்த சாதனைகள் மிகச் சாதாரணமாகக் கருதக்கூடியவொன்றா என்ன?

பல ஆண்டுகளாகவே இம்மாணவன் இத்தகைய கற்பனையைத் தன் மனதில் உருவாக்கி வைத்துக் கொண்டிருந்தான். அக்கால மாணவர்கள் தம் மனம்போன போக்கில் தனித்தனியான வாதாடு மன்றங்களை அமைத்து நடத்திவந்தனர். காசிமாநகரிலுள்ள 'ராணி கல்லூரி' யின் தொடக்க நிலை வகுப்பு மாணவர்கள் கூட தமக்கென்று தனியாக மன்றம் அமைத்து செயல்பட்டு வந்தனர். சனிக்கிழமை அரைநாள் விடுமுறையின் காரணமாக நண்பகல் 12.00 மணி முதல் ராணி கல்லூரியின் எல்லா மன்றங்களும் கூடித் தங்கள் பணிகளை நன்முறையில் செய்துவந்தன. கல்லூரியின் கோடை விடுமுறை நாட்களில் ராணி கல்லூரியின் எல்லா மன்றங்களும் தத்தம் பணிகளைநிறுத்தி வைத்துவிடும்.

1893ஆம் ஆண்டு சூலை மாதம் காசிமாநகருக்கு ஆரிய சமாஜத்தின் புகழ்பெற்ற தொண்டர் சங்கர்லால் வந்தார். அவர் மிகச் சிறந்த பேச்சாளரும் ஆவார். பிறகு அவர் தென்னாப்பிரிக்கா செல்ல நேரிட்டது. அங்கே அவர் சுவாமி சங்கரானந்தர் என்ற பெயரில் பெரும் புகழ்பெற்றுத் திகழ்ந்தார். சியாம் சுந்தர்தாஸ் அமைத்த மாணவர் மன்றத்தின் சிறப்புக் கூட்டத்திற்கு இவரை அழைக்க வேண்மென்று விரும்பி முயன்றனர். ஆனால், சிறப்புக்கூட்டம் நடத்த இடம் கிடைப்பதுதான் மிகப்பெரும்பாடாக இருந்தது. ஒருவழியாக இந்த பரிதாபத்திற்குரிய மாணவர்களுக்கு ஒரு குதிரை இலாயம் கிடைத்தது. 1893ஆம் ஆண்டு சூலை 9ஆம் நாள் பாபு ஹரிதாஸ் புவா சாஹெப் அவர்களின் குதிரை இலாயத்தின் மொட்டை மாடியில் சிறப்புக் கூட்டம் நடந்தேறியது. அது காசிமாநகரின் சப்தசாகர் என்ற பகுதியில் அமைந்திருந்தது.

அன்று பேசிய சங்கர்லாலின் பேச்சினால் எல்லோரும் எழுச்சியுற்றனர். அதே நாளில் அந்த எழுச்சியுற்ற இளைஞர்கள் தாய்மொழியின் மேன்மைக்காக 'நாகரி பிரச்சாரிணி சபை' என்ற பெயரில் ஒரு மன்றத்தை விரைவில் அமைக்க வேண்மென்று உறுதிபூண்டனர். பாபு சியாம் சுந்தர்தாஸ் அதன் செயலராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவருடைய உதவியாளராக பண்டிட் இராம் நாராயண் மிஸ்ராவும், சிவகுமார் சிங்கும் நியமிக்கப்பட்டனர். இம்மூவருமே, தம் இறுதிநாள் வரை இந்த

மன்றத்தோடு தொடர்புகொண்டு தொண்டாற்றி வந்ததால், இவர்களை இம்மன்றத்தின் ஸ்தாபகர்கள் என்று அழைத்துப் பாராட்டி வந்தனர்.

தொடக்க காலத்திலிருந்தே இந்த மாணவர்கள் தவறாமல் வாரந்தோறும் கூட்டத்தினைத் தொடர்ந்து நடத்திவந்தனர். அதனால், அளவிறந்த துன்பங்களைச் சந்திக்க நேரிட்டது. புரவலர் எவரும் இலர். ஞாயிறு தோறும் கிடைத்தவற்றைக் கொண்டு கூட்டத்தை நடத்தி வந்தாலும், முயற்சிக்கேற்ற பலன் கிடைக்கவே இல்லை. அப்பொழுது 'பாரத் ஜீவன்' என்ற பெயரில் ஒரு பன்னோக்கு இதழ் இந்தியில் வெளிவந்து கொண்டிருந்தது. அதன் ஆசிரியராக அப்பொழுது புகழ்வாய்ந்த எழுத்தாளர் பாபு கார்த்திக் பிரசாத் கத்ரி இருந்துவந்தார். இந்த இளைஞர் குழாத்திற்கு அவர் பெருந்துணைவராகக் கிடைத்த பிறகு அவர்கட்கு நல்வழியும்,கருத்தும் கிடைக்கலாயின. இருப்பினும்கூட, இந்திமொழி அறிஞராகவும், மக்களிடையே புகழ்பெற்றவராகவும் உள்ள ஒருவரின் ஆசியின்றி, அரவணைப் பின்றி இந்த மன்றத்தை நன்கு நடத்த இயலாதென இந்த இளைஞர்கள் தங்கள் அனுபவத்தில் கண்டுகொண்டனர். காலமும் வீணே கழிந்துகொண்டிருந்தது. இறுதியில் எல்லா சக்தியும் பெற்ற புகழ்வாய்ந்த இலக்கிய கர்த்தா பாபு இராதாகிருஷ்ணதாஸ் பற்றிய விபரம் இவர்கட்குக் கிடைத்தது.

பாபு சியாம் சுந்தர்தாஸ் அவர்களும், கார்த்திக் பிரசாத் கத்ரி அவர்களும் அதிக அளவிற்கு முயற்சியெடுத்துக் கொண்டதன் பேரில் ஆறு மாதம் கழித்து நாகரி பிரச்சாரிணி சபாவின் முதல் தலைவராக பாபு இராதாகிருஷ்ணதாஸ் பொறுப்பேற்றார். அவரது அரவணைப்பில் ஆரம்பத்திலிருந்தே இந்தியின் எதிர்காலம் பற்றி ஆழமாகச் சிந்தித்து ஒரு நிர்மாணத் திட்டத்தை உருவாக்கியது. இந்தியின் வளர்ச்சிக்காக சபை உருவாக்கிய திட்டங்களுள் இடம்பெற்ற பணிகளில் அகராதி, இலக்கணம், மொழி, இதழ்கள் மற்றும் பயண இலக்கியம், இந்தி இலக்கிய கர்த்தாக்களின் வரலாற்று வரிசை, பல்வகைப்பட்ட புதிய நூல்கள் போன்றவற்றை வெளியிட வேண்டுமென்ற பல்வகைத் திட்டங்களும் இடம்பெற்றிருந்தன. இந்தியின் வறட்சிக்கு முடிவு கட்டுவதும், நவீன உலகத்திற்கேற்ப இந்திமொழியை உருவாக்கிவிடுவதுமே இத்திட்டத்தின் உணர்வுபூர்வமான அடிப்படை நோக்காக அமைந்திருந்தது. இருப்பினும், வைராக்கியம் நிறைந்த சாதனைபுரியத்தக்க உறுதியான சங்கல்பம் படிப்படியாக வளர்ச்சியடைந்து வந்தபோதிலும், இலட்சியங்களில்

மட்டும் செல்வந்தராகத் திகழ்ந்த சியாம் சுந்தர்தாஸ் அவர்களிடம் மன்றத்திற்குரிய இடமும் இல்லை, பணப்பற்றாக்குறையும் நீங்கியபாடில்லை.

அவருடைய இல்லமே சபையின் காரியாலயமாகச் செயல்பட்டு வந்தது. ஆண்டு விழாவும் வந்து நெருங்கிக் கொண்டிருந்தது. காசிமாநகரிலுள்ள கர்மைக்கேல் நூலகத்தில் 1894ஆம் ஆண்டு டிசம்பர் 30ஆம் நாள் முதல் ஆண்டு விழா நடந்தது. ஒரு பக்கம் பொருளாதார பற்றாக்குறை; மற்றொரு பக்கம் சபைக்கென நிலமோ, கட்டடமோ இல்லாத குறை. இதற்கிடையே அடுத்தாண்டுக்குரிய புதிய சபைத் தலைவரைத் தேடும் பணியும் வந்து சேர்ந்துகொண்டது. திரு. இராதா கிருஷ்ணதாஸ் அவர்கட்குப் பிறகு இந்தச் சபையை நன்கு கொண்டுசெலுத்துகிற ஆற்றல் வாய்ந்த தலைவர் யார்? என்ற வினாவும் எழத்தொடங்கியது. அவர்கள் இதுபற்றி அதிகம் கலந்தாலோசித்தவண்ணம் இருந்தனர். அந்த நேரத்தில் அரசாங்க கோபத்திற்கும் ஆளாகக்கூடாது என்ற விருப்பமும் அவர்களிடம் இருந்தது. இறுதியாக ஒரு முடிவுக்கு வந்தனர். திரு. இராஜா சிவபிரசாத் 'சிதாரே இந்து' அவர்களைத் தலைவராக்கி விடுவதென்று முடிவுக்கு வந்தனர். ஏனென்றால், அவர் மிகச் சிறந்த பழைய இந்திமொழித் தொண்டர் ஆவார். இவர் ஆங்கில அரசின் அன்பிற்குப் பாத்திரமானவர் மட்டுமல்லர்; பள்ளி ஆய்வாளராகவும் பணிபுரிந்தவர். அவரைத் தலைவராக நியமனம் செய்வதெனச் சபையின் செயற்குழுவும் முடிவு செய்துவிட்டது. திரு. இராதாகிருஷ்ணதாஸ், திரு. கார்த்திக் பிரசாத் கத்ரி, திரு. சியாம்சுந்தர்தாஸ் ஆகிய மூவரும் அவர் ஒப்புதலைப் பெற அவர் வீட்டிற்குச் சென்றனர்.

அவர் இவர்களிடம், "நான் எழுதுவதை விட்டுவிட்டேன்; என் சிந்தனையும் வரண்டுவிட்டது; மேலும், எந்தச் சிக்கலிலும் அகப்பட்டுக்கொள்ள நான் விரும்பவில்லை; என்னை விட்டுவிடுங்கள்" என்று கூறிவிட்டார். மூவரும் நயமாகப் பணிவோடு இன்சொல் பல பகன்று வேண்டி விரும்பிக் கேட்டுக்கொண்டதன் பேரில் சபைத் தலைவராக இருக்க ஒப்புக்கொண்டார். அழைப்பிதழும் அச்சடிக்கப்பட்டுவிட்டது. விழா ஏற்பாடுகளும் மும்முரமாக நடந்துகொண்டிருந்தன. அத் தருணத்தில் காசிமாநகர் முழுவதும் திடீரென ஒரு புயல் வீசத் தொடங்கியது.

காசிமாநகரின் தேசபக்த இளைஞர்கள் பலர் திடீரென, "ஆங்கிலஅரசின் பக்தரை நாகரி பிரச்சாரிணி சபையின்

தலைவராக அமர்த்துவதா?" என்ற கேள்வியை எழுப்பிப் பெரும் ரகளை செய்யத் தொடங்கினர். அந்த இளைஞர்கள் மக்கள் நிறைந்த அவையில் அவரை அவமானப்படுத்துவதென முடிவு செய்து ஒருபோதும் அவர் சபையின்தலைவராக அமர விடுவதில்லையெனவும் முடிவு செய்தனர். இப்படிப்பட்ட ஒரு சிக்கல் வரக்கூடுமென சியாம் சுந்தர்தாஸும் சபையின் அமைப்பாளர்களும் நினைத்துப் பார்த்ததில்லை; பிறர்க்கும் அந்த எண்ணம் தோன்றவில்லை. இத்தகைய பயங்கர சூழ்நிலை தோன்றக்கூடும் என சியாம்சுந்தர்தாஸோ, அவரது தோழர்களோ கற்பனையில்கூட செய்து பார்க்க முடியவில்லை. ஆயினும், சியாம் சுந்தர்தாஸ் இவ்விஷயத்தை தேசிய உணர்வை விட்டுக் கொடுக்கும் விஷயமல்ல என்றே எண்ணினார். தீவிரமாக வளர்ந்துவரும் இந்தப் பிரச்சனையிலிருந்து எப்படி விடுபடுவது என்ற நிலை எல்லோர்க்கும் ஏற்பட்டுவிட்டது. உள்ளார்ந்த ஆர்வமிக்க சிந்தையோடு கேட்டினைத் தவிர்க்க முயலும்போது கட்டாயம் நல்வழி கிடைக்கத்தானே செய்யும்! சந்திரபிரபா அச்சகத்தின் மேலாளர் பண்டிட் ஜகந்நாத மேத்தா அவர்கள் தன் முயற்சியால் ராய்பகதூர் பண்டிட் லட்சுமிசங்கர் மிஸ்ரா என்பவரைத் தேடிப்பிடித்து தலைமைப் பொறுப்பேற்க வைத்ததோடு, திரு இராஜா சிவபிரசாத் 'சிதாரே இந்து' அவர்களும் விழாவிற்கு வராத வண்ணம் சகல ஏற்பாடுகளையும் செய்து முடித்தார்.

பண்டிட் லட்சுமிசங்கரின் தந்தை பண்டிட் இராம் ஜசன் மிஸ்ராதான் மலிக் முகம்மது ஜாயசியின் 'பத்மாவதி' காவியத்தை முதன்முதலாகப் பதிப்பித்தார். எனவே, இலக்கியக்கர்த்தா என்று கூறுவது கூட சரியல்ல; ஒரு இலக்கியவாதியின் மகன் சபையின் தலைவராக்கப்பட்டார் என்று கூறுவதான் சரி. அவர்களது முயற்சியும் நல்வரமானது. திரு. இலட்சுமிசங்கர் மிஸ்ரா பள்ளித் துணை ஆய்வாளராகப் பணிபுரிந்தவர். ஓயிட் என்பவர்தான் மாநில கல்வி இயக்குநராக இருந்தார். மிஸ்ராஜி அந்த இயக்குநரின் அன்பிற்குப் பாத்திரமானவர். இதனால், நாகரி பிரச்சாரிணி சபைக்கு அரசினரின் வாயிற்படியில் நுழையும் உரிமையும் கிடைத்தது; அறிந்தேற்புப் பெறுவதிலும் உதவி கிடைத்தது. இவ்வாறு எல்லாம் சரியாகவே நடந்து முடிந்தது. ஆனால், சபையின் கஜானாவில் பணமும் இல்லை; அதனால், அதன் நிலையும் சரியாக அமையவில்லை. இதற்கிடையில் இந்தியில் புதிய நூல்கள் வெளியிடும் திட்டத்தின் வடிவும் இறுதியாக உருவாக்கப்படுவதற்கான முயற்சியும் நடைபெற்றுக் கொண்டிருந்தது.

மகாராஜா தர்பங்காலட்சுமீஸ்வர்சிங் *125* ரூபாய் அகராதி தயாரிப்பதற்காக அன்பளிப்பாகத் தந்தார். இத்துடன் எதிர்காலத்திலும் இத்தகைய பயனுள்ள பணிகளுக்கு மேலும் உதவுவதாக் வாக்கும் கொடுத்தார். அதே சமயத்தில் காங்க்ரௌலி மகாராஜா, கோஸ்வாமி பாலகிருஷ்ணலால் காசிமாநகர் வந்தார். அவர் இந்திக் கவிதைகளின் இரசிகர் மட்டுமல்லர்; கவிஞர்களை ஆதரித்து வரும் வள்ளலும் ஆவார்.

கோஸ்வாமி துளசிதாசர் எந்தக் கோயிலில் 'விநய பத்திரிகா' என்ற நூலை எழுதினாரோ அதே கோபாலன் கோயிலில்தான் தங்கியிருந்தார். சியாம் சுந்தர் தாஸ் பலமுறை சென்று உதவிபெறும் பொருட்டு பலவாறுமுயன்றார். அவருடன் பாபு ஜகந்நாததாஸ் 'ரத்னாகர்' அவர்களும் சென்றிருந்தார். சபைக்கு ரூபாய் நூறு அன்பளிப்பாகத் தந்தார். நாகரி பிரச்சாரிணி சபைக்கு அன்பளிப்பாகக் கிடைத்த முதற்தொகை இதுதான். ஏனென்றால் மகாராஜா தர்பங்கா தந்த தொகை ஒரு குறிப்பிட்ட அகராதிப்பணிக்காகத் தந்த பணமாகும்.

இப்பொழுது இந்தச் சபையின் சொத்து நூறு ரூபாயாகிவிட்டது. இந்தத் தொடக்கநிலை நன்கு மலர்ந்து வளர்ச்சியுற்று இன்று கிட்டத்தட்ட 50 இலட்சம் ரூபாய் அளவிற்கு வரவு-செலவு உயர்ந்திருக்கிறது. இத்தகைய பயனுள்ள ஆக்கப்பூர்வமான வளர்ச்சிக்கிடையேதான் பாபு சியாம்சுந்தர் தாஸ் அவர்களின் தலைச் செயல் மறைந்திருக்கிறது. இந்தச்சபை அவருடைய இந்திமொழியின் பல்வகை நற்பணிகளுக்குரிய செயற்களமாக அமைந்துவிட்டது.

## செயல் வீரர்

சியாம்சுந்தர் தாஸ் இந்தச் சபையின் வாயிலாக இந்திமொழிக்காக ஆற்றிய பணிகள் அவரை நம்முன் சிறந்த செயல் வீரராகவும், அமைப்பாளராகவும் அறிமுகப்படுத்தியுள்ளது. அவருடைய இந்தப் பண்புகளும் வலிமை மிக்கதாகவும், மாசற்றதாகவும் இருந்ததேயொழிய குறைந்திருக்கவில்லை. *1837*ஆம் ஆண்டு ஆங்கில அரசு வழக்குமன்றத்தில் மாநில மொழிகளையும் பயன்படுத்தலாம் என்ற ஒப்புதல் ஆணையைப் பிறப்பித்தது. வங்காளத்தில் வங்கமொழியும், ஒரிசாவில் ஒரிய மொழியும், குஜராத்தில் குஜராத்தி மொழியும், மகாராட்டிரத்தில் மராட்டி மொழியும் வழக்குமன்ற மொழிகளாயின. ஆனால், ஐக்கிய மாநிலம், பீகார், மத்திய பிரதேச வழக்கு மன்றங்களில் இந்துஸ்தானி என்ற பெயரில் உருது மொழியே இடம்பெற்று

வந்தது. பீகார், மத்திய பிரதேசத்து வழக்குமன்றங்களில் கூட 1881ஆம் ஆண்டிற்குப் பிறகு இந்தி தனக்குரிய இடத்தை அடைந்துவிட்டது. ஆனால், கபீர், சூர்தாஸ், துளசிதாஸ், ஜாயசி, ரஸ்கான், ரஸ்லீன் ஆகியோரின் பிறந்த மண்ணாகிய ஐக்கிய மாநிலத்தில் உருது தான் இடம்பெற்றிருந்தது. மக்கள் இத் தவறின்மீது சர்க்கார் கவனம் கொள்ளுமாறு பலமுறை முயன்றும் கூட யாதொரு பயனும் ஏற்படவில்லை. எப்படி ஏற்படும்? ஆங்கிலேயர்கள் பெருமுயற்சியோடு மொழி வேறுபாட்டை உருவாக்கித் தன் காலடியை நன்கு முன்வைத்து தன் ஆட்சியை நிலைநாட்டிட அதனைத் தக்கத் துணைக் கருவியாகப் பயன்படுத்திக்கொண்டனர்.

நீதியை நிலைநாட்ட சியாம்சுந்தர்தாஸ் தலைமையில் 1894 ஆம் ஆண்டில் ஐக்கிய மாநிலத்தின் கவர்னரை வரவேற்கும் சிறப்புக் கூட்டத்தில் முயற்சி செய்ய முடிவு செய்தனர். ஆனால் கவர்னர் வேறு பணியின் காரணமாக காசிமாநகர் வராமல் போய்விட்டார். ஆயினும், உத்திரப்பிரதேச மக்களின் மொழித் தொடர்பாக நீதி வழங்கக் கேட்டுக்கொண்ட வரவேற்பு மடல் அவரது பார்வைக்கு அனுப்பப்பட்டது. முக்கியத்துவம் வாய்ந்த இதனைப் பொருட்படுத்தாத கவர்னர் ஏதோ சாக்குப்போக்குச் சொல்லித் தட்டிக் கழித்துவிட்டார். அந்த நேரத்தில் அரசு பணிகள் ரோமன் எழுத்து வடிவில் (ஆங்கில லிபியில்) நடைபெற வேண்டுமென்று சிலரால் மேற்கொள்ளப்பட்டது. இதனையும் சபை கடுமையாக எதிர்த்து வந்தது. சியாம்சுந்தர்தாஸ் மூலம் நாகரி பிரச்சாரிணி சபை நாகரி லிபியின் சிறப்பம்சங்கள் தொடர்பாக ஒரு ஆங்கில நூல் எழுதுவித்து வெளியிட்டு அதன் பெருமை யைப் பிரச்சாரம் செய்யத் தொடங்கிற்று. இப்புத்தகத்தின் மூலம் நாகரி லிபிதான் தன் பல்வகைத் தகுதியின் காரணமாக அரசாங்க அலுவல் மொழியாகவும், வழக்குமன்ற மொழியாகவும் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கு உத்தமமாகும் என்ற கருத்தை அனைவரும் உணருமாறு செய்துவந்தது. வருவாய்த்துறை இக்கருத்தினை ஏற்றுத் தம் அலுவலை தேவநாகரி இந்திமொழி மூலம் செய்யத் தொடங்கிற்று.

இதன் பிறகு மாநிலத்திலுள்ள எல்லா மாவட்டங்களுக்கும் சென்று கையெழுத்து வேட்டையில் இறங்கியது. இதன்மூலம் அரசு விரைவில் இந்திமொழியைத் தம் அலுவல் மொழியாக ஏற்கக்கூடும் என்ற நம்பிக்கை ஏற்பட்டது. பண்டிட் மதன்மோகன் மாளவியா அவர்கள் இப்பணிக்குரியத் தலைவராக அமர்த்தப்பட்டு, சியாம்சுந்தர்தாஸும், அவரது சகாக்களும்

செயலாளர்களாகப் பொறுப்பேற்றுப் பணியாற்றத் தொடங்கினர். சுமார் 50,000 மக்களிடம் இந்த வேண்டுகோள் பத்திரத்தில் கையெழுத்து வாங்கினர். 1898ஆம் ஆண்டு மார்ச்சு 2ஆம் நாள் மாநில கவர்னர் அந்தோணி மெக்டனால்டு அவர்களை அலகாபாத்தில் மாளவியா அவர்களின் தலைமையில் நாகரி பிரச்சாரிணி சபையின் பிரதிநிதிக் குழு சந்தித்து வேண்டுகோள் பத்திரத்தை சமர்ப்பித்தனர். மாளவியா அவர்களின் இரண்டாண்டு தவ முயற்சியால் ஆங்கிலத்தில் ஒரு விரிவான கருத்துக்கோவை நிறைந்த நூல் ஒன்று உருவாகியது. அதன் பெயர், "வழக்காடு மன்றத் தன்மையும் தொடக்கக் கல்வியும்" (Court character and Primary Education). இந்த நூலையும் கவர்னருக்குச் சமர்ப்பித்தனர். யாதொரு பயனும் கிடைக்கவில்லை. இறுதியில் வேறு வழியின்றி மாளவியா அவர்களின் தீர்மானப்படி சியாம்சுந்தர்தாஸும், திரு. கிருஷ்ண பலதேவ சர்மாவும் இதற்கெனப் போராட்டம் நடத்த முடிவு செய்தனர்.

பாபுசாஹெப் மாநிலம் முழுவதும் சென்று தேவநாகரி மொழி மீது பக்தி கொண்ட அனைவரையும் ஒன்று சேர்த்தார். எங்கெல்லாம் கவர்னர் செல்கிறாரோ அல்லது அரசு மேல்மட்ட அதிகாரிகள் செல்கின்றார்களோ அங்கெல்லாம் இந்த இந்திமொழியின் சின்னஞ்சிறு தொண்டனாகிய சியாம்சுந்தர்தாஸ் தன் கருத்தை அவர்கள் முன் மிகப்பணிவோடு வெளிப்படுத்திய வண்ணம் இருந்தார். போராட்டமும் படிப்படியாக வளரத் தொடங்கியது. இப்போராட்டப் புகைமண்டலம் மாநிலம் முழுவதும் பரவிவிட்டது. இந்தி வளர்ச்சிக்குத் தடைவிதிக்க விரும்பிய சிலர் இதற்கு மதச்சார்பான வடிவம் வழங்கத் தொடங்கினர். நடைமுறையில் தம் மொழியை நிலைநாட்ட முயன்ற புனிதமான போராட்டம் இந்து-முஸ்லீம் போராட்டமாக வடிவெடுக்கத் தொடங்கியது. ஆனால், மாளவியா அவர்களும், சியாம்சுந்தர்தாஸ் அவர்களும் இது கண்டு தளர்ச்சியடையவில்லை. இத்தொண்டில் மாநிலத்தின் பல இடங்களிலும் இருந்த பார்சி, உருது மொழிப் புலவர்களின் உதவியையும் முயன்று பெற்றனர். ஹைதராபாத் ராஜ்ய மந்திரி ஷம்சுல் உல்மா, மௌல்வி சையத் அலி பில்கிராமி ஆகிய வித்வான்கள் தேவநாகரி மொழிக்குத் துணையாக இருந்தனர்.

தேவநாகரி மொழியைப் பயன்படுத்த வேண்டுமெனக் கேட்டுக்கொண்ட வேண்டுகோள் மடல்கள் நகரந்தோறும் தயாரிக்கப்பட்டு கவர்னரிடம் செல்லத் தொடங்கின. தேவநாகரி மொழியில் இலக்கியங்களைப் படைத்து மக்களிடையே விரிவாகப்

பிரச்சாரம் செய்துவந்தனர். பலதரப்பட்ட இதழ்களும் இந்தப்போராட்டத்திற்குத் துணைபுரிந்து வந்தன. 1899ஆம் ஆண்டு ஏப்ரல் 18ஆம் நாள் இந்தப் புனிதப் போராட்டத்திற்கு ஓரளவு வெற்றியும் கிடைத்தது. இந்திமொழி அரசு மாளிகைக்குள் ஓரளவு செல்லும் உரிமையையும் பெற்றது.

மக்கள் சுயவிருப்பத்தின்படி நாகரி எழுத்தை நீதிமன்றங் களில் பயன்படுத்தும் உரிமை பெற்றனர். வழக்காடு மன்றத் தொடர்பான எந்த மடலும், ஆணையும் இருமொழி வடிவில் மக்களுக்கு அனுப்பவேண்டிய கட்டாயநிலை உருவாகிவிட்டது. ஆங்கிலம் அலுவல் மொழியாக உள்ள காரியாலயங்களைத் தவிர ஏனையவற்றில் இந்திமொழி அறிவின்றி யாரையும் நியமிக்க முடியாத நிலை உருவாயிற்று. யாதேனும் ஓர் அடிப்படையில் அப்படி நியமிக்க நேரிட்டால் ஓராண்டுக்குள் இந்தி மொழிப் பயிற்சியுடையார்க்கு உருது மொழியிலும், உருது மொழிப் பயிற்சியுடையார்க்கு இந்திமொழியிலும் பயிற்சிபெற வேண்டிய நிலை கட்டாய மாக்கப்பட்டது. இவ்வாறு போராட்டத்தின் தாக்கம் இந்திய வைசிராய் அவர்கள் வரைக்கும் சென்று நல்ல பயனைத் தோற்றுவித்துக் கொண்டிருந்தது.

அரசினரிடமிருந்து இதற்குரிய அனுமதி கிடைத்தவுடன் சபை அதனை மேலும் விரிவாக்கும் நோக்கோடு வழக்குமன்றத்தில் தம் சார்பாக இந்தியில் விண்ணப்ப மடல் எழுதித் தருவதற்கெனப் பல எழுத்தர்களை நியமித்தது. வழக்குமன்றத்தில் பயன்படும் எல்லாப் படிவங்களையும் இந்தியில் அச்சடித்து விநியோகம் செய்யத் தொடங்கியது. வழக்குமன்றத் தொடர்பான அகராதி தயாரித்தது. வழக்கு மன்றத்தில் இந்தியைத் தம் அலுவல் மொழியாக விரும்பியேற்றுப் பணிபுரிந்தோர்க்குத் தகுதியின் அடிப்படையில் பரிசுகள் வழங்கும் திட்டமும் தீட்டிச் செயற்படுத்தி வந்தது. இந்தி வளர்ச்சிக்குரிய இத்தகைய பயனுள்ள போராட்டம் சியாம்சுந்தர்தாஸ் அவர்களின் கடமை தவறா பண்பினால் வெற்றிபெற்றது எனலாம். மாமனிதர் மாளவியாவின் ஆதரவும் துணைசெய்தது.

மொழியை முன்வைத்து உருவான இந்தி மொழிக்குரிய போராட்டத்தின் முதல் வெற்றிக்கு அடிப்படையாக இருந்து துணைசெய்தது இந்து-முஸ்லீம் நல்லுணர்வேயாம். அத்தகை யோரை ஒன்றுதிரட்டும் நற்பணிகூட பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்களையே சார்ந்திருந்தது. அக்காலத்தில் இத்தகைய போராட்டம் வெற்றிப் பெற்றிராவிட்டால், நாட்டின் ஆட்சி மொழியாக என்ன, மாநில மொழியாகக்கூட உருவாவதில்

இந்திமொழிக்குப் பெருந்தடை உருவாகியிருக்கக்கூடும். சியாம்சுந்தர் தாஸ் தலைமையில் தொடங்கப்பெற்ற இந்தப் போராட்டத்தின் வெற்றி மாநில அளவில் கிடைத்ததாகக் கருதப்பட்டாலும்கூட, நாடு முழுவதும் இந்தியைப் பரப்பி, நாட்டின் ஆட்சிமொழியாக உருவாக்கிவிட வேண்டுமென்ற எண்ணம் அன்றே, அவர் மனதில் உருவாகிவிட்டதெனலாம். இதன் காரணமாகத்தான் 1910ஆம் ஆண்டு நடைபெற்ற நாகரி பிரச்சாரிணி சபையின் கருத்தரங்கிற்கு நாட்டிலுள்ள எல்லா இந்திமொழி அன்பர்களையும், இந்தி இலக்கியக் கர்த்தாக்களையும் வரவழைத்து சபையின் தலைவராகத் திகழ்ந்த மாமேதை மாளவியா அவர்களின் தலைமையில் காசிமா நகரில் சிறப்புடன் நடத்தினர்.

பிற்காலத்தில் பிரயாகையில் நன்கு, வளர்ந்து பெரிதாகிவிட்ட 'இந்தி சாகித்ய சம்மேளனம்' கூட நாகரி பிரச்சாரிணி சபையின் மடியில் தவழ்ந்து வளர்ந்ததுதான். அந்தச் சம்மேளனத்தின் தலைவராக பாபு சியாம்சுந்தர் தாஸ் 1915ஆம் ஆண்டு நியமிக்கப்பட்டார். இந்தச் சம்மேளன் இந்திப் பிரச்சாரத்திற்கு நல்ல தொண்டாற்றியது. ஆயினும்கூட, அதனை ஈன்றெடுத்தவள் என்ற முறையில் பெருமை பெற்றது நாகரி பிரச்சாரிணி சபைதான். இச்சபையின் கையால் உருவானதால், இதனை அச்சம்மேளனத்தின் தந்தையாகவே கருதவேண்டியுள்ளது. இந்நோக்கில் பார்த்தால் பாபு சியாம்சுந்தர் தாஸ் இந்த 'இந்தி சாகித்ய சம்மேளன'த்தின் பாட்டன் ஆவார். சபையை அவர் கடைசிமூச்சு உள்ளவரைத் தன் உரிமையுள்ள மகளாகவே கருதி வந்தார். அதன் செல்வம் அவருக்குத் தீண்டப்படாததாகவே இருந்தது.

## மாபெரும் இந்தி நூலகத்தை நிறுவியவர்

எந்த ஆண்டு நாகரி பிரச்சாரிணி சபை உருவாக்கப்பட்டதோ, அதே ஆண்டு, அதாவது 1894ஆம் ஆண்டு ஒரு நூலகம் 'நாகரி பண்டாரம்' என்ற பெயரில் பாபு சியாம்சுந்தர் தாஸ் தலைமையில் தோற்றுவிக்கப்பட்டது. அது ஒரு கன்னி முயற்சியாகவே இருந்தது. தொடக்கத்தில் மாணவச்சமூகம் தமக்குள் நூல்களைக் கொடுத்து வாங்கும் பணியே நடைபெற்று வந்தது. படிப்படியாக சியாம்சுந்தர் தாஸ் அவர்களின் நன் முயற்சியால் நூலகத்திற்குத் தேவைப்படும் நூல்கள் கிடைக்கத் தொடங்கின. பலரிடமிருந்து இதழ்களும் - பத்திரிக்கைகளும்கூட இலவசமாகவே வரத் தொடங்கின. அளவற்ற முயற்சி செய்தும்கூட கற்பனையில் நினைத்திருந்தது கைக்கூடவில்லை. 1906ஆம் ஆண்டு

வரை எப்படியோ நூலகம் நடத்தப்பட்டு வந்தது. ஆனால், சியாம்சுந்தர்தாஸ் கற்பனையோ, அதை இந்தி மொழிக்குரிய முதற்தரமான சிறப்பு வாய்ந்த நூலகமாக உருவாக்கிவிட வேண்டுமென்பதேயாகும். நம் நாட்டில் மட்டுமன்று; உலகிலேயே கற்பதற்கும், ஆய்வுப்பணிக்கும் உரிய மிகச்சிறந்த மையமாக உருவாக்கிட முடியுமென்ற எண்ணமும் இருந்தது.

அந்நாளில் அனுமான் செமினரி ஸ்கூல் மேற்பார்வையில், 'ஆரிய பாஷா புத்தகாலயம்' என்ற பெயரில் ஒரு நூலகம் காசிமாநகரில் நடத்தப்பட்டுவந்தது. அதில் கிட்டத்தட்ட 2000 நூற்கள் . இருந்தன. ஸ்ரீகதாதர்சிங் 1884இல் மிர்ஜாபுர் நகரில் இந்தப் புத்தகாலயத்தை நிறுவியிருந்தார். அவர் இதற்கு, 'பாரத் புத்தகாலயம்' எனப் பெயர் வைத்திருந்தார். அவருக்கு காசி மாநகருக்கு மாற்றம் ஏற்பட்டபொழுது அந்தப் புத்தகாலயத்தையும் தம்மோடு எடுத்துக்கொண்டு வந்துவிட்டார், அவர் அதனை அனுமான் செமினரி ஸ்கூல் மேற்பார்வையில் ஒப்படைத்திருந்தார். அந்த நூலகத்தைத் தக்க முறையில் மேற்பார்வையிட எந்த முறையான ஏற்பாடும் செய்யாதிருந்ததால் மிகக் கேவலமான நிலையில் இருந்தது. இதற்கிடையில் ஸ்ரீகதாதர்சிங் அவர்களுக்கு இடாவா நகருக்கு மாற்றம் ஏற்பட்டுவிட்டது. அவர் பாபு சியாம்சுந்தர்தாஸின் நண்பர் ஆவார்.

அவரிடம் மிகப்பணிவாக இந்தி மொழியின் நலங்கருதி அந்த நூலகத்தை நாகரி பிரச்சாரிணி சபைக்குத் தானமாகத் தந்துவிட வேண்டுமெனக் கேட்டுக்கொள்ளப்பட்டது. அந்த நூலகத்திற்கு 'ஆரிய பாஷா புத்தகாலயம்' எனப் பெயர் வைத்து சபையின் 'நாகரி பண்டார'த்தையும் இத்துடன் இணைத்துவிட வேண்டுமென்ற நிபந்தனையின் பேரில் அவர் இவ்வேண்டுகோளை ஏற்றுக்கொண்டார். இந்திமொழி அப்பொழுது ஆரியர்களிடையே ஆரியமொழி என்ற பெயராலேயே அழைக்கப்பட்டு வந்தது. இவ்வாறு இந்தி மொழிக்குரிய மிகப்பெரிய நூலகம் நிறுவப்படுவதற்கான பணிகள் தொடங்கப்பட்டுவிட்டன. பிறகு ஆரிய பாஷா புத்தகாலயத்தில் உள்ள நூல்களின் செய்திகளின் அடிப்படையில் வகைப்படுத்தும் பணி நூலக அறிவியலில் இடம்பெற்ற 'டெவி' முறையில் செய்யப்பட்டது. இத்துடன் முயன்று தேடிப்பெற்றுவரும் கையெழுத்துப் பிரதிகளின் எண்ணிக்கையால் இந்நூலகத்தின் செல்வம் மேலும் அதிகரிக்கத் தொடங்கியது. அதன்பிறகு ஆச்சாரிய மகாவீர்பிரசாத் துவிவேதி அவர்களின் நூல்கள் சபையின் ஆரிய பாஷா புத்தகாலயத்திற்குக் கிடைத்தன. ஜகந்நாத்தாஸ் 'ரத்தனாகர்' என்பவரிடமிருந்தும்,

இராம் நாராயணன் மிஸ்ர என்பவரிடமிருந்தும் நூல்கள் தானமாகக் கிடைத்தன. 'அக்ஞேய்' அவர்களுடைய தந்தையாகிய புகழ்பெற்ற புதைபொருள் ஆய்வுத்துறை அறிஞர் ஸ்ரீ ஹீராநந்த சாஸ்திரி அவர்களுடைய நூல்களும் சபைக்குத் தானமாகக் கிடைத்தன. மிகச்சிறப்பு வாய்ந்த கையால் எழுதப்பட்ட பற்பல நூல்கள் ஸ்ரீ மாயா சங்கர் யாக்ஞிக் அவர்களிடமிருந்து ஆரிய பாஷா புத்தகாலயத்திற்கு கிடைத்தன. ஒருபுறம் நூல்களும், கையெழுத்துப் பிரதிகளும் எண்ணிக்கையில் வளர்ந்த வண்ணம் இருந்தன; மற்றொருபுறம் நூலகத்திற்கு இந்திமொழியின் மிகப்பெரிய இலக்கியக் கர்த்தாக்களின் உருவப்படங்களும் ஒன்றன்பின் ஒன்றாகவந்து அலங்கரிக்கலாயின. மிகப்பழைமை வாய்ந்தவையும், அக்காலத்திற்குரியதுமான இதழ்களும், நாளேடுகளும் முறைப்படுத்தப்பட்டுக் கோவைப்படுத்தப்பட்டன. இவ்வாறு சபையில் சியாம்சுந்தர் தாஸ் அவர்களின் பெரு முயற்சியால் இன்று உலகின் மிகப்பெரிய இந்திமொழிக்குரிய முழுமையான நூலகம் என்ற புகழ்பெற்ற நூலகம் உருவாயிற்று எனலாம். இஃது ஆய்வாளர்களின் தீர்த்தஸ்தலமாகத் திகழ்ந்து வருகிறது.

## சபைக்குரிய கட்டிடம் கட்டுதல்

இவ்வாறு இந்திமொழியின் நலம் நோக்கி, சியாம்சுந்தர் தாஸ் செய்துவந்த பணிகள் மிகப்பெரியதாக இருந்தும்கூட, சபைக்கென ஒரு கட்டிடம்கூட இல்லை. சபையின் செயல்முறைகள் வளரவளர இந்த எண்ணம் அவரைப் பெரிதும் தாக்கத் தொடங்கியது. இன்று நாகரி பிரச்சாரிணி சபைக் கட்டிடம் அமைந்துள்ள பகுதி அன்றைய காசிமாநகரின் கும்பினியாருக்குச் சொந்தமான பூந்தோட்டத்திற்கு மேற்குப்பக்கத்தின் நிலப்பகுதியாக அமைந்திருந்தது. அதனை முறையாகப்பெறும் அயரா முயற்சி 1900ஆம் ஆண்டு தொடங்கப்பெற்றது. இறுதியாக, புகழ்பெற்ற அறிஞர் கிரீவ்ஸ், இந்திமொழித் தொண்டர் ரெவரெண்ட் எட்மண்ட், கோவிந்ததாஸ் ஆகியோரின் முயற்சியால் 180 அடி நீளமும் 138 அடி அகலமும் கொண்ட நிலப்பகுதி, நகரில் அமைந்திருந்த கும்பினியாரின் பூந்தோட்டப்பகுதியில் கிடைத்தது. அதில் ஒரு மாடிக்கட்டிடம் 1904ஆம் ஆண்டு கட்டி முடிக்கப்பட்டது, ஆயினும், அது போதாத நிலையையே உருவாக்கி வந்தது.

மற்றொரு மாடிக்கட்டிடம் அமைக்க ஒரு லட்சத்து அறுபத்து மூன்றாயிரத்து நானூறு ரூபாய் தேவைப்பட்டது.

இப்பணிகூட சியாம்சுந்தரதாஸ் அவர்கள் மூலமே நிறைவடைந்தது. உடனிருந்த மற்றவர்களின் மனமார்ந்த உதவியும் அவருக்குக் கிடைத்தது. தொடர்ந்து 23 ஆண்டுக்காலம் இடைவிடாத பெரு முயற்சியால் இப்பணி 1927இல் முடிவுற்றது. இதுவும் தேவைக் கேற்ப அமையவில்லை. பிறகு, காசிமாநகரின் புகழ்பெற்ற கனவான் ராய்கிருஷ்ணன் அவர்களின் தயவால் சபையின் வடபகுதியில் உள்ள நிலப்பகுதியும் கிடைத்தது. ராய்கிருஷ்ணன் அவர்கள் பண்டிட் ஜவாஹர்லால் நேரு அவர்களின் நண்பரும், காசிமாநகரின் புகழ்பெற்ற பிரபுவர்க்கப் பரம்பரையைச் சார்ந்த செல்வந்தரும் ஆவார்.

பண்டிட் மதன்மோகன் மாளவியா புதிய மன்றத்திற்குரிய அடிக்கல் நாட்டினார். அப்பொழுது சபையின் தலைவராக பாபு சியாம்சுந்தர் தாஸ்தான் இருந்தார். அவர் இருக்கும்வரை சபைக்குரிய தேவையான பிரதானக் கட்டிடம் பூர்த்தியாகி விட்டிருந்த போதிலும், தொடர்ந்து அதன் விஸ்தரிப்பிற்கான அயராத முயற்சியும் மேற்கொள்ளப்பட்டு வந்தது. இத்தகைய செலவுமிக்க பகீரத பிரயத்தனப் பணிக்கு அந்தக்காலத்தில் மக்களிடமிருந்து உதவி பெறுவதென்பது சாதாரண விஷயமன்று.

பாபுசாஹெப் அவர்கள் வாழ்நாள் முழுவதும் வாடகை வீட்டிலேதான் வசிந்துவந்தார். தமக்குரிய செல்வத்தையும், வணிகத்தையும்கூட இந்திமொழியின் மலரடியிலேயே சமர்ப்பித்துவிட்டார். அவர் நினைத்திருந்தால், தமக்கென வீடு கட்டிக்கொண்டிருக்கலாம். ஆனால், அப்படி செய்து கொள்ள வில்லை. எந்த வீட்டில் அவர் குடியிருந்தாரோ, அங்கு அவர் நினைவாகப் பதித்த பளிங்கு நினைவுச் சின்னத்தைக்கூட, வீட்டுக்காரர் பிறகு அகற்றி விட்டார்! என்னே அவரது கருணையும் விசுவாசமும்! ஆனால், இந்திமொழிக்காக இத்தகைய கம்பீரம் வாய்ந்த கோயில் போன்ற ஒன்றை முயன்று உருவாக்கி னாரே, அதுதான் அவருடைய புனிதமான புகழ்வாய்ந்த இளமை நிறைந்த, என்றும் அழிக்கவொண்ணா சாட்சியாகத் திகழ்ந்து வருகிறது.

## லட்சியப் பாதையின் பயணி

இன்று பொதுநிறுவனங்களை உருவாக்குவோர் அதனைத் தம் வசத்திலேயே வைத்துக்கொள்ள வேண்டுமென்று விரும்புவோரே அதிகம். ஆனால், சியாம்சுந்தர் தாஸ் இதற்கு மாறுபட்டவராவர். நாட்டில் எங்கெல்லாம் மதிநுட்பம், சக்தி அல்லது செல்வம் நிறைந்திருக்கிறதோ, அவற்றையெல்லாம்

சபையோடு உறவுகொண்டுவிடுமாறு சியாம்சுந்தர்தாஸ் செய்துவிடுவார். அதுமட்டுமன்று; அதன் பயன் முழுவதும் சபையின் நன்மைக்கே போய்ச் சேருமாறும் செய்துவிடுவார். அவர் காலத்தில் வாழ்ந்த நாட்டின் எல்லாப் பெரியோர்களுடைய தொடர்பும் நாகரி பிரச்சாரிணி சபையோடு இருந்து வந்ததெனலாம். திலகர் முதலாக சுந்தர்லால் வரை; மாளவியா முதல் காந்திஜி வரை எல்லோரும் சபையோடு தொடர்பு கொண்டிருந்தனர். பாபுசாஹெப் மாநில அளவில் இருந்த இந்தி மொழியை சபையின் வாயிலாக நாட்டின் தேசிய மொழிநிலைக்கு கொண்டுசென்று அமரவைத்தார். பாரத நாட்டின் பிறமொழிப் பண்டிதர்கள் அனைவரும் சபையின் வாயிலாக இந்திமொழியுடன் நெருங்கிய தொடர்பு கொள்ளச் செய்தார்.

இன்று மக்கள் தம் சுயநலத்தின் பொருட்டு, தம் தனித் தன்மையின் பாதிப்பால், ஒரு நிறுவனத்தின் தற்காலிக, மிகச் சாதாரண நன்மைக்காகத் தம் கொள்கையை விட்டுக் கொடுத்து விடுவதைக் காணமுடிகிறது. ஆனால், பாபு சியாம்சுந்தர்தாஸ் எந்தச் சூழலிலும் தம் கொள்கையை விட்டுக் கொடுத்தவரல்லர். அவர் அழுத்தமான இலட்சிய நிர்வாகியாகவும், தன்மானம் நிறைந்த தூய தொண்டராகவும் திகழ்ந்தார். நாட்டின் மிகப்பெரிய தலைவராக இருந்தால் என்ன; சரஸ்வதியின் மைந்தன் போன்ற பேரறிஞராக இருந்தால் என்ன? யாருக்கும் அவர் தலை வணங்கியது கிடையாது. இதனால், அவர் எவர்க்கும் கட்டுப் படாதிருந்தவர் என்று கூறிவிடக்கூடாது; நற்செயலுக்காகத் தலை வணங்கியவர் மட்டுமல்லர்; அதற்காக எந்தத் துன்பத்தையும் பொறுத்துக்கொண்டவராவர். அவர் தேவை ஏற்பட்டபோது நஞ்சையும் குடித்தார்; ஆனால் தம் இலட்சியத்தை மட்டும் விட்டுக்கொடுக்கவில்லை. அதற்காக அவர் வழிகாட்டியாக மட்டுமன்று; அனைத்தையும் உருவாக்கும் செயல் வீரராகவும் திகழ்ந்தார்.

அவர் இந்திமொழியைத் தேசியத்தின் குரலாகவும், நாட்டை முழுமையாக இணைக்கும் பாலமாகவும் கருதியிருந்தார். இந்த உத்தேசத்தை முன்வைத்து இந்தி மொழிக்காகப் பாடுபட்டார். பண்பாட்டை அடிப்படையாகவும், தனித்தன்மையாகவும் கொண்ட தேசிய எண்ணவோட்டம் நிறைந்த மனிதராகத் திகழ்ந்தார். நாகரி பிரச்சாரிணி சபையில் காங்கிரஸ் கட்சியில் தொண்டாற்றிய அறிஞர்கள் ஏராளமாக இருந்தனர். புரட்சியாளர்கள் கூடத் தம் பெயரை மாற்றியமைத்துக் கொண்டு சபையின் மூலம் பாதுகாப்பு பெற்று பயமின்றித் தம் தேசத்தொண்டினைச் செய்துவந்தனர்,

மிகப்பெரிய புரட்சியாளராகக் கருதப்பட்ட பரமானந்தம் அவர்கள்கூட இந்தச் செய்திக்குத் தக்கச் சான்றாக இன்றும் விளங்குகிறார். இந்தி இலக்கியம் மானுடநலம் போற்றி வளரவேண்டுமென எண்ணிய அவருடைய பார்வை, நாட்டின் அடிப்படையான மூலாதாரச் சம்பந்தப்பட்டதாக அமைய வேண்டுமென்ற தூய்மையான எண்ணமும் தொலைநோக்குக் கொண்டதாகவும் அமைந்திருந்தது எனலாம்.

எப்பொழுது இந்துஸ்தானிப் போராட்டம் மிகப்பெரிய அளவில் நாடு முழுவதும் பரவி நடக்கத் தொடங்கிற்றோ, அப்பொழுதே இந்திமொழிப் போராட்டத்திற்கென ஒன்றாக இணைந்த இலக்கியக்கர்த்தாக்களில் நம் சியாம்சுந்தர்தாஸின் பங்குதான் மிகச்சிறப்பாகவும், நேர்த்தியாகவும் அமையப்பெற்றுப் பயன்தரத்தக்கதாக இருந்தது. 1939ஆம் ஆண்டு இந்தி சாகித்ய சம்மேளன் கருத்தரங்கு காசிமாநகரில் நடந்தபோது, அங்கு வருகைபுரிந்த தேசரத்னம் டாக்டர் ராஜேந்திர பிரசாத் இந்துஸ்தானிக்கு ஆதரவு திரட்டும் நோக்கோடுதான் வந்தார். காந்தியடிகளின் தீர்மானத்தின்படி இந்திமொழி ஆதரவாளர்களை இந்துஸ்தானி பக்கம் கொண்டு வந்துவிட வேண்டுமென்ற முனைப்போடுதான் வந்தார். ஆனால், சியாம்சுந்தர்தாஸின் அறிவார்ந்த தர்க்கத்தைக் கேட்டபிறகு அவரைச் சத்தியத்தின் பக்கம் மாற்றிவிட்டதோடு, அன்றுவரை இருந்துவந்த சிறிதளவான தடையும்கூட அவரது நன்முயற்சியால் சரிசெய்யப்பட்டது. பிற்காலத்தில் ராஜேந்திர பிரசாத் அவரது மொழிக் கொள்கைதான் இந்தியாவில் ஏற்கத் தக்கதெனக் கருதினார்.

இன்று வழக்குமன்றம் முதல், மக்களவை வரை; வீடு முதல் ஐ.நா. சபை வரை இந்திமொழியின் குரல் எதிரொலித்துக் கொண்டிருக்கிறது. இதற்கு பாபு சியாம்சுந்தர்தாஸின் கடும் முயற்சியெனும் ஊதுகுழல் பெருந்துணை புரிந்ததென்பதை யாரும் மறந்துவிட முடியாது. அவர் 1915ஆம் ஆண்டு பிரயாகையில் இந்தி சாகித்திய சம்மேளன் மகாநாட்டில் தலைமையேற்று ஆற்றிய சொற்பொழிவே அதற்குச் சான்றாகும். இதோ அவர்தம் நற்குரலில் தொனித்த உணர்ச்சிப் பிழம்புகள்:-

> "என்ன! தாங்கள் எப்பொழுதாவது தூயமனத்தோடு, 'தாய்; தாய்நாடு; தாய்மொழிக்' கென நாமும் கொஞ்சமாவது கடன்பட்டிருக்கிறோமா? இல்லையா என்று எண்ணிப் பார்த்ததுண்டா? அந்தத் தாய், உமக்கு உயிர் கொடுத்தவள்; அந்தத் தாய்நாட்டின் மடிமீதுதான் நாம் ஓடியாடி விளையாடி, உண்டு

கொழுத்து ஆற்றல் பெற்றோம். ஆனால், தாய்மொழியோ! நமக்குரிய நல்லுணர்வை வெளிப் படுத்தத் தேவையான ஆற்றலைத் தந்து இவ்வுலக வாழ்வில் நலம்பல பெறுமாறு செய்திருக்கிறது, யாரிடமிருந்து இத்தனை நலம்; நமக்குப் பரிசாகக் கிடைத்திருக்கிறதோ, அதற்கு; அந்தத் தாய்மொழிக்கு நாம் செலுத்த வேண்டிய கடமைகள் உண்டா?! இல்லையா?!

அன்புச் சகோதரர்களே! எழுவீராக! சோம்பலை விட்டொழித்து எழுவீராக! தோளினை உயர்த்தி நம் தாய்மொழிக்குரிய தொண்டு செய்வதில் தீவிரம் காட்ட வாரீர்! தாயிடம் பட்டக் கடனைத் தீர்த்துக் கொள்ள வாரீர்! உலகிற்குச் சான்றாகத் திகழ்வீராக! தாய்மொழித் தொண்டில் உமது முத்திரையைப் பதித்துச் செல்லவும்.

ஆனால், இந்தப்பணி எளிதான ஒன்றன்று; வாள்முனையில் நடந்து செல்வதற்குச் சமமானது என்பதை நினைவிற் கொள்ளவும். இதுமட்டுமன்று! அற்பர்கள், கீழ்த்தரமான புத்தியுடையோர், பிடிவாத குணமுடையோர், குற்றங்காண்போர், பொறாமைக் காரர் முதலானோர் உம்மைத் தூற்றத்தான் செய்வர்; உம்மை கேலியும், கிண்டலும் செய்வர்.

ஆயினும், போற்றுவோர் போற்றட்டும்; புழுதி வாரித் தூற்றுவோர் தூற்றட்டும். நீவிர் யாதொரு சலனமுமின்றிச் செயல்பட வாரீர்! நமது இலட்சியம் நிறைவேற நன்கு முயலுவோம் என உறுதி கொள்வீர்! பல்லாண்டு வாழ நேரிடினும் சரி; அல்லது, இன்றே உயிர் போயினும் சரி; பிறர் தூற்றினாலும் சரி; போற்றினாலும் சரி; திருமகளின் கடைக்கண் பார்வை கிடைத்தாலும் சரி; வாழ்நாள் முழுவதும் தரித்திரம் தோய வாழ நேரிட்டாலும் சரி! யாரும் நமக்குச் செவிசாய்க்காவிடினும் சரி! நம்மிடமுள்ள அனைத்தையும் இழக்க நேரிடினும் சரி; நம் செயல் கண்டு பரிதாபப் படினும் சரி; மௌனமாக - மன உறுதியோடு - நம் பணியை முழுமையாக முடித்துக்காட்டும் செயலில் ஈடுபட வாருங்கள்!

நம் தனிப்பட்டக் கொள்கையைத்தான் பின்பற்றுவேன் என்பார் போய்ச் சேருக! செயல் வீரர்களே! உங்கட்கு வெற்றி உறுதி! வெற்றியுடன் உங்கள் பணி முடியும். இறுதிக்காலத்தில், 'உலகை உருவாக்கிய இறைவன் தங்கட்குத் தந்த உடலால், வாழ்வால் தகுதிவாய்ந்த ஒன்றைப் பயனோடு பயன் படுத்திப் பெருமை பெற்றோம்' என்ற மனநிறைவு ஏற்படுவதோடு அன்னைக்குச் சேவைசெய்து அவள்வழி வந்தக் கடனைத் தீர்க்கமுடிந்ததென்ற நிறைவும் பெறுவீராக!"

இவ்வாக்கியங்களிலே சியாம்சுந்தர்தாஸ் அவர்களுடைய வாழ்க்கை ரகசியமும், தத்துவமும் நிறைந்திருப்பதைக் காணலாம். 'ஊருக்குத்தான் உபதேசம் நமக்கன்று' என்ற கொள்கையில் அவருக்கு நம்பிக்கை இருந்ததில்லை. அவரது வாக்கினில் அற்புதமான தெளிவு இருந்தது. கடல் மடை திறந்தாற்போல அவர் பேசியபோது அனைவரும் மந்திரத்திற்கு கட்டுண்ட மக்களைப்போல இருந்து கேட்டனர். ஏனெனில் அவரது திடமான உறுதிமொழி மரணத்தை வெல்லும் நன்மொழியாகப் பிரகாசித்தது. பிறர் எதைச் செய்ய வேண்டுமென அவர் விரும்பி னாரோ, அதை வாழ்நாள் இறுதிவரைத் தாமும் செய்துவந்தார். இவர், தம் கடமையை நிறைவாகச் செய்த ஒரு முழு மனிதராகத் திகழ்ந்ததோடு தன் வாழ்நாள் முழுவதும் இந்தியின் மறுமலர்ச்சிக் குரிய ஆக்கப்பூர்வமான வழிமுறைகளைச் சுட்டிக்காட்டும் அறிவாலயமாகத் திகழ்ந்தார்.

## குருவிற்குக்குரு

அவர் இவ்வாறு இந்திக்குப் பல்வகைப்பட்ட செயல்களைச் செய்து முடித்ததன்பேரில் பண்டிட் மதன்மோகன் மாளவியா அவர்கள் காசி இந்து பல்கலைக் கழகத்தை உருவாக்கி யவுடனேயே, அதன் இந்திமொழித் துறையின் தலைவராக இவரை நியமித்தார். இதற்கு முன்பு நாட்டின் எந்தப் பல்கலைக் கழகத்திலும் இந்திமொழியில் முதுகலை வரைக் கற்பிக்கும் நிலை உருவாக்கப்படவில்லை. நாட்டில் எவரும் இந்திமொழியைக் கொண்டு முதுகலைப் பட்டம் பெற இயலாத நிலையே இருந்து வந்தது. ஆனால், ஆங்கில இலக்கியத்தில் மட்டும் பி.ஏ. பட்டதாரியாக இருந்தவரிடம் இந்தக் கடினமான பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது.

பாபு அவர்கள் தம் பணியைச் சிறப்புடன் ஆற்ற அறிஞர் குழு ஒன்றை அமைத்து தகுதிவாய்ந்த இந்திமொழி ஆசிரியர்களைத் தேடலானார். அவர்களே, இராமச்சந்திர சுக்லா, அயோத்யாசிங் உபாத்தியாய் 'ஹரிஔத்', லாலா பகவான்தின், மற்றும் கேசவ பிரசாத் மிஸ்ரா ஆகியோர் ஆவர். இராமச்சந்திர சுக்லா அவர்கள் புகுமுக வகுப்பு தேர்ச்சிப்பெற்று, பயிற்றிபெற்ற ஓர் ஓவிய ஆசிரியராகப் பணிபுரிந்தவர். 'ஹரிஔத்' அவர்கள், ரெவின்யூ இன்ஸ்பெக்டர். அதாவது, வருவாய் ஆய்வாளருக்குரிய தேர்வில் தேர்ச்சிப் பெற்றிருந்தார். லாலா பகவான்தின் அவர்கள் உருது - பாரசிக மொழியில் சிறப்புத் தேர்வு எழுதித் தேர்ச்சிப் பெற்றிருந்தார். கேசவ் அவர்கள் சமஸ்கிருதப் பண்டிதர் ஆவார். இவ்வாறு, உயர்தொடக்கக் கல்வித் தேர்வும், உயர்நிலைப் பள்ளித் தேர்வும் எழுதித் தேர்ச்சிபெற்றவர்கள்தான் பட்டப் படிப்பிற்குரிய வகுப்பிற்கும், முதுகலைப் படிப்பிற்குமுரிய வகுப்பிற்கும் உரிய இந்திமொழி ஆசிரியர்களாகப் பல்கலைக் கழகத்தில் நியமிக்கப்பட்டனர். இந்திமொழியின் பெருமையை நிலைநாட்டப் பாடுபட்ட இத்தகைய பெரியோர்கள், இன்றைய காகிதப் பட்டம் பெறும் சமூகத்தில் பிறந்திருந்தால், காசி இந்து பல்கலைக் கழகத்தில் சிறுபணியாளர் வேலைகூட கிடைத்திருக்காது என உறுதியாகக் கூறலாம்.

அந்தச் சமயத்தில் காசி இந்து பல்கலைக் கழகத்தின் பிற துறைகளில் பணிபுரிந்துவந்த பேராசிரியர்களும், விரிவுரையாளர்களும் தத்தம் துறைக்குரிய பாடத்திட்டத்தின்கீழ் முதுகலைப் பட்டம் பெற்றவர்களாகவும், நாடறிந்த அறிஞர்களாகவும் இருந்தனர். ஆனால், இந்திமொழியின்மீது அதிகப் பற்றுக் கொண்டிருந்த மாளவியா அவர்களால் தொடங்கப்பட்ட இந்தி மொழித் துறை இத்தகைய தகுதியைப் பெறாது, அனைத்திலும் இரண்டாந்தரமாகவே கருதப்பட்டு வந்தது. ஆயினும், இத் துறையினர் நம்நாட்டில் இந்தியின் மேற்படிப்பிற்காக ஆற்றிய பணி இருக்கிறதே, அது வாமனாவதாரம் செய்த அற்புதம் போல அமைந்துவிட்டதெனலாம். எந்தத் துறைக்கு ஒரு புத்தகங்கூட கிடையாதோ, எந்தத் துறையில் உயர்கல்வி கற்கும் எண்ணம் கிராமப்புறச் செயலாகக் கருதப்பட்டதோ, கருத்தை நிறைவாக வெளியிட யாரிடம் மொழித்திறன் இல்லையோ, அத்தகைய ஒரு மொழித்துறைக்குத் தலைமைப் பொறுப்பேற்றுத் தொண்டு புரிவதென்பது சாதாரண செயலாகாது.

சியாம்சுந்தர்தாஸ் அத்தகைய துறையின் ஆசிரியராக மட்டும் விளங்கவில்லை. அத்துறையின் வாயிலாக உலக அளவில் இந்திமொழி கற்பிக்கும் கல்விக்குரிய கௌரவத்தை நன்கு உயர்த்தும் தொண்டராகவும் விளங்கினார். இன்று வெளிநாட்டில்கூட கிட்டத்தட்ட நூறு பல்கலைக் கழகங்களில் இந்தி கற்பிக்கப்பட்டு வருவதற்கு இத்தொண்டே அடிப்படையாக அமைந்தது. நாள்தோறும் இப்பணி மேலும் நன்கு வளர்ந்து வருகிறது. இன்று ஆயிரக்கணக்கான ஆசிரியர்களால் பல்கலைக் கழகத்தில் இந்திமொழி கற்பிக்கப்பட்டு வருகிறது. இலட்சக் கணக்கானோர் கற்றும் வருகின்றனர். இத்தகைய இந்திக் கல்வித் திட்டத்தின் படைப்பாளராக மட்டுமன்று, புரவலராகவும் திகழ்ந்தவர் நம் பாபு சியாம்சுந்தர்தாஸ் என்றால், அது மிகையாகாது.

அவர் யார் யாரை ஆசிரியர்களாகத் தேர்ந்தெடுத்தாரோ அவர்களிடம் பட்டப்படிப்புத்தான் கிடையாதே ஒழிய, தத்தமக்குரிய பாடத்திட்டத்தில் சிங்கம்போலத் திகழ்ந்தனர். அவர்கள் இயல்பாகப் பெற்றிருந்த சக்தியின் ஆற்றலால் நிறைவுற்ற பேரறிவுடன் கூடிய மாமேதைகளாகத் திகழ்ந்தனர். இவ்வாறு மிகச் சிறந்த சக்திமான்களாகத் திகழ்வதென்பது வேறு; இணையற்ற இத்தகைய திறமைசாலிகள் பலரை ஒன்றுதிரட்டி, கொண்டு செலுத்துவதென்பது வேறு. இஃது அளவிறந்த இணைக்கும் சக்தியை அறிமுகப்படுத்தும் சாதனையேயாகும். இத்தகைய இணைக்கும் சக்தி பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்களிடம் அதிகமாகவே நிறைந்து வழியத் தொடங்கியது.

லாலா பகவான்தின் அவர்களின் பார்சி, உருது, விரஜபாஷை, புந்தேலி மொழிகளின் ஞானம் இந்திமொழி உலகில் இலக்கியப் பாடங்கள் தயாரிக்கவும், பொருள் உணரவும் பெரிதும் துணைநின்றது. இராமச்சந்திர சுக்லா அவர்களின் தத்துவ விளக்கத்தோடு கூடிய ஆய்வுநோக்கு இந்தி இலக்கியத்தின் ஒவ்வொரு தன்மையின் உண்மையைச் சிறப்போடு நிலைநாட்ட உதவியது. மேலும், ஒருவர் பொருள் சொன்னால், மற்றொருவர் அதன் அழகை வெளிப்படுத்தும் பணியை மேற்கொண்டிருந்தார். கவிச்சக்கரவர்த்தி 'ஹரிஔத்' அதன் மெய்ப்பாட்டை எடுத் துரைக்க, கேசவ் அவர்கள் தம் மேம்பட்ட அறிவால் அதனை மெருகூட்டி விளக்கிவந்தார். இவ்வாறு, வடிவம், மெய்ப்பாடு, மணம், கருத்து ஆகியவற்றோரு கூடிய இந்திமொழிக் கல்வி அங்கு நன்கு வழங்கப்பட்டு வந்தது. இத்தகைய பெருமைமிக்க வேள்விக்கூடத்தின் புரோகிதர் அல்லது ஆய்வுக்கூடத்தின்

நிபுணர்போலவும் சியாம்சுந்தர் தாஸ் அவர்களே பொறுப்பேற்று வந்தார்.

படைப்பாளன் சிறந்தவனாக இருப்பின், படைப்பும் சிறப்பாக அமைந்தேதீரும். ஒருவன் சூர-தீரனாக இருப்பினும், மிகச்சிறந்த அறிஞனாக இருப்பினும், தான் செய்து முடித்த பணிகளால் தான் மதிக்கப்படுகிறான். இந்த நாட்டில் படைப்பிற்கு இருக்கும் பாராட்டு, படைப்பாளனுக்கு கிடைப்பதில்லை. சியாம்சுந்தர் தாஸ் படைபாளன் மட்டுமல்லன்; சிறந்த நிர்வாகியும்கூட, அவர் தம்முடைய துறையில் பண்பாளர்களை இணைக்கும் பணியை மட்டும் செய்யவில்லை; அத்தோடு, புதிய படைப்புகளுக்குரிய மிகப்பெரிய யாகத்தையும் தொடங்கிவைத்தார் என்றே சொல்ல வேண்டும்.

அந்தச் சமயத்தில் இந்திமொழியின் மேற்படிப்புக்குரிய வசதிகள் செய்யப்படவேண்டியிருந்தது. இந்திமொழியைப் பாடத் துறைகளுக்கேற்ப அளவில் உயர்த்தும் முயற்சியுங்கூட மேற்கொள்ளப்படவேண்டியிருந்தது. ஆயினும், மேற்படிப்பிற்குரிய நூல்கள் தயாரிக்கப்படவில்லை. அதற்கேற்ற சூழ்நிலையோ, அடிப்படையோ அமைந்திருக்கவும் இல்லை. ஒருபுறம் பாடத்திட்டம் தயாரிக்க வேண்டிய நிலை, மற்றொருபுறம் நன்கு கற்று கற்பிக்கவேண்டிய நிலை. தேவையான பாடத்திட்டம் தயாரிப்பதிலும், பாடநூல் தயாரிப்பதிலும் துணைபுரியக்கூடிய நூல்கள்கூட கிடையாது. இந்தச் சூழ்நிலையில் அனைத்தையும் பொறுப்பேற்றுச் செய்யும் பணியைச் சியாம்சுந்தர் தாஸ் அவர்களே ஏற்றிருந்தார். நிர்ணயம் செய்யப்பட்ட நூல்களை அவரே இயற்றிவந்தார். அதன் தொடர்பான இலக்கிய சாத்திரங்களையும், மொழியியல் நூல்களையும் இயற்றினார். தம் நுண்மாண் நுழைபுலத் திறனால் படைக்கப்பட்ட அந்தப் பயனுள்ள நூல்கள் இன்றும் கற்கப்பட்டும், கற்பிக்கப்பட்டும் வருவதை இலக்கியத் திறனாய்வுத் துறையிலும், மொழியியல் துறையிலும் கண்டறியலாம்.

நம் பேராசிரியர் அவ்வமயம் தம் மதிநுட்பம், திறமை, தொலைநோக்கு ஆகியவற்றை நன்கு பயன்படுத்திப் பட்டப் படிப்பிற்கும், முதுகலைப்படிப்பிற்கும் உரிய பாடத்திட்டத்தைத் தயாரித்திருந்தார். இவர் காசி இந்து பல்கலைக் கழகத்தில் புகுமுக வகுப்பில் இந்திமொழியைக் கட்டாயப் பாடமாக்க மேற்கொண்ட முயற்சியுங்கூட வெற்றி பெற்றது. இத்துடன் இந்திமொழிக்குரிய முதுகலைத்தேர்வில் பிறபாடங்களைப்போல எட்டு வினாத்தாள்களை அறிமுகப்படுத்தும் ஏற்பாட்டினையும் செய்து

முடித்தார். இவரால் உருவாக்கப்பட்ட அந்த வினாத் தாள்களே இன்றும் ஒருசில மாற்றங்களுடன் எல்லாப் பல்கலைக் கழகங்களிலும் பின்பற்றப்பட்டு வருகின்றன.

ஒன்றினைப் படைக்கும்பொழுது, அதனைப் படைப்பவர் எதிர்காலத்தையும் நினைவிற்கொண்டே படைக்க வேண்டியிருக்கிறது. தற்காலத்திய சுமை எதிர்காலத்தில் சற்றுக் குறையத்தான் செய்யும் என்பது பொதுமொழி. ஒளிமயமான எதிர்காலத்திற்கென உருவாகும் மிகப்பெரிய கற்பனை, உருவாக்கப்படும்பொழுது சற்று சிரமமாகத்தான் இருக்கும். சியாம்சுந்தர்தாஸ் இத்தகைய பணியைத் தீவிர ஈடுபாட்டுடனும், தன்னம்பிக்கையுடனும் செய்து வெற்றியும் பெற்றார். அவர், இந்திமொழியின் மேற்படிப்புத் துறையின் தொடக்ககால மகாகுருவாக மட்டும் விளங்கவில்லை. மிகச்சிறந்த சீடர்களை உருவாக்கும் மாமேதையாகவும் விளங்கினார். அத்தகைய சீடர்களே, அவரால் தொடங்கப்பட்ட நற்பணிகளைத் தொடர்ந்து செய்து வந்ததோடு, காலத்திற்கேற்ற தேவையான விரிவினையும் உருவாக்கும் ஆற்றல் படைத்தவராகவும் திகழ்ந்திருந்தனர். டாக்டர். பீதாம்பர்தத்த படத்வால், பண்டிட். நந்ததுலாரே வாஜ்பயி, ஸ்ரீ அயோத்யாநாத் சர்மா, டாக்டர் ஜெகந்நாத் பிரசாத் சர்மா, ஸ்ரீ ஹரிஹரநாத் டண்டன் போன்றோர் புகழ்பெற்ற இவரது சீடர்களாவர். இவர்கள் இந்திக்குரிய மேற்படிப்புத் துறையில் பயனுள்ள நற்பணிகளை ஆற்றிப் பெருமை பெற்றனர். சியாம்சுந்தர்தாஸிடம் ஒளிவிட்டுப் பிரகாசித்துக்கொண்டிருந்த கல்விச் சிந்தனை, அந்தச் சீடர்களாலும், அவர்களால் உருவாக்கப்பெற்ற மாணவர்களாலும், நாட்டிலுள்ள இந்தி மொழிக்குரிய மேற்படிப்புத்துறையில் நிறைவான நல்லுணர்வோடு தொடர்ந்து பரப்பப்பட்டு வந்ததெனலாம். இன்று அவரது சீடர்களும், அச்சீடர்களுக்குரிய சீடர்களும் தொடர்ந்து, அந்தப் புகழ்க்கொடியைத் தூய்மையோடு ஏந்தியவண்ணம் முன்னேறி வருவதையும் காணமுடிகிறது.

தம் மாணவர்கள் மீது இரக்கங்கொண்டு மலிவான பட்டத்தை வாங்கித்தரும் சாதாரண ஆசிரியர் அல்லர் அவர். அவர்கள் நன்கு உழைத்து ஆழ்ந்த புலமை பெறுமாறு செய்த பேராசிரியர் ஆவார். பெரும் முயற்சியால் உருவாக்கப்பட்ட இத்தகைய சீடர்களே கலைமகளின் திருக்கோயிலை மேலும், அழகு பெறுமாறு செய்தனர். இவர், தம் மாணவர்கள் மூலம் பற்பல நற்பணிகளை செய்து முடித்து, அவர்கள் அனைவரும்

இந்திமொழித் தொண்டிற்கும், சாதனைக்கும் உரிய பேராற்றல் வாய்ந்தவர்களாகத் திகழுமாறு செய்தார். இதற்கென ஒரு சான்றினை மட்டும் காட்டுவது போதும் என நினைக்கிறேன்.

டாக்டர் பீதாம்பர்தத்த படத்வால் இவருடைய பரம சீடர்களில் ஒருவராவர். இவரது ஆய்வுநூல், 'இந்திமொழிக் காவியத்தின் நிர்குணத் தத்துவம்' (The Nirgun school of Hindi Poetry) என்ற பெயரில் நன்கு அறிமுகமான ஒன்றாகும். அந்நூல் மிகச்சிரமத்தோடும், திறமையோடும் நன்கு தயாரிக்கப்பட்ட மிகச்சிறந்த திட்டத்தோடு எழுதப்பட்ட ஆய்வேடாகும். அஃது இன்றும் இந்திமொழி ஆய்வுப்பணிக்குரிய மிகச்சிறந்த வழிகாட்டியாகத் திகழ்ந்து வருவதை யாவரும் அறிவர்.

இன்றுபோல இந்திமொழியின் உயர்பட்டங்களைப் பேராசிரியர் மலிவாக உருவாக்கித் தந்தவரல்லர். அதன் தரத்தையும் புகழையும் மேம்படுத்த உழைத்தவர். வணக்கத்திற்குரிய ஒன்றாகவே பண்புடைமை அமைதல் வேண்டும் என்பதைப் பேராசிரியர் நன்கு அறிந்திருந்தார். அதன் காரணமாக, கல்வித்துறையில் பண்புடைமையை நன்கு போற்றி வளர்ப்பதில் தனிக்கவனம் செலுத்திவந்தார். இவர் பண்பிற்குறைந்தவரல்லர்; பண்பினைப் போற்றி வழிபடும் நல்லாசிரியர் ஆவார். எனவேதான், இவர் இந்திமொழிக் கல்விஉலகின் பிரும்மாவெனக் கருதி, நன்கு வழிபடத்தக்கவர் எனப்பாராட்டிப் போற்றப்பட்டு வருகிறார்.

மனிதன் உயர உயர அல்லது மேல்நோக்கிச் செல்லச் செல்ல, சின்னஞ்சிறிய விஷயங்களில் கவனம் செலுத்த இயலாமற் போய்விடக்கூடும். அதன் காரணமாக அதன் அடிக்கல் ஆட்டங் காண நேரிட்டு விரைவில் விழவும் நேரிடலாம். ஆனால், பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் அடிமட்டத்திலிருந்து மேல்மட்டம் வரை சரியான முறையில் கவனம் செலுத்திவந்தவர். தொடக்கக் கல்வி முதல் மொழித்திறனாய்வுத்துறை வரை பற்பல படைப்பு களைப் படைத்தளித்தவர். அவருக்குப் பிறகு இவ்வாறு தொடக்கத் திலிருந்து இறுதிவரை எல்லாவற்றையும் உற்றுநோக்கி நன்கு பணியாற்றியவர் எவருமிலர் என்றே சொல்ல வேண்டும். இதனால், கல்வித் துறையில் கீழ்மட்டத்திற்கும் மேல்மட்டத்திற்கும் உரிய தகுதியைக் கண்டறிய முடியாமல், வேறுபாடற்ற ஒரே நிலை உருவாகிவிட்டதை இன்று காணவேண்டியிருக்கிறது.

சாதாரண அறிவின் தொடக்கநிலை உறுதியாகவும், முறையாகவும், சிறப்பாகவும் அமையாவிடில் உயர்நிலையறிவு தடுமாறி கவலைக்குரியதாகிவிடும். எனவே, ஆசிரியர்கட்கு

அறிவுத்திறன்தான் மூலதனமாகும். ஆனால், அதனை வெளிப்படுத்தும் பண்பின் திறன் உலக நடைக்கேற்ப அமையாவிடின் பயனற்றதாகப் போய்விடும். இன்று பலரின் நோக்கத்தில் பெரிதாக அமையும் இத்தகையவொன்று படைப்பின் சிறப்பினைத் தேட முயலும்போது, அதன் வெளிப்பாட்டுணர்வின் அழகும், அதனை உறுதிப்படுத்தும் சக்தியும் குறைந்தே காணப்படுகிறது. அதனைத் தவமேம்பாட்டாலேதான் பெறமுடியும் என்பதை பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்களின் சமூக சாதனையின் மூலம் உணர்ந்துகொள்ள முடிகிறது.



# 3. இலக்கிய சாதனை

## இலக்கணம் படைத்தல்

நாகரி பிரச்சாரிணி சபை நிறுவிய சமயத்தில் இந்திமொழிக்கென அடிப்படையான யாதொரு இலக்கண நூலும் எழுதப்படவில்லை. வெவ்வேறு கொள்கையின் அடிப்படையில் உருவான பற்பல அரைகுறையான இலக்கண நூல்கள் தான் இருந்தன. இலக்கண நோக்கில் இந்திமொழிக்குரிய நல்ல நூல் அதுவரை உருவாகவில்லை. பாபு சியாம்சுந்தர் தாஸ் நாகரி பிரச்சாரிணி சபையின் மூலம் இந்திமொழிக்குரிய ஆக்கப்பூர்வமான பணிகளைச் செய்துவந்த சமயத்தில் இந்தி மொழிக்குரிய அடிப்படை இலக்கண நூல் இல்லாதிருந்த குறையைப் போக்க ஒரு நூல் உருவாக்கப்பட வேண்டுமென முடிவு செய்தார்.

சற்றேறக்குறைய 250 ஆண்டுகளுக்கு முன்புதான் இந்தி மொழிக்குரிய இலக்கண நூல் எழுதத்தொடங்கப் பெற்றது. நம் நாட்டில் இலக்கண நூல் எழுதும் மரபு மிகத்தொன்மை வாய்ந்த தாகும். சமஸ்கிருதம், பிராகிருதம், அபப்பிரம்சம் ஆகிய மொழி களுக்குரிய இலக்கண நூல்களை நம் ஆசார்ய பெருமக்களால் எழுதப்பட்டிருந்தும்கூட, இந்திமொழிக்குரிய இலக்கண நூல் எழுவதற்கான எண்ணம் பெரும்பாலும் யாருக்குமே உருவாக வில்லை என்றே கருத வேண்டியுள்ளது. அதாவது, இடைக் காலத்தில் வட்டார மொழியைப் போற்றும் பண்பு மிகக் குறை வாக இருந்ததே இதற்கான காரணம் என அறியமுடிகிறது. தேவமொழி எனக் கருதப்பட்ட சமஸ்கிருத மொழியோடு ஒப்பிடும் பொழுது மக்கள் மொழியின் மாண்பு பேரறிஞர்களின் பார் வைக்குப் புலப்படவில்லையென்றே கூறவேண்டியிருக்கிறது. எனவே தான் சூர்தாஸ், துளசிதாஸ், வித்யாபதி, கபீர், மீரா மற்றும் பிகாரி போன்ற மகாகவிகளின் சிறப்புவாய்ந்த படைப்புகள் தோன்றி இருந்தும்கூட மக்கள் மொழிக்குரிய இலக்கணத்தின்மீது அறிஞர் பெருமக்களின் கவனம் செல்லவில்லை எனத் தெரிகிறது. அவர்கள் சமஸ்கிருத மொழி இலக்கணத்தின்மீது பெரும் பற்றுக்கொண்டு இருந்துவிட்டனர் எனத் தெரியவருகிறது. இதனால் தான் இராமானந்தர், நாகேஷ்பட்டர் மற்றும் பண்டித ராஜா ஜகந்நாதர், ஆகிய பெரும்புலவர்கள் சமஸ்கிருத மொழிக் குரிய இலக்கணம் பலவிதமாக எழுதியிருந்தும்கூட வட்டார மொழியை முற்றிலும் புறக்கணித்துவிட்டனர்.

இந்திமொழி இலக்கணம் விக்ரம ஆண்டின் 18ஆம் நூற்றாண்டில்தான் எழுதத்தொடங்கியதற்கான முயற்சி உருவாயிற்று எனத் தெரியவருகிறது. ஔரங்கசீப் மன்னரின் ஆட்சிக்காலத்தில் (1715-1764) மிர்ஜாகான் விரஜ பாஷைக்குரிய அறிமுகமாக, சுருங்கிய வடிவில் இலக்கண நூல் எழுதினார். அதே ஆண்டில் ஹாலந்து நாட்டைச் சார்ந்த ஜோஹன் கோஷுவா கெட்லர் இந்துஸ்தானி மொழிக்குரிய இலக்கண நூல் ஒன்றை எழுதினார். இதன் தொடர்பான செய்தியை டாக்டர் சுநீதிகுமார் சட்டர்ஜி அவர்கள் 'துவிவேதி பாராட்டு மலரில்' 'இந்துஸ்தானியின் மிகப்பழைமையான இலக்கணம்' என்ற தலைப்பில் எழுதிய கட்டுரையில் விரிவாகத் தந்துள்ளார். டாக்டர் கிரியர்ஸன் கருத்தின்படி இந்த நூல் 1715ஆம் ஆண்டு முன்பின் எழுதியிருக்கக்கூடும் எனக் கருதப்படுகிறது. அந்த நூல் ஹாலந்து நாட்டின் லெய்டன் நகரில் 1743 ஆம் ஆண்டில் டேவிட் மில் மற்றும் மில்லியுஸ் என்ற பெரும் புலவர்களால் வெளியிடப்பட்டது.

கெட்லரைப் போலவே பிற ஐரோப்பிய அறிஞர்களும் தம் மக்களுக்கு இந்துஸ்தானி மொழி கற்கும்போது உதவும்பொருட்டு சில இலக்கண நூல்கள் எழுதியிருக்கக்கூடும். இப்படி வெளி நாட்டாரால் எழுதப்பட்ட பல இந்துஸ்தானி இலக்கண நூல்கள் கிடைத்திருக்கின்றன. அவற்றுள் டாக்டர் ஜான்போர்த்விக் கில் கிறிஸ்து எழுதிய, 'இந்துஸ்தானி இலக்கணம்' (1790), ராய்பெக் எழுதிய, 'ஆங்கில-இந்துஸ்தானி அகராதி - முன்னொட்டு இலக்கணத்துடன்' என்ற நூலில் இடம்பெற்ற இலக்கணப் பகுதிதான் ஃபோர்ட் வில்லியம் கல்லூரியில் கற்பிக்கப்பட்டு வந்ததெனக் கூறுவர். டெய்லர் கருத்தின்படி அக்காலத்திய மிகச்சிறந்த இலக்கண நூலாக இஃது கருதப்பட்டது. எட்ஸ் இயற்றிய 'இந்துஸ்தானி இலக்கணம்' (1824), ப்ளாட்ஸ் எழுதிய, 'இந்துஸ்தானி இலக்கணம்' என்ற நூலும், பாதரி ஆதம் அவர் கள் எழுதிய, 'இந்தி இலக்கணம்' (லண்டன் நகரிலிருந்து 1855 ஆண்டு அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது) என்ற நூலும் மிகச் சிறப்பாகக் கருதப்பட்டது. அது இப்பொழுது கல்கத்தா தேசிய நூலகத்தில் காப்பாற்றப்பட்டுவருகிறது.

15 ஆண்டுகள் கழித்து 1870இல் காசிமாநகரின் பாதரி எதர்ரிங்டன் அவர்கள் ஆங்கிலத்தில் இந்தி இலக்கண நூல் ஒன்றை எழுதியிருந்தார். அந்நூலினையே அடுத்த ஆண்டு வி.1928இல் 'பாஷா பாஸ்கர்' என்ற பெயரில் இந்தியில் மொழிபெயர்த்து வெளியிட்டனர். 1874ஆம் ஆண்டு கேலாக்

அவர்கள், 'இந்தி மொழியின் இலக்கணம்' என்ற பெயரில் ஒரு நூலினை வெளியிட்டார். அதன் 2ஆம் பதிப்பும் 1892 ஆம் ஆண்டு அச்சிடப்பட்டது. இந்த நூலில் இந்தி இலக்கணத்தோடு, அன்று பேசப்பட்டுவந்த உயர்நிலை இந்தி, விரஜமொழி, மேற்கத்திய இந்தி முதலானவற்றைப் பற்றிய விளக்கங்களும் இடம்பெற்றிருந்தன. இவ்வாறு வெளிநாட்டவரால் எழுதப்பட்ட எல்லா இலக்கண நூல்களுள் கேலாக் எழுதிய நூலே மிகச்சிறப்பாகக் கருதி ஏற்றுக்கொள்ளப்பட்டது. மேலும், 1810 ஆம் ஆண்டு வெளிநாட்டவர்க்காக இந்தியரால் எழுதப்பட்ட நூல் வரிசையில் லல்லூஜிலால் ஆங்கிலத்தில் எழுதிய, 'விரஜ பாஷையின் இலக்கணக் கொள்கைகள்' என்ற நூலும் இடம் பெற்றிருந்தது.

இந்தி இலக்கணப் படைப்பின் முதற்கட்டம் வெளிநாட்டவரால் உருபெற்றது. அவர்கள் வெளிநாட்டவர்க்கு இந்தி கற்பிக்கும் பொருட்டு இந்துஸ்தானி அல்லது இந்தி இலக்கண நூலை எழுதி வெளியிட்டனர். ஐரோப்பிய பாதிரிமார்களும், மொழிநூல் வல்லுநர்களும் எழுதிய இலக்கண நூல்கள் ஐரோப்பிய மொழி இலக்கணத்தை முன்மாதிரியாகக் கொண்டு எழுதப்பட்டிருந்தன. அதில் பெரும்பாலும் மக்களின் பேச்சு மொழியே ஆதாரமாக அமைந்திருந்தது.

இந்தி இலக்கணப் படைப்பின் 2வது கட்டம் விக்ரம ஆண்டின் 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் உருவாயிற்று. அவ்வமயம்தான் இந்திமொழி மக்களின் கல்வி மொழியாகப் பரவத் தொடங்கியது. தொடக்கப் பள்ளியில் மாணவர்கள் இந்தியில் பேசுவதும்,. எழுதுவதும் தொடர்பாகக் கற்பிக்க பாடத்திட்டத்தில் இலக்கணம் கட்டாயமாக்கப்படவேண்டுமென்ற உணர்வு கல்வி அதிகாரிகளுக்கு உருவாயிற்று. ஆரம்பத்தில் பாதரி ஆதம் அவர்களின் இலக்கணம் பயன்படுத்தப்பட்டது. பிறகு, இந்தி மொழிப்பண்டிதர்களே மாணவர்களுக்குப் பயன்படக்கூடிய இலக்கண நூல்கள் எழுதினர்.

தொடக்கநிலை இலக்கண நூல்களில் (1856) ஆம் ஆண்டு பீகாரைச் சார்ந்த பண்டிட் ஸ்ரீ லால் இயற்றிய, 'பாஷா சந்தி ரோதயம்' என்ற நூலும், திரு. அதிதயாவான் நார்மல் பள்ளியின் தலைவர் டிரேசம் அவர்களின் ஆணைப்படி ராம்ஜசன் பண்டிதர் இயற்றிய இந்தி இலக்கண நூலாகிய 'பாஷா தத்துவ போதினி' என்ற நூலும், 1858இல் காசிமாநகரின் நார்மல் கல்லூரி மூலம் அச்சிடப்பட்டு வெளியான நூலும் சிறப்பாகக் கருதப்பட்டன. பீகார் மாநிலத்தில் 'பாஷா சந்திரோதயம்' என்ற நூலும், 'பாஷா

தத்துவ போதினி' என்ற நூலும் அக்காலத்திய வடகிழக்கு வட்டாரங்களில் (இன்றைய உத்தரபிரதேசம்) பள்ளிக்கூடப் பாடத்திட்டங்களில் இடம்பெற்றிருந்தன.

இச்சமயத்தில் 'உருது மார்த்தாண்டம்' என்ற பெயரில் ஒரு இலக்கண நூல் புகழ்பெற்றிருந்தது. அதனை நவீன் சந்திரராய் என்பவர் தமது 'நவீன சந்திரோதயம்' என்ற நூலில் குறிப் பிட்டுள்ளார். இந்த பாபு நவீன் சந்திரராய் ஒரு வங்காளச் சான்றோர் ஆவார். இவர்தான் பஞ்சாப் பகுதியில் பாராட்டத் தக்க நிலையில் இந்திப் பிரச்சாரப் பணிகளைச் செய்திருந்தார். இவரது அயராத முயற்சியினால்தான் பஞ்சாப் பல்கலைக் கழகத்தில் தொடக்கநிலை, உயர்நிலை என்ற பெயர்களில் இரு இந்தித் தொடர்பான தேர்வுகள் தொடங்கப்பட்டன. இத்தேர்வுகளுக்குப் பயன்படும் முறையில் 1868-ஆம் ஆண்டில் நவீன் சந்திரராய் அவர்கள் 'நவீன சந்திரோதயம்' என்ற பெயரில் இலக்கண நூல் ஒன்றை எழுதியிருந்தார். அதன் முகவுரையில் இவர் 'உருது மார்த்தாண்டம்' தொடர்பாகச் சில கருத்துக்களைக் குறிப்பிட்டிருந்தார். அதில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்:-

"அதில் இந்திமொழிச் சொற்கள் சிறப்பாக இடம் பெற்றிருந்தாலுங் கூட, உருது மொழியின் அமைப்பு முறைகளே பின்பற்றப்பட்டுள்ளன. ஆகையால் இந்திமொழிக்குரிய உண்மையான இலக்கண நூல் களின் வரிசையிலிருந்து நீக்கிவிட வேண்டும்."

'நவீன சந்திரோதயம்' நூலுக்கு முன்பே வெளிவந்த எல்லா இந்தி இலக்கணங்களிலும் சமஸ்கிருத சொற்கள் (தத்சமம்) இந்தியில் அப்படியே இடம்பெற்றிருந்தன என்றாலும், அதற்குரிய விதிமுறைகள் தரப்படவில்லை. ஏனெனில், அக்காலக் கல்வித் துறையின் மொழிக்கொள்கை வேறுவிதமாக இருந்தது. அவர்கள் தத்சம சொற்களை இந்தியாக ஏற்கவில்லை. மேலும், அத்தகைய தத்சம பிரதான இந்தி மொழியை ஒரு புதிய பெயரிட்டு (உயர் இந்தி - ஹை ஹிந்தி) அழைத்துவந்தனர்.

'நவீன சந்திரோதயம்' இந்த நோக்கில் இந்தியில் உருவான முதல் இலக்கண நூலாகும். அதில் தத்சம சொற்களுக்குரிய விதிகளும் கொடுக்கப்பட்டிருந்தன. இந்த நூல் வெளிவந்த மூன்றாண்டுகளுக்குப் பிறகு வி. 1828 (1871)இல் காசிமாநகரில் பாதரி எரிங்டன் அவர்கள் மாணவர்களுக்குப் பயன்படும் முறையில் 'பாஷா பாஸ்கர்' என்ற பெயரில் ஒரு இந்தி இலக்கண நூல் எழுதி வெளியிட்டார். பண்டிட் விஷ்ணுதத்தர் உதவியோடு இயற்றப்பட்ட இந்த இலக்கண நூல் மக்கள் ஆதரவைப் பெற்று

விளங்கியது, அதன் சிறப்புக்குச் சான்றாக இருந்தது. இலக்கணத் துறையில் இந்த நூலே அதிக நாட்கள்வரை மாணவர்களுக்குப் பயன்பட்டு வந்த இலக்கண நூல்களுக்கிடையே அதிக சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்பட்டுப் போற்றப்பட்டு வந்தது.

'பாஷா பாஸ்கர்' நூலுக்குப் பிறகு அவதிவட்டார உயர்கல்வியதிகாரி வில்லியம் ஹண்ட்ஃபோர்ட் ஆணையின்படி சீதல் பிரசாத் குப்தா அவர்கள் உன்னாவ் அரசினர் உயர் பள்ளியில் தலைமையாசிரியராகப் பணியாற்றிய காலத்தில், 'சப்த பிரகாசிகா' என்ற பெயரில் 1870இல் நவல்கிஷோர் அச்சகம், லக்னோ மூலம் வெளியிடச் செய்தார். 1875இல் ராஜா சிவ பிரசாத் 'சிதாரே ஹிந்த்' காசிமாநகரில் தம் 'இந்தி இலக்கணம்' என்ற நூலை வெளியிட்டார். அதில் இந்தி இலக்கணத்தோடு உருது இலக்கண விதி முறைகளையும் இணைத்துக்காட்டி, இரண்டும் உறவுகொள்ளும் முயற்சியில் ஈடுபட்டார். இவர் இந்தியும் உருதுவும் ஒரே மொழி என்றுதான் கருதினார். அவற்றிடையே மாறுபட்ட எழுத்து வடிவங்களும் வேறுபட்ட சொற்களஞ்சியங்களும், நிறைந்திருந்தன. இக்காரணத்தினால் இவ்விரண்டு மொழிகளும் ஒன்றாக இணைய முடியாது என்ற எண்ணம் இருந்தது. ஆனால், இலக்கண ஒருமைப்பாட்டின் காரணமாக அந்த இடைவெளிகளை நீக்க முயன்றார். இந்திக்கும் உருதுவிற்கும் வேறுபாடு உருவாக்க வேண்டும் என்ற டாக்டர் கில் கிறிஸ்து அவர்களுடைய ஆதரவாளர்களான ஒருசில புலவர்களையும் மௌல்விக்களையும் பேச்சுமொழியினுடைய இலக்கண நூல் ஒன்றை எழுதக் கேட்டுக்கொண்டதன் விளைவாகத்தான் இத்தகை வேறுபாடு ஏற்பட்டது.

மௌல்விக்கள் சமஸ்கிருத மொழி அறிவை முழுமையாகப் பெற்றிருக்கவில்லை. வட்டாரமொழி ஆரியமொழிக் குடும்பத்தைச் சார்ந்த ஒன்று என்பதையும் மறந்து அரபி, பாரசீக மொழிகளின் அடிப்படையில் ஒரு இலக்கண நூலை உருவாக்கினர். மற்றொரு பக்கம் புலவர் பெருமக்கள் வட்டார மொழியோடு செமிட்டிக் மொழியின் தாக்கத்தை முழுமையாகவே புறக்கணித்து சமஸ்கிருத மொழிக்குரிய இலக்கணத்தை அடிப்படையாக ஏற்று இலக்கண நூலை உருவாக்கினர். இதன் காரணமாகவே இருமொழிகளுக் கிடையே வேறுபாடு தோன்றலாயிற்று. ஆனால், ராஜா சிவபிரசாத் 'சிதாரே ஹிந்த்' அவர்கள் இந்தி, உருது ஆகிய இருமொழிக்கென ஒரே நெறிமுறையை உருவாக்கி இலக்கண நூலைப் படைக்க முயன்றார். இவை இரண்டும் வேறுபட்ட எழுத்து வடிவங்களையும், முறைகளையும் பெற்றிருந்தாலும்கூட

இரண்டிற்கும் ஏற்ற ஒரே அமைப்பிலான இலக்கண நெறி முறையைப் படைக்க இயலுமென எண்ணினார். இவர் இதன் அடிப்படையில் முயன்று உருவாக்கிய இலக்கண நூலில் புணர்ச்சி, பண்புப்பெயர் விகுதி, வினைமுற்று முதலானவற்றைப் பிற்சேர்க்கைப் பகுதியில் தரவேண்டியதாயிற்று. அதனால், அரபிமொழிகளின் புணர்ச்சிக்குரிய விதிகளும் இடம்பெறலாயின. அன்றுவரை இலக்கண நூல்களில் ஆங்கில முறையைப் பின்பற்றி யாப்பிலக்கணப்பகுதியும் தரப்பட்டது.

இந்தி-உருது பாவகைகளின் இடையே ஒருமைப்பாட்டிற்கான எந்த அம்சமும் இல்லாததால் ராஜா சாஹப் யாப்பிலக்கணத்திற்கு இடமளிக்க வில்லை.

அக்கால மொழிப்புலவர்கள், 'மொழி இயலின் அடிப்படையில் இந்தியும் உருதுவும் இரண்டல்ல; ஒன்றேயாகும்' எனப் பிரச்சாரம் செய்துவந்தனர். ராஜா சிவபிரசாத் 'சிதாரே ஹிந்த்' அவர்களும்கூட இக்கருத்தை ஏற்று இந்தி உருது மொழிகளுக்கிடையே இருந்த வேறுபாட்டை நீக்கப் பெரும் முயற்சி எடுத்துக் கொண்டார். இந்தியும், உருது மொழியும் ஒரே மொழியா? இருவேறு மொழிகளா? என்ற புதிய விவாதங்கள் இதன் காரணமாக உருவாகிவிட்டன. ராஜா லட்சுமணசிங் 'இரகுவம்சம்' என்ற மொழிபெயர்ப்பு நூலின் முகவுரையில் *(1872)* 'என் கருத்தின்படி இந்தியும் உருதுவும் வெவ்வேறு வகைப்பட்ட தனித்தனியான மொழிகளேயாகும்' என்று குறிப்பிட்டுள்ளார். ராஜா சிவபிரசாத் 'சிதாரே ஹிந்த்' எழுதிய இலக்கண நூலுக்குப் பிறகு எழுதப்பட்ட எல்லா இலக்கண நூல்களுமே இந்த இருவேறுவகைப்பட்ட கருத்தைக் குறித்துள்ளன. சில நூல்கள் இரண்டையும் ஒரே மொழி என்றே ஏற்று எழுதின; சில இரண்டும் தனிப்பட்ட வெவ்வேறு மொழிகளே எனக் குறித்து எழுதலாயின.

*1877*-இல் முஜஃபர்பூர் நகரின் அயோத்தியா பிரசாத்கத்ரி, பாங்கிபூர் பீகார் பந்து அச்சகம் மூலம் வெளியிட்ட 'இந்தி இலக்கணம்' என்ற நூலில் இந்தி-உருது மொழிகளுக்குரிய ஒன்றுபட்ட இலக்கணக்கருத்துக்கள் இடம்பெற்றிருந்தன. அந்நூல் இரு பாகங்களாக அச்சிடப்பட்டிருந்தன. கத்ரி அவர்கள் தம் இலக்கண நூலை ஐந்து இயல்களாகப் பிரித்திருந்தார். அவையாவன:

*(1)* முதல் இயல் - எழுத்து
*(2)* 2வது இயல் - சொல்
*(3)* 3வது இயல் - சொற்றொடர்

(4) 4வது இயல் - நிறுத்தக்குறியீடு
(5) 5வது இயல் - யாப்பிலக்கணம்

யாப்பிலக்கணம் மட்டும் இரண்டாவது பாகத்தில் இடம்பெற்றிருந்தது. அதில் இந்தி-உருது மொழிகளுக்குரிய யாப்பிலக்கணங்கள் அனைத்தும் இடம்பெற்றிருந்தன. எஞ்சிய நான்கு இயல்களும் முதல் பாகத்தில் இடம்பெற்றிருந்தன. மற்றொரு திசையிலிருந்து 1885-இல் ராம்சரண்சிங் என்பவர் கடக் விலாஸ் பிரஸ், பாங்கிபூரிலிருந்து 'பாஷா பாஸ்கர்' என்ற நூலை வெளியிட்டார். அதைச் செம்மைப்படுத்தி வெளியிடும் பொறுப்பை அம்பிகாதத்த வியாஸ் அவர்கள் ஏற்றிருந்தார். இந்நூலில் இடம்பெற்ற இலக்கணம் தூய இந்திக்குரியதாகும்.

ஆசிரியர் முதற்பதிப்பில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்:

"இந்த 'இந்திமொழி' என்று குறிப்பிட்டிருப்பதை மக்கள் தவறாக முகம்மதியர்களால் உருவாக்கப் பட்ட மொழி, அதாவது உருது எனக் கூறிவருகின் றார்கள் அல்லவா? அந்த மொழி எனக் கருதிவிடக் கூடாது. அது ஒருபோதும் கிடையாது. எந்த மொழியின் மூலம் சமஸ்கிருதத்தோடு எந்தவொரு சம்பந்தமும் வைத்திருக்கவில்லையோ, ஆனால் பிறமொழிகளின் பல சொற்கள் இடம்பெற்றிருக் கிறதோ, அது பாரசீக அல்லது அரபி மொழியின் திறனால் நிலைபெற்றிருக்கிறதோ, அது உறுதியாக வெளிநாட்டு மொழியேயாகும். ஆகையால், அந்த ஒதுக்கப்படவேண்டிய மொழிக்குரிய நெறிமுறைகளைக் கூறுவது 'பாஷா பாஸ்கர்' நூலின் நோக்கமன்று. இது, அந்தச் சுத்தமான இந்திமொழியின் நெறி முறைகளைக் காட்டுவது. முக்கியமாக சமஸ் கிருதம், பிராகிருதம் ஆகிய மொழிகளிலிருந்து அது உருவாகியது. அரசு சரியான இந்தி எனப் புரிந்து கொண்டது. ஏனெனில், ஒருவேளை இவ்வாறு உருவாகாவிடில் பள்ளியில் இந்தியும், உருதும் தனித்தனியாகப் பாடத்திட்டத்தில் இடம்பெற முடியாது போய்விடக்கூடும். மேலும், அரசு இந்தியைச் சமஸ்கிருதத்தோடு தொடர்புடையது எனப் புரிந்துகொள்ள இயலாவிடில் சமஸ்கிருதமும் பாரசீக மொழியும் படிப்பவர்களுக்காகக் கீழ்வகுப்பு களில் முறையாக இந்திக்கும், உருதுவிற்கும் பாடப் புத்தகங்கள் தனித்தனியாக வைக்கத் தேவையில்லை.

இந்தி படிப்பவர்களுக்கு அந்த இந்தியின் உதவியால் சமஸ்கிருதம் சிறிது சுலபமாகிவிடும். யார் பாரசீக மொழி படிப்பார்களோ அவர்களுக்கு உருது அறிவால் உதவி கிடைக்கும் என்பதுதான் அரசின் நோக்கமாகும். ஆம்! அப்பாவி உருதுக்காரர்கள், இந்த நூல் பக்கம் வராதிருப்பார்களாக!"

இவ்வாறு இந்தி இலக்கணம் படைப்பதில் இருவித மரபுகள் போற்றப்பட்டு வந்தன. அவற்றுள் ஒன்று இந்தி-உருது ஆகியவற்றை ஒரேமொழியாகக் கருதியவர்களால் உருவாக்கப்பட்ட இலக்கணம். ஆங்கில இலக்கணத்தை ஒட்டி எழுதப்பட்டது மற்றொன்று. இந்தியை உருதுமொழியிலிருந்து மாறுபட்ட சுதந்தரமான மொழி எனக் கருதியவர்களால் உருவாக்கப்பட்ட இலக்கணம், சமஸ்கிருதத்தின் இலக்கணத்தை ஒட்டி எழுதப்பட்டது. கல்வித்துறையினர் ஆங்கில இலக்கணத்தையே விரும்பியதால் பாடத்திட்டத்தில் அதையே இடம்பெறச் செய்தனர். ஆங்கிலம் போன்று எழுதப்பட்ட இலக்கணத்தை அரசு விரும்பாததற்குரிய காரணம், அதில் இந்தி-உருது மொழிகளுக்குரிய சமமான நெறிமுறைகள் உருவாக்கப்பட்டிருந்ததேயாகும். ஆனால், ஆங்கிலத்தை ஒட்டி எழுதப்பட்ட இலக்கணம் இந்தி கற்கும் மாணவர்களால் கற்கும்பொழுது ஆங்கில மொழியைக் கற்கவும் வசதியாக இருக்கும் என்றே அப்படிச் செய்தனர். அமரர் பாபு சியாம்சுந்தர் தாஸ் அவர்கள் 1906-இல் இந்தி-உருது மொழிகளுக்குரிய தொடக்கநிலை இலக்கணத்தை, 'இந்தி-உருது தொடக்கநிலை இலக்கணம்' என்ற பெயரிலேயே எழுதி வெளியிட்டார். அந்நூலின் முகவுரையில் அவர் இவ்வாறு எழுதியுள்ளார்.

"இந்த இலக்கண நூலை நான் சமஸ்கிருத இலக் கணத்தை அடிப்படையாகக் கொண்டு எழுதப்படும் அத்தகைய நெறிமுறைகளைப் பின்பற்றவில்லை. இந்தி சமஸ்கிருதத்திலிருந்து தோன்றியிருந்தாலும்கூட, தற்பொழுது இது சுதந்தரமான ஒரு தனிமொழி யாகவே கருதப்படுவதால், அத்தகைய பழைய நெறிமுறைகளைப் பின்பற்றுவது பாதுகாப்புமன்று; பயனுமன்று. இதைத்தவிர, இன்று எந்த ஒரு மாணவனின் கல்வியும் ஆங்கில மொழியின் நிறைவான அறிவு இன்றி முழுமைப் பெறாது என்று உணர்ந்து வருகின்றனர். எனவே, ஆங்கில மொழி இலக்கணத்தின் நெறிமுறையைப் பின்பற்றி

இந்தி-உருது இலக்கணம் எழுதப்படுமேயானால், ஆங்கில மொழியைக் கற்பதற்கும் வசதியாக இருக்கும். ஆகையால், நான் இன்றுவரை எந்தக் கொள்கையின் அடிப்படையில் இந்தி-உருது இலக்கணத்தைப் படைத்துவந்தேனோ, அதை விட்டுவிட்டுத் தற்கால ஆங்கில இலக்கண நெறிமுறைகளையே பின்பற்றி உருவாக்கியுள்ளேன்."

மாணவர்களின் பாடத்திட்டத்திற்காகத் தயாரிக்கப்பட்ட ஒருசில இலக்கண நூல்கள் ஆங்கில மொழியிலக்கணக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்டிருந்தன. ஒருசில நூல்கள் சமஸ்கிருதத்தை அடிப்படையாகக்கொண்டு உருவாக்கப்பட்டிருந்தன. ஒருசில இரண்டையுமே சம அளவாகப் பின்பற்றி உருவாக்கப்பட்டிருந்தன. மகாமகோபாத்யாய பண்டிட் சுதாகர் துவிவேதி, சீதளபிரசாத் திரிபாடி போன்ற ஒருசிலர் சமஸ்கிருத மொழியில் பேரறிஞர்களாக இருந்தும்கூட, இந்தியின் தனித்தன்மையின் இயல்பை நன்குணர்ந்து அதற்கேற்ப தனித்து இலக்கண நூல் எழுதி வெளியிட்டனர்.

இலக்கண நூல் எழுதுவதில் இத்தகைய இரண்டாம் வளர்ச்சி நிலையில் ராஜா சிவபிரசாத் 'சிதாரே ஹிந்து', பாரதேந்து பாபு அரிச்சந்திரர், அம்பிகாதத்த வியாஸ், தாமோதர் சப்ரே சாஸ்திரி, கேசவராம் பட்டர், சுதாகர் துவிவேதி, மாதவபிரசாத் பாடக், சூர்யபிரசாத் மிஸ்ரா முதலான தலைசிறந்த அறிஞர்கள் மாணவர்களுக்குப் பயன்படக்கூடிய முறையில் இயற்றினர். இந்த நூல்களில் யாப்பு இலக்கணமும் பிற இலக்கணங்களுக்கிடையே இடம்பெறத் தொடங்கிற்று. மேலும், பெயருரிச்சொல், பிரதிப்பெயர்ச்சொல் போன்றவற்றைத் தனி இலக்கணப் பகுதியாகக் கருதாமல் பெயர்ச்சொல்லின் உட்பிரிவாகவே கருதி விளக்கந்தந்திருந்தனர். பெயர்ச்சொல்லின் ஐந்து உட்பிரிவுகளான சாதி வாசகம், வியக்தி வாசகம், குணவாசகம், பாவவாசகம், பிரதிப்பெயர்ச்சொல் எனக் குறிப்பிட்டும், குணவாசகப் பெயர்ச்சொல்லினைப் பெயருரிச்சொல் எனக் குறிப்பிட்டும் விளக்கந்தந்தனர். இம்முறையில் இயற்றப்பட்ட இலக்கண நூல்களுள் கேசவராம் பட்டரின் இந்தி இலக்கண நூல் மக்களால் மிகச்சிறப்பாகக் கருதப்பட்டது.

பேரறிஞர் மகாவீர் பிரசாத் துவிவேதி 'சரஸ்வதி' என்ற இதழின் ஆசிரியரான பிறகு இந்திமொழியின் உறுதியற்ற நிலையை உணரத்தொடங்கினார். இந்திமொழியின் பரந்துபட்ட

வட்டாரங்களில் இலக்கியப் படைப்பு நன்கு உருவாகிவரினும் அவற்றிடையே மொழி அமைப்பின் ஒருமைப்பாடு குறைவாகவே தென்பட்டது. அதாவது, பாரதேந்து காலத்திய இந்திமொழி ஒரு குறிப்பிட்ட நல்ல தரத்தை அடைந்து பெரும்பாலும் உச்சரிப்பு சிறப்போடு தத்பவ நெறியைச் சிறப்பாகப் போற்றி வந்தது. இந்தியின் இத்தகைய நிலையின் காரணமாக எவை எழுதப்பட்டு வந்தனவோ, அவை அப்படியே படிக்கப்பட்டுவந்தன; எவை எப்படி பேசப்பட்டு வந்தனவோ அவை அப்படியே எழுதப்பட்டும் வந்தன. இதன் அடிப்படையில் பாரதேந்து காலத்திய இலக்கியங்கள் பேச்சுமொழியில் சொற்கள் எவ்வாறு உச்சரிக்கப்பட்டு வந்தனவோ, அவ்வாறே எழுதப்பட்டும் வரலாயின. பரந்துபட்ட மிகப்பெரிய வட்டாரத்தின் மொழியாக இந்தி இருந்ததால் ஒரு பகுதியில் ஒரு சொல்லுக்குரிய உச்சரிப்பு, வேறொரு பகுதியில் வேறொரு உச்சரிப்பு பெற்றிருந்தது. இதனால், ஒரே சொல் வெவ்வேறு வட்டாரத்தில் வெவ்வேறு வடிவில் எழுதப்பட்டு வந்தன. இவ்வாறே, தத்பவ சொற்களில் சரியான பயன்பாட்டு முறை பிறவட்டார மக்களுக்குப் புரிந்துகொள்ளும் முறையில் அமைக்கப்படவில்லை. துவிவேதி அவர்கள் பரந்துபட்ட இந்திமொழி பேசும் வட்டாரங்களிடையே ஒரு நிலையான மொழி அமைப்பின் ஒருமைப்பாட்டை உருவாக்க இலக்கண அமைப்பில் ஒரே நிலையைத் தோற்றுவிக்கும் பணியைத் தொடங்கினார். *1905*ம் ஆண்டு சரஸ்வதி, நவம்பர் இதழில் அவர் 'மொழியும் இலக்கணமும்' என்ற தலைப்பில் ஒரு சிறப்பான கட்டுரை எழுதி, "இந்தி எழுத்தாளர் குழாம் இலக்கணத்தின்மீது அக்கறை காட்டாமலேயே தம் கட்டுரைகளை எழுதிவருவதால் அவற்றிடையே மொழி அமைப்பின் ஒருமைப்பாட்டைக் காண இயலவில்லை" எனச் சுட்டிக்காட்டி உணர்த்தினார்.

துவிவேதி அவர்களின் எதிரொலியாக ஒரு புதிய இயக்கம் உருவாகத் தொடங்கிற்று. 'பாரத்-மித்திரன்' இதழாசிரியர் பாலமுகுந்த குப்தா துவிவேதி அவர்களின் கட்டுரையில் இடம்பெற்ற 'நிலையற்ற தன்மை' என்ற சொல்லை முன்னிறுத்தி, துவிவேதி அவர்கள் பாரதேந்து காலத்திய எழுத்தாளர்களின் இலக்கணத்தொடர்பான தவறுகளைச் சுட்டிக்காட்டிய செய்திகளைக்கொண்டு 'ஆத்மராம்' என்ற புனைபெயரில் 'பாரத்-மித்திரன்' இதழில் 9 - 10 கட்டுரைகளின் வாயிலாகத் தம் கண்டனத்தை வெளிப்படுத்தியிருந்தார். இவற்றிற்குரிய மறுப்புகளாக கோவிந்த நாராயண மிஸ்ரா அவர்கள் 'ஆத்மராம் பிதற்றல்' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதி, குப்தா

எழுப்பிய வினாக்களுக்கு தக்க விடையும் கூற முயற்சி செய்தார். இந்த வாத-விவாதம் மிகக்கடுமையாக உருவானபோதிலும், இத்தகு கட்டுரைகளின் வாயிலாக, 'இந்திமொழியில் ஒருமைப்பாடு இல்லை' என்ற கருத்து நன்கு புலப்பட்டது.

தில்லி வட்டாரத்தினர் - 'லேகனி உடானி சாஹியே' என்று எழுதினால், லக்னோ வட்டாரத்தினர், 'லேகனி உடானா சாஹியே' என்று எழுதுவர். முன்னவர், 'சிக்ஷா லேனி ஹோகி' என்று எழுதினால், பின்னவர் 'சிக்ஷா லேனா ஹோகி' என்று எழுதுவர். (ஒரு வட்டாரத்தினர் ஒரு சொல்லை ஆண்பாலாகக் குறித்து எழுதினால், மற்றொரு வட்டாரத்தினர் அதே சொல்லை பெண் பாலாகக் குறித்து எழுதுவர். இந்தியில் 'லேகனி' என்ற சொல் 'எழுதுகோல்' எனப் பொருள்படும். உணர்வுமிக்க தில்லி வட்டாரத்தினர். 'எழுதுகோலை ஏந்திப் பிடிக்கவேண்டும்' எனக் குறிப்பிட்டு எழுதும்போது, 'லேகனி' இந்திமொழியின்படி பெண்பாலாகக் கருதப்படுவதால் அதற்கேற்ப, 'ஏந்திப்பிடித்தல்' என்பதற்குரிய சொல்லான 'உடானா' என்ற சொல்லையும், பெண்பாலாக மாற்றி 'உடானி' எனக்குறிப்பிடுவர். ஆனால், லக்னோ வட்டாரத்தினர், 'உடானா' என்றே எழுதுவர். இவ்வாறே, 'கல்வி' என்ற சொல்லைக் குறிக்கும் 'சிக்ஷா' என்ற சொல் பெண்பால். அதற்கேற்ப 'பெறுதல்' என்ற பொருள் தரும் 'லேனா' என்ற சொல்லையும் பெண்பாலாக்கி ஒரு பகுதியினர் கூற, மற்ற பகுதியினர் ஆண்பாலாகவே கருதுவர். இன்றைய இந்தி இலக்கண நெறிமுறைப்படி ஒரு பெண்பாற் பெயர்ச் சொல்லிற்குப் பிறகு வரும் சொல் பெண்பாலாகவே மாற்றப்பட வேண்டும் என்றே வலியுறுத்தப்படுகிறது.)

இவ்வாறே, சொற்களை எழுதுவதிலும் வேறுபாடுகள் காணப்படலாயின. டஹர்னா - டைர்னா; சகதா - சக்தா; பஹசான்தா - பஹசாந்தா; மனோரத் - மனோர்த் என இருவேறு வடிவங்கள் ஒரு சொல்லுக்காகப் பயன்பட்டு வந்தன. எழுதும்போது இத்தகைய வேறுபாடு தோன்ற உச்சரிப்பே காரணமாக அமைந்திருந்தது. ஒவ்வொரு வட்டாரத்திலும் ஒவ்வொருவிதமாக உச்சரிக்கப்பட்டு வந்தன. துவிவேதி அவர்கள் இத்தகைய பலவகைப்பட்ட வடிவங்களை நீக்க விரிவான இந்திமொழி வட்டாரத்தில் ஒரேவகையான மொழியைப் பயன்படுத்துவதற்கான இலக்கண ஒருமையை உருவாக்கும் வழியில் எழுத்தாளர்கள் கவனம் செலுத்துமாறு செய்தார். சிலர் இம்முயற்சியைக் கேலியும் கிண்டலும்கூடச் செய்யத் தலைப்பட்டனர். அமரர் பண்டிட் சந்திரதர் சர்மா குலேரி

அவர்கள், 'முட்டாளின் முள்' என்ற தலைப்பில் எழுதி வெளியிட்ட கதை நூலின் தொடக்கத்தில் இவ்வாறு எழுதியிருக்கிறார்.

"ரகுநாத்ப்ப் பிரசாத் த்ரிவேதி - அல்லது ருக்நாத் பர்ஷாத் திர்வேதி - இது என்ன?

என்ன செய்வீர்! இருநிலையிலும் அறியப்படுகிறது. ஒருபுறம் இத்தகைய புகழத்தக்க வாதம் இருந்து வருகிறது. அதாவது எப்படிப் பேசப்படுகிறதோ அப்படியே எழுதப்படுகிறது. இல்லையெனில் எப்படி எழுதப்படுகிறதோ அப்படியே பேசப்படுகிறது. மற்றொருபுறமோ இந்தியின் மீகாமனுடைய புரிந்துகொள்ள முடியாத பண்பாடு என்னவென்றால், எப்படி மதத்தலைவன், 'யாம் சொல்வது போல் செய்யும்; எமது பாதையில் செல்லாதீர்' என்று கூறுகிறானோ?! அப்படி! எப்படி இந்தியின் பேரறிஞர்கள் எழுதுகிறார்களோ அப்படி எழுது! அவர்கள் எப்படி பேசுகிறார்களோ அப்படி எழுதவேண்டாம் என்று கூறும் பண்பாடு எப்படி?! இந்தி சாகித்ய சம்மேளனத் தலைவர் தன் இலக்கணத் துவர்ப்பு நிறைந்த குரலோடு, 'பர்சோத்தம்தாஸ்' என்றும், 'ஹர்கிசன்லால்' என்றும் கூற, அவரது பிரியமான அச்சகர், 'புருசோத்தம் அ தாஸ் அ' என்றும், 'ஹரிகிருஷ்ண அ லால் அ' என்றும் அச்சிடுவதா?"

குலேரி அவர்கள் இலக்கண ஏற்புடைய மொழியைவிட உச்சரிப்பு வழி மொழியே முக்கியமானதென உறுதியுடன் வாதித்து வந்தாரெனத் தெரியவருகிறது. ஆனால், பெரும்பாலான மக்களின் மனதில் இத்தகைய உச்சரிப்பு முறையை ஏற்று எழுதுவதால் பரந்துபட்ட வட்டாரத்தில் மொழியின் ஒருமைத்தன்மை அழியக்கூடும் என்ற எண்ணம் உருவாகியிருந்தது. எனவேதான், இலக்கண ஒருமையோடு எழுதவேண்டுமென்ற விருப்பம் அதிகரிக்கலாயிற்று. ஆனால், இந்திக்கென எல்லோரும் ஏற்கத்தக்க இலக்கணம் இல்லை என்பது பெருந்தொல்லையாகவே இருந்துவந்தது. அந்தச் சமயம் வரை தொடக்கப்பள்ளி மாணவர்கட்குப் பயன்படும் நிலையில் பற்பல இலக்கண நூல்கள் எழுதப்பட்டுவிட்டன என்றும், தொடர்ந்து எழுதப்பட்டுவந்தன என்றும் உறுதியாகக் கூறலாம். ஆனால், வளர்ச்சியுற்ற இந்தி வட்டார எழுத்தாளர்களும், கற்பவர்களும் சாதாரணமாகப்

பயன்படுத்தக்கூடிய நோக்கில் யாவராலும் ஏற்கத்தகுந்த யாதொரு இலக்கண நூலும் இல்லையென்றே கூறவேண்டியிருந்தது. துவிவேதி அவர்கள் தம் கட்டுரையில் இதன் தொடர்பாக, 'இந்திமொழியில் இன்றுவரையில் யாவரும் ஏற்கத்தக்க ஒரு இலக்கண நூல்கூட உருவாக்கப்படவில்லை' என்ற கருத்தைக் குறிப்பிட்டிருந்தார். மேலும் 1908ஆம் ஆண்டு ஆகஸ்டு, 'சரஸ்வதி' இதழில் பண்டிட் காமதா பிரசாத் குரு அவர்கள்கூட, 'இந்தியின் தாழ்வு' என்ற தலைப்பில் எழுதிய கட்டுரையில், 'இம்மொழியில் ஏற்றுக்கொள்ளத்தக்க இலக்கண நூலோ, சான்றாதார அகராதியோ இல்லை' என்று எழுதியிருந்தார்.

1893 இல் நாகரி பிரச்சாரிணி சபை இந்தியில் சிறந்த இலக்கண நூல் இல்லாத பெருங்குறையை உணர்ந்து தம் நிறுவனப் பணியோடு இத்தகைய நூல் ஒன்றினை உருவாக்கித் தருவார்க்கு 'பொற்பதக்கம்' வழங்கப் போவதாக 1894இல் அறிவித்திருந்தது. பயன் ஒன்றும் கிடைக்காததால் சியாம்சுந்தர் தாஸ் அவர்கள் மொழி நூல் அறிஞர்களின் ஒத்துழைப்போடு இக்குறையைப் போக்க உறுதிபூண்டு ஜெகந்நாத்தாஸ் 'இரத்னாகர்', கிஷோரிலால் கோஸ்வாமி ஆகியோரிடம் இப்பணியை ஒப்படைத்திருந்தார். அக்குழுவின் ஒருங்கிணைப்பாளர் பொறுப்பைச் சியாம்சுந்தர் தாஸ் ஏற்றிருந்தார். இம்முயற்சியிலும் சிறப்பாக வெற்றிபெற இயலாவிடினும் சபை 1897இல் இலக்கண நூலில் இடம்பெற வேண்டிய குறிப்புகளின் அடிப்படை விவரங்களை அறிவித்து இதனடிப்படையில் எழுதப்படும் நூலுக்கு ரூ.500 பரிசாக வழங்கப்படும் என அறிவித்திருந்தது. 1903 இல் சபை ஆய்வு செய்வதற்கு மூன்று இலக்கண நூல்கள் வந்து சேர்ந்தன. இந்நூற்களைத் தக்கவாறு பரிசீலித்துத் தேர்வு செய்வதற்கென இந்தியின் மாபெரும் அறிஞர்களின் குழு ஒன்று அமைக்கப் பெற்றது. அதில் மேன்மைமிகு இராமாவதார் சர்மா, கோவிந்த நாராயண் மிஸ்ரா, சியாம்சுந்தர்தாஸ், மகாவீர் பிரசாத் துவிவேதி, சியாம் பிகாரி மிஸ்ரா, ஸ்ரீதர் பாடக், மற்றும் லட்சுமிநாராயண் திரிபாடி ஆகியோர் இடம்பெற்றிருந்தனர். அக்குழு பரிசுபெறும் தகுதியுடைய நூல்கள் என எதையும் தேர்ந்தெடுக்காவிட்டாலும், சில சிறப்பான அம்சங்கள் கொண்டதன் காரணமாக ஸ்ரீகங்காபிரசாத் அவர்கட்கும், ஸ்ரீ ராம் கர்ண சர்மா ஆகியோர்க்கும் முறையே ரூ.150,50 பரிசாக வழங்க முடிவு செய்தது. 1917ஆம் ஆண்டிலிருந்து சபையின் நூல் வெளியீட்டின் வரிசையில் இலக்கண நூல் ஒன்று வெளியிடும் முயற்சியில் ஆர்வத்துடன் முனைந்து 1919இல் இந்திமொழிக்குரிய மிகச்சிறந்த

இலக்கண நூல் ஒன்று வெளியிடப்பட்டது. இதனை மீண்டும் சிறப்போடு வெளியிட கீழே குறிப்பிட்ட அறிஞர் பெருமக்கள் இடம்பெற்ற குழு ஒன்று அமைக்கப்பெற்றது.

பேராசிரியர் பண்டிட் மகாவீர் பிரசாத் துவிவேதி, இலக்கிய மேதை பண்டிட் இராமாவதார் சர்மா, பண்டிட் சந்திரதர் சர்மா குலேரி, இராய் பகதூர் பண்டிட் லஜ்ஜா சங்கர் ஜா, பண்டிட் இராம்நாராயணன் மிஸ்ரா, ஸ்ரீ ஜெகந்நாத்தாஸ் 'இரத்னாகர்', பண்டிட் இராமச்சந்திர சுக்லா மற்றும் ஸ்ரீ சியாம்சுந்தர்தாஸ்.

இவர்கள் ஒன்றுகூடி அமர்ந்து நூலின் அமைப்பு முதலான பணிகளில் மிகச்சிறந்த உதவி செய்தனர்.

இந்தக் குழு திருத்தங்கள் சேர்த்துத் தேர்ந்தெடுத்த 'இந்தி இலக்கணம்' 1920இல் முதன் முறையாக நூல் வடிவில் வெளியிடப்பட்டது. இந்த இலக்கண நூல்தான் இன்றும்கூட போற்றப்பட்டு வருகிறது. இது நன்முறையில் வெளிவரப் பாடுபட்டோரில் சியாம் சுந்தர்தாஸ் பங்கு நினைவுகூரத் தக்கது. 1920ஆம் ஆண்டு அக்டோபர் 14ஆம் நாள் இந்த ஆய்வுக் குழுவின் பணி தொடங்கிற்று. இதில் பங்குபெற நேரம் கிடைக்காமல் வராதிருந்தோர் பண்டிட் கோவிந்த நாராயணன் மிஸ்ரா மற்றும் ஸ்ரீ பண்டிட் அம்பிகா பிரசாத் வாஜ்பேயி ஆகியோர் ஆவர். இக்குழுத் தொகுத்தளித்ததை எல்லா அறிஞர்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட அந்த முதல் இலக்கண நூல் 1920இல் வெளியிடப்பட்டது.

## தேடல் மற்றும் ஆய்வுப் பணிகளின் தந்தை

இளைஞர் கையில் பணம் கிடைத்தால் வீண்செலவுதான் ஆகும். ஆனால், பாபு சியாம்சுந்தர்தாஸ் தம் நுண்ணறிவால் மிகக்குறைந்த வசதியோடு அந்த மிகப்பெரிய நற்பணியைத் தொடங்கி கோடான கோடி மானுடர்களின் விடுதலைக் குரலாக உருவாகி, இன்று பாரதத்தின் நன்முயற்சியால் உலகமொழி வடிவில் இந்தி வளர்ச்சி பெற்றிருக்கிறது. தொடக்க காலத்தில் நாட்டின் பல பகுதிகளில் துணி மூட்டையுள்ளே உறங்கிக்கிடந்த கையெழுத்துப் பிரதிகளைத் தேடிக் கண்டறிந்து பாதுகாக்கும் பணி நாகரி பிரச்சாரிணி சபையின் மூலம்தான் தொடங்கப் பெற்றது. அதன் தலைமைப் பொறுப்பையும் சியாம்சுந்தர் தாஸ்தான் ஏற்றிருந்தார். தேடும் இத்தகைய பணியால் இந்திய இலக்கியக் களஞ்சியத்தில் அளவிறந்த இரத்தினங்கள் குவியத்

தொடங்கின. அவற்றால் இந்திமொழிக் கல்வித்துறை ஒளிமயமாகிப் பிரகாசித்தது. இந்தியின் எண்ணற்ற நிதிச்செல்வங்களைச் சந்து பொந்துகளிலும், கிராமங்களிலும் தேடி வெளிக்கொணர்ந்து சமூகத்திடம் ஒப்படைக்கும் இத்தகைய நற்பணி பாரதத்தின் ஞானயக்ஞத்தின் ஜோதிகுண்டமாகக் கருதப்பட்டு வந்தது. அதனால், இந்தியின் அகண்ட ஜோதி நன்கு ஒளிவிட்டுப் பிரகாசிக்கத் தொடங்கிற்று. அளவிறந்த இத்தகைய நற்களஞ்சியத்தால் இந்திமொழி இரத்தினக் கருவூலமாக மாறிவிட்டது.

அதே ஆண்டு சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் இந்திய அரசு, வடமேற்குப் பகுதியிலும் பஞ்சாப் பகுதியிலும் அமைந்த அரசு, வங்காளத்தின் ஏசியாடிக் சொஸைட்டி ஆகியவற்றின் பொறுப்பாளர்களிடம் சமஸ்கிருத கையெழுத்துப் பிரதிகளோடு இந்திமொழிக் கையெழுத்துப் பிரதிகளையும் தேடும் பணிகளைத் தம் வட்டாரங்களில் செய்யவேண்டுமெனக் கேட்டுக்கொண்டார். ஐக்கிய மாநில அரசு கருணையோடு பனாரஸ் சமஸ்கிருத கல்லூரியில் பாதுகாத்து வைக்கப்பெற்ற இந்திமொழிப் புத்தகங்களின் பட்டியல் ஒன்றைச் சபைக்கு அனுப்பிவைத்தது. இந்திய அரசும், பஞ்சாப் அரசும் இவரது வேண்டுகோளுக்குச் செவிசாய்க்கவில்லை. வங்காளத்திலுள்ள ஏசியாடிக் சொஸைட்டி இரண்டு ஆண்டுகள் வரை இப்பணியைச் செய்வித்து, பிறகு ஏதோ காரணத்தால் நிறுத்திவிட்டது. இடைவிடாத மானசீகமான உறுதிப்பாட்டோடு இந்திமொழிக்குரிய இந்தத் தீபத்தை இளைஞர் வாயிலாக ஒளிபெறச் செய்திருந்த பணி இத்தகைய ஒரு சில காரணங்களால் தொய்வுபெற நேரிடுமோ என்று தோன்றியது.

ஆயினும், சியாம்சுந்தர்தாஸ் இடைவிடாமல் கவனித்து சபையின் பிற இன்றியமையா பணிகளுக்கிடையே இதனையும் செய்து முடித்து இந்திமொழிக்குரிய பெருஞ்செல்வத்தை ஒளிபெறச் செய்யும் நற்பணியைத் தொடங்கிவைத்தார். அக்காலத்தில் 20 வயது நிறைந்த ஓர் இளைஞன், இந்தி மொழியையும் முறையாகக் கல்லாதவன், பட்டப்படிப்பும் இல்லாதவன், அந்த நற்செயலை (இதை இன்றைய உலகில் உள்ள நுண்மான நுழைபுலத்திறன் மிக்க மொழிப்புலவனுடைய யந்திரத்தின் உதவியாலும்கூட செய்து முடிக்க இயலாது). செய்து முடிப்பேன் என்று உறுதி மட்டும் செய்யவில்லை, அப்பணியைத் தற்கால அறிவியல் நெறிமுறைக்குச் சமமாகச் செய்து, உயிரைப் பணயம் வைத்து வெற்றியும் பெற்ற இத்தகைய பெருமைக்குரிய நிரந்தரப்பேராற்றலுக்குச் சொந்தமானவர் இவர்தான் என்பது வெள்ளிடைமலையாகும்.

எவனொருவன் தம்முடைய கொள்கைகட்கு அடிமையாகி வாழ்கின்றானோ, அவனுக்கு உருவாகும் தடைகள் தான் அவனுக்குரிய பாதையைச் சுட்டிக்காட்டி நிற்பதோடு, இடுக்கண்கள் அவனுடைய இலட்சியத்தின் மந்திரங்களாக உருவெடுத்துத்தூண்டி நிற்கும். இத்தகைய கொள்கை பிடிப்புள்ளவர் கடமையைச் செம்மையாகச் செய்ய முயலும்போது, உருவாகும் இடுக்கண்களும், பெற்ற பயிற்சிகளும் கற்பக மரமாகி நின்றுவிடும். இத்தகைய பயனைப் பெறுவதில் தன்னலமிக்க வேட்கை தோன்றுவதில்லை; ஆனால், படைப்பிற்காகச் சமூக உணர்வும், சமூக நலமும் கொண்ட சிந்தனை அதற்குரிய உயிரோட்டமாக அமைந்துவிடும். இத்தகைய குறிக்கோள் கொண்ட மக்கள் எப்பொழுதெல்லாம் தம் காலடியை முன்னோக்கி எடுத்து வைக்கிறாரோ அப்பொழு தெல்லாம் களர்நிலங்கூட செழிப்பான நன்செய் நிலமாகிவிடும். அமங்கலமும் மங்களகரமாக முடிந்துவிடும். இதுதான் இங்கும் உருவாயிற்று.

இது கடினமான காரியமாக இருந்தது. இதில் அறிவு, சாமர்த்தியம் ஆகியவற்றோடுகூட தக்க துணைக்கருவிகளும், பெருமுயற்சியும் தேவைப்பட்டது. தக்க துணைக்கருவிகளோடு, கடின உழைப்பும் அத்யாவசியமாயிற்று. இவை அனைத்துமே ஒன்றாகப் பெருஞ்செல்வத்தின் வடிவாகி டாக்டர் சியாம்சுந்தர் தாஸ் அவர்களிடம் சரண் அடைந்து வெளிப்பட்டன. தம் உயிரைத் துச்சமெனக் கருதி உயிர்த்தியாகம் செய்வதற்கு எல்லா வீரர்களுமே தயாராகத்தான் இருப்பர். இதற்கெனத் தமக்குரிய அனைத்தையும் தாராள குணத்தோடு உரிமையின் காலடியில் எல்லாச் சாதனையாளர்களுமே அர்ப்பணம் செய்துவிடுவதைக் காணலாம். ஆனால், இத்தகைய பெரும்பணிக்காக ஒரு பெருஞ் சேனையை உருவாக்கி, அதனைக்கொண்டு செலுத்துவதற்கேற்ற சட்டதிட்டங்களை உருவாக்கி, அதைத் தவறாமல் பின்பற்றிச் சென்று சமூகநலம் பெறுவதற்குரிய பாதை எப்பொழுதும் ஒளிவீசி பிரகாசித்துக்கொண்டிருக்கும்படியாகச் செய்யக்கூடுமன்றோ? இப்பொருளில் தலைவனும், நிர்மாணிப்பவனும் செய்யும் செயல்களெல்லாம் தியாகம் மட்டுமன்று; யோகம் மட்டுமன்று; அனைத்திற்கும் பிரியமானவனாவான். இத்தகையோர் மட்டுமே வெற்றியை வழங்கும் மந்திரத்தின் புரவலனாகவும், நிலையான நற்பலனைப்பெறும் பாக்யவானாகவும் இருக்க முடியும். நவீன இந்திக்கென இத்தகைய பேராற்றலையும், தனித்தன்மையையும் நிறைவாகப் பெற்று விளங்கிய மிகச்சிறந்த அமைப்பாளராகத் திகழ்ந்திருந்தவர் சியாம்சுந்தர்தாஸ்.

இந்திமொழியின் கையெழுத்துப் பிரதிகள் நாடு முழுவதும் பரவிக்கிடந்தன. அவற்றை ஒன்றாகத் திரட்டும் பணியில் இவரது சிந்தனை இயல்பாகச் செயல்படத் தொடங்கிற்று. எல்லா நிலையிலும் தன்னிறைவு பெற்று செல்வச் செழிப்புடன் விளங்கும். எந்த மொழியும் தம் கடந்தகால இலக்கியங்களைக் கொண்டுதான் தற்காலத்தையும் சிறப்புடையதாகக் கொண்டு செலுத்த இயலும். எம்மொழிக்குக் கடந்தகால இலக்கியங்கள் நிறைவாக , இல்லையோ, அதற்கு நிகழ்காலமும் இல்லை; எதிர்காலமும் இல்லை. இதனை சியாம்சுந்தர் தாஸ் நன்கு அறிந்திருந்தார். ஆகையால்தான் இத்தகைய பணியில் ஈடுபட அதிக ஆர்வம் காட்டலானார். எந்த நேரத்தில் இப்பணியில் ஈடுபட்டாரோ அப்பொழுது துளசிதாஸ், சூர்தாஸ், கேசவ்தாஸ், தேவ், பிகாரிலால் ஆகியோரின் இலக்கியங்கள் மாத்திரம் இருந்தன. அவையுங்கூட முழுமையாக ஒரே தொகுப்பாக ஒரே இடத்தில் இருக்கவில்லை. அவற்றை ஒன்று சேர்க்கும் பணியும் மிகக்கடினமாயிருந்தது. இத்தகைய பணியில்கூட இந்தி மொழி மிகவும் பின்தங்கியிருந்தது. நிறுவனங்களுள் . வங்காளத்திலுள்ள ஏசியாடிக் சொஸைட்டி இதன் தொடர்பான சில பணிகளைச் செய்திருந்தது. ஆயினும், இத்துறையில் சியாம்சுந்தர் தாஸ் செய்த பணியே சிறப்பாகக் கருதப்பட்டது. இத்துறையில் எந்த விவேகத்துடனும், சியாம்சுந்தர் தாஸ் இப்பணியைத் தொடங்கி அறிமுகம் செய்தாரோ, அதனால் இவர் தலைமை தகுதிக்குரிய நுண்மாண் நுழைபுலத்திறனின் அடையாளச் சின்னமாக அமைந்துவிட்டது.

அவர் இப்பணிக்கென நியமித்த பொறுப்பாளர்கள் அனைவருக்கும் தக்க பயிற்சியினை வழங்கினார். அவர்களை இந்தப் புனிதப் பணிக்குரியவர்களாக நன்கு தயார்செய்தார். பட்டி தொட்டிகளுக்கும், நகரங்களுக்கும் குளிர் - வெயில் - மழை எனப்பாராது சென்று, எத்தகைய வசதியுமின்றி அப்பணி யாளர்கள் சுற்றித்திரிந்து மக்களிடமிருந்து கையெழுத்துப் பிரதி களைப் பெற்று சபையில் ஒப்படைத்து வந்தனர். பிரதிகளைச் சேகரித்துக் கொடுக்க விரும்பாத மக்களிடமிருந்து அவற்றின் விபரங்களைக் கேட்டு சேகரித்து வந்தனர். இப்பணியில் ஈடுபட்டோர்க்கு இத்தகைய பணியால் வந்த துன்பங்கள் ஒன்றல்ல இரண்டல்ல; இத்துடன் இடந்தோறும் உருவான எதிர்ப்புகள், அவமானங்கள் முதலானவற்றையும் சமாளிக்க நேரிட்டது. இத்தகைய பயனுள்ள புனிதச் செயலில் ஈடுபட எவர்தம் ஒப்புதலை வழங்க முன்வந்தனரோ அவர்களால் செய்து முடிக்கப்பட்ட நற்பணிகளால் யாதொரு விலையுமின்றி உலகம்

தழுவிய மிகப்பெரிய இந்திமொழிக் கையெழுத்துப் பிரதிகள் நிறைந்த கருவூலமாக நாகரி பிரச்சாரிணி சபை உருவானதோடு இந்திமொழி ஆய்விற்குரிய உலகின் அடிப்படை ஆதாரமாகவும் விளங்கலாயிற்று.

இஃது ஆய்விற்குரிய மூலாதாரமாக மட்டும் அமைய வில்லை. இந்திமொழி உலகின் ஞானக்கங்கோத்ரியாகவும் திகழ்ந்துவந்தது. உலகம் முழுவதிலும் உள்ள பல்கலைக் கழகங்களைச் சார்ந்த ஆயிரக்கணக்கான ஆய்வு மாணவர்கள் இதன் மூலம் அளவிறந்த நன்மைகளைப் பெற்று வருகின்றனர். இன்று வெளிநாட்டில் கிட்டத்தட்ட 100 பல்கலைக் கழகங் களில் இந்தி கற்பிக்கப்பட்டு வருகிறது. இங்கிலாந்து, அமெரிக்கா, கனடா, ஜெர்மனி, போலந்து, ரஷ்யா, இத்தாலி,ஜப்பான், பர்மா, பிஜி, திரினிடாடு, மொரீசியஸ் மற்றும் சூரிநாம் போன்ற எல்லா நாடுகளிலும் உள்ள மக்கள் இந்த மிகப்பெரிய நூலகத்தை நன்கு பயன்படுத்தி வருகின்றனர். ஆயிரக்கணக்கான அறிஞர்கள் இதனை நன்கு பயன்படுத்தி அறிவின் பலதிறப்பட்ட அடிப் படையாதாரங்களையும், புதிய தத்துவங்களையும் வெளிப்படுத்திய வண்ணம் உள்ளனர். எனவேதான், இந்நூலகம் எப்பொழுதும் வசந்தப்பொலிவுடன் காட்சியளித்துக்கொண்டிருக்கிறது. இத்தகைய பயனுள்ள பணியைச் சியாம்சுந்தர்தாஸ் ஆற்றி இந்திமொழி வளமடைய அதன் மூச்சாகத் திகழ்ந்தார் எனலாம்.

தேடலும், தேடிப்பெறலும் கையெழுத்துப் பிரதிகளைப் பொறுத்தமட்டிலும் மிகப்பெரும் பணியாகும். பெற்ற பிறகு அதனை முறைப்படுத்திப் பாதுகாத்தலும், படித்து உணர்தலும் அதனினும் பெரிய பணியாகும். தேடிப்பெற்ற பொருட்களின் தரத்தைக் கண்டறிதலும் எல்லாராலும் முடியாத ஒன்று. சியாம்சுந்தர்தாஸ் அவர்களே அப்பணியையும் மேற்கொண்டு அனைவரும் பாராட்டும் வண்ணம் திறம்படச் செய்து முடித்தார். தேடிப்பெற்றப் பிரதிகளின் விபரங்களை அவரே நன்கு முயன்று, முறைப்படுத்தித் தயாரித்த பட்டியல் இன்றைக்குச் சற்றேறக்குறைய 75 ஆண்டுகள் பழைமையானதாகக் கருதப்பட்டாலும், இன்றும் அதைப் படிக்க முயல்வார்க்குப் புதியதாகவும், அறிவியல் அடிப்படையில் தயாரித்ததாகவும் தென்படும். தொடக்கத்தில் இவரே எல்லாப் பொறுப்புக்களையும் ஏற்று கவனித்து வந்தார். இதன் தொடர்பான அறிக்கைகளை அரசுக்கு அனுப்ப வேண்டியிருந்ததாலும் தொடக்கத்தில் அரசாங்கமும் இதனைப் பயன்படுத்த வேண்டியிருந்ததாலும் அரசு அச்சகத்திலேயே அச்சடிக்கப்பட்டது. அறிக்கைகள் 'அரசின் வற்புறுத்தல்

காரணமாகத் தொடக்கத்தில் ஆங்கிலத்தில் அச்சாயின. தொடக்கத்தில் இத்தகைய அறிக்கைகள் வருடத்திற்கு ஒரு முறைதான் அச்சடிக்கப்பட்டுவந்தன. இப்படி அவரால் தயாரிக்கப்பட்ட அறிக்கைகள் அனைத்தும் அவரது தொலைநோக்கின் பயன்பாடாக அமைந்திருந்தன. இந்த அறிக்கைகள் ஆங்கிலத்தில் அச்சடிக்கப்பட்டிருந்ததால், ஆங்கிலேயர்களுக்கு இந்தியின் பழைய இலக்கியம் குறித்து ஆர்வம் ஏற்பட்டதுடன் இந்தி மீது கொண்டிருந்த எதிர்ப்பு உணர்வும் படிப்படியாகக் குறையத் தொடங்கியது.

ஒவ்வொரு அறிக்கையும் அது தொடர்பான விஷயத்தில் அண்மையில் கடைசியாகக் கிடைத்த செய்திகளின் அடிப்படையில் மதிப்பீடு செய்யப்பட்டது. கையெழுத்துப் பிரதிகள் தேடிப்பெற்ற வழிமுறைகளின் விபர அறிக்கை இடம்பெற்றிருந்தது. அதன் பிறகு பிரதிகளின் பெயர்கள் அதனுடைய ஆசிரியரின் பெயரோடு இடம்பெறலாயின. அடுத்து, பெயர் அறியப்படாத பிரதிகளின் விபரப்பட்டியல் இடம்பெற்றது. முந்தைய அறிக்கை விபரப் பட்டியலில் கண்டறியமுடியாத விபரங்கள் தற்பொழுது கண்டறியப்பட்டிருந்ததால் அதன் தொடர்பான விபரங்களும், முந்திய பட்டியல்களில் தக்க விபரம் கிடைத்திருந்து, இப் பட்டியலில் அதன் தொடர்பாகக் கிடைத்த பிற பிரதிகளும், நூல் வெளியிட்டோர், நூல் வெளியிடப் பேருதவிபுரிந்தோர், நூற்களின் பெயரகராதி, ஆசிரியர்களின் பெயரகராதி போன்ற அனைத்தும் முறையாக அச்சிடப்பட்டிருந்தன. இத்துடன் நூல் தொடர்பான கருத்துக்களும், அதன் ஆசிரியர் தொடர்பான செய்திகளும் கொடுக்கப்பட்டிருந்தன. முழுவடிவில் கிடைத்த நூல்களின் பெயர், ஆசிரியர், ஏட்டின் அமைப்பு, வண்ணமும் வடிவும், பக்கங்கள், பக்கந்தோறும் இடம்பெற்ற வரிகள், அமைப்புகள், முழுமைபெற்ற அல்லது பெறாத விபரம், இதற்குமுன்பு இதன் தொடர்பாக இயற்றப்பட்டிருந்த விபரங்கள் இருப்பின் அவை, நூல்கள் எழுதக் காரணமாக இருந்த விவரங்கள், எழுத்து அமைப்பு, அதன் காலம், எழுதப்பட்ட காலம், கிடைத்த இடம் போன்ற எல்லா விபரங்களும் இதில் இடம்பெற்றிருந்தன. ஒவ்வொரு நூலின் தொடக்கம், இடைநிலை, இறுதி, நூற்பொருள் தொடர்பான விளக்கங்கள்கூட இடம் பெறலாயின. கையெழுத்துப் பிரதிகள் தொடர்பாகத் தெரியவந்த விசேடமான செய்திகளும் இடம்பெறலாயின. இத்தகைய நெறிமுறைகள் எல்லாம் சியாம்சுந்தர் தாஸ் பொறுப்பேற்றிருந்த அக்காலத்திலேயே அவரது மேற்பார்வையில் தக்க வடிவு கொடுக்கப்பட்டு உருவாக்கப்பட்டிருந்தன.

இத்தகைய மதிப்பீடு இலக்கியத் தொடர்பான நூல்களுக்கு மட்டும் உருவாக்கப்படவில்லை. இந்தி தொடர்பான எல்லாத் துறையோடும் சம்பந்தப்பட்ட அனைத்திற்கும் இவ்வாறு செய்யப்பட்டன. இதில் இந்தி இலக்கிய நூல்கள் மட்டுமன்று, பழங்காலத்திய எல்லாவித கருத்துகள் தொடர்பான அனைத்துக் கையெழுத்துப் பிரதிகளும் இத்தகைய விபர நூல்களில் இடம்பெறலாயின. இதனால், இந்திமொழி இலக்கியத்திற்கு மட்டுமன்று, வேறு பல அறிவுசார்ந்த நூல்களும் படைக்கும் தகுதி வாய்ந்த மொழியாக இந்தி என்றும் இருந்திருக்கிறது என்ற உண்மை நிருபிக்கப்பட்டதெனலாம். இந்நோக்கில் பாபு சியாம்சுந்தர்தாஸ் தேடும் பணிக்கு மட்டுமன்று இந்திமொழியில் உள்ள எல்லாச் செல்வங்களையும் தேடுவதிலும், ஆய்வு செய்வதிலும் முன்னோடி மட்டுமல்லர்; தந்தையுமாவார்.

## பழம்பெரும் இலக்கிய மேம்பாடு

நாலாபுறத்திலிருந்து படைப்புப்பணிகள் எப்பொழுது தொடங்குகிறதோ, அப்பொழுதிருந்தே ஒருபணி மற்றொரு பணிக்குரிய தோற்றுவாயாகவும், துணையாகவும் அமைகிறது. கையெழுத்துப் பிரதிகளை ஒன்றுசேர்ப்பது, அவற்றின் விபரங்களை வெளியிட்டு அறிஞர்கள் உலகின் பேரறிவைக் கொழுந்துவிட்டு எரியச் செய்வதென்பது ஒருபுறமிருந்தாலும், அத்தகைய பெரியோரின் அந்த அறிவுச் செல்வத்தை முழுமையாக வெளியிடுவது வேறு விஷயம். சியாம்சுந்தர்தாஸ் அனைத்தையும் தக்கவாறு செய்து முடிக்கத் தனிக்கவனம் செலுத்தினார். இந்திமொழியில் 'இராமசரிதமானஸ்', 'பிகாரிசத்சயி' மற்றும் ரீதிகாலத் தொடர்பான வேறுசில நூல்களோடு, மதித்துப் போற்றத்தக்கப் பல்வேறு நூல்களும் இருந்தன. அவற்றின் பெருமையைப் பறைசாற்றும் பணிகூட இன்றியமையாததாக இருந்தது.

ஆகையால், இந்தக் கையெழுத்துப்பிரதிகளின் துணையோடு நூல்களைச் செம்மைப்படுத்தி வெளியிடும் பணியும் தொடங்கப்பெற்றது. இதில் 'ராசோ' தொடர்பாக உருவான பணியே மிகப்பெரியதாக அமைந்திருந்தது. 'பிருதிவிராஜ் ராசோ' என்ற காப்பியத்தை முறைப்படுத்தி வெளியிட்ட பணியே மிகப்பெரிய நிகழ்ச்சியாகக் கருதப்பட்டது. இந்த நூல் மட்டுமன்று; இத்துடன் 'சத்ரபிரகாசம்'; 'இந்திராவதி - பாகம்-1'; 'ஹம்மீர் ராசோ'; 'பரமால் ராசோ'; 'கபீர் நூல் தொகுப்பு'; 'தீனதயாளு நூல் தொகுப்பு'; 'அசோகரின் கல்வெட்டுக் குறிப்புகள்'; போன்றவையும் பதிப்பிக்கப்பட்டன. இந்தியின்

தொடக்கால மகாகவியாக சந்த்பர் தாயிதான் கருதப்படுகிறார். ஆனால், அவரது நூலோ கிடைக்கவில்லை. அக்குறையைப் போக்க அதனைத் தேடியறிந்து முதலில் வெளியிடுவது என முடிவு செய்தார். அது இந்திமொழியில் உள்ள மிகப்பெரிய காப்பியமாகும். அதனை வெளியிடுவதென்பது சாதாரண செயலாகாது. இப்பணியைத் தாமே முன்னின்று நன்முறையில் முழுமையாகச் செய்து சபையின் கௌரவம் மேலும் வளருமாறு செய்தார். அவரே தனித்து இப்பணியைச் செய்ய முற்படவில்லை. தகுதிவாய்ந்த நற்புலவர்களைக்கொண்டு இப்பணியைச் சிறப்பாகச் செய்வித்தார்.

## தற்கால இந்திமொழியின் மிகப்பெரிய அகராதி வெளியிடல்

இலக்கியங்கள் படிக்கக் கிடைத்தவுடனேயே அதனைக் கற்பாரும், ஆய்வாரும் அறிந்துகொள்ள கூடிய வகையில் அந்நூல்களில் இடம்பெற்ற புதிய சொற்களின் பொருளினைத் தக்கவாறு உணர்த்தியே ஆகவேண்டும். இந்திமொழியின் இலக்கிய வரலாறு கிட்டத்தட்ட ஆயிரம் வருடத் தொடர்புடையது. ஒருசில அகராதிகளே இருந்தன. அவையும் அரைகுறையே! பயன்பாட்டிற் கேற்ப அவை அமையாமல் பெரும்பாலும் பழைய நிகண்டு முறையிலேயே அமைக்கப்பட்டிருந்தன.

ஆங்கிலேயர்கள் நம் நாட்டில் தம் பணியைத் தொடங்கும் போதே வணிகத்திற்கும், ஆட்சி அமைப்பிற்கும் இந்நாட்டின் மொழியறிவும் இன்றியமையாததொன்றெனப் புரிந்துகொண்டனர். வணிகத்திற்கும், ஆட்சிக்கும், மட்டுமன்று; சமயப் பிரச்சாரத்திற்கு கூட மொழியில் இடம்பெறும் சொற்களின் பொருள் தக்கவாறு புரியாவிடில் மொழியறிவு பயனுள்ள முறையில் வளரத் தடையேற்படும். எனவே, இந்நோக்கினைப் பூர்த்திசெய்ய குறிப்பிட்ட சில இந்தி மொழியின் அகராதிகளை உருவாக்கும் பணிகள் தொடங்கின. அவையனைத்தும் அகரவரிசையில் அமைந்திருந்தன. பயன்பாட்டின் நோக்கில் மேற்கத்திய புதிய அகராதி முறையிலும் அமைந்திருந்தன.

முதன்முதலாக ஜே. ஃபர்குசன் என்பவர் ரோமானிய எழுத்தில் இந்துஸ்தானி ஆங்கில அகராதியையும், ஆங்கில இந்துஸ்தானி அகராதியையும் 1773ஆம் ஆண்டு இலண்டனில் வெளியிட்டார். ஹென்றி ஹாரிஸ் அவர்களின் முயற்சியால் இத்தகைய அகராதி ஒன்று 1790இல் சென்னையில் வெளியிடப்பட்டது. 1808ஆம் ஆண்டு 'சிறப்பான ஆயிரம்

சொற்களின் பட்டியல்' என்ற பெயரில் கையகராதி ஒன்றினை ஜான்சன் மூலம்வெளியிட்டனர். இதே ஆண்டு ஜோசப் டெய்லர், வில்லியம் ஹண்டர் ஆகியோர் மூலம் கல்கத்தாவில் இந்துஸ்தானி மற்றும் ஆங்கில அகராதிகள் வெளியிடப்பட்டன. வில்லியம் ஹண்டர், கேப்டன் ஜோசப் டெய்லர் எழுதிய 'டிக்ஷனரி ஆஃப் இந்துஸ்தானி' என்ற நூலை ஆதாரமாகக் கொண்டு 'ஆங்கில அகராதி' ஒன்றைத் தயாரித்தார். ஹண்டர் அகராதி 1819, 1820 மற்றும் 1834இல் மூன்று முறை வெளியிடப்பட்டது.

ஜே.பி. கில் கிராய்ட்ஸ் 1910இல் எடின்பரோவில் 'ஆங்கில-இந்துஸ்தானி அகராதி' ஒன்றை வெளியிட்டார். இதன் விரிவான பதிப்பு 1786-1796ஆம் ஆண்டுகளுக்கிடையில் வெளியிடப்பட்டது. ஜான் ஷேக்ஸ்பியர் இலண்டனில் 1817இல் 'ஆங்கில-இந்துஸ்தானி' மற்றும், 'இந்துஸ்தானி-ஆங்கிலம்' அகராதிகளை வெளியிட ஏற்பாடு செய்தார். அது தொடர்ந்து பல பதிப்புகளாக வெளிவந்தன. இங்குக் கூறப்பட்ட எல்லா அகராதிகளும் கற்றறிந்த ஆங்கிலேயர்களின் உபயோகத்திற்காக வெளியிடப்பட்டதால் ரோமானிய எழுத்திலேயே அச்சடிக்கப்பட்டிருந்தன. எம்.டி. ஆதம்பேக்கரி எழுதிய நூலே தேவநாகரி எழுத்தில் வெளிவந்த முதல் அகராதி ஆகும். அது 1829இல் 'இந்தி அகராதி' என்ற பெயரில் வெளியிடப்பட்டது. இதன்பிறகுதான் இந்திமொழிச் சொற்களுக்கு ஆங்கில அர்த்தமும், ஆங்கில மொழிச் செற்களுக்கு இந்தி அர்த்தமும் கொண்ட அகராதிகளை வெளியிடும் முறை உருவாயிற்று.

எம். டபிள்யூ. ஃபேலேன் என்பவர் இத்துறையில் மிகச் சிறப்பாகப் பணி ஆற்றியிருந்தார். அவர் பல சிறிய அகராதிகளைத் தயாரித்து வெளியிட்டார். வணிகம் தொடர்பாகவும், சட்டம் தொடர்பாகவும் உள்ள சொற்பொருள் அகராதிகளையும் இவரே தயாரித்து வெளியிட்டார். இவரது இந்துஸ்தானி-ஆங்கில அகராதி நூலில் இடம்பெற்ற சொற்கள் முக்கியமாக இந்திமொழிச் சொற்களாகவும், பேச்சு வழக்கில் இருந்த அரபி-பாரசீக மொழிச் சொற்களாகவும் இடம்பெறலாயின. பொருள் ஆங்கிலத்தில் அச்சிடப்பட்டிருந்தன. உதாரணங்கள் ரோமன் எழுத்தில் அச்சிடப்பட்டிருந்தன. இதனைத் தயாரிக்க இவர் அதிகம் உழைத்தார். 1873இல் அரசாங்க உதவியுடன் திரு ராதேலால் அவர்கள் ஒரு அகராதியை வெளியிட்டிருந்தார். பாதரி ஜே.டி. வெட் என்பவர் 1875இல் காசியிலிருந்து தம்முடைய இந்திமொழி அகராதியை வெளியிட்டிருந்தார். இதில் இந்திச் சொற்களின் பொருள் ஆங்கிலத்தில் தரப்பட்டிருந்தது. கல்கத்தா

பள்ளிக்கூட பாடநூல் கூட்டுறவு நிறுவனத்தின் இந்தி அகராதி ஒன்றும் இதே சமயத்தில் காசியிலிருந்து வெளியிடப்பட்டிருந்தது. இதில் இந்திச் சொற்களுக்குரிய பொருள்கள் இந்தியிலேயே தரப்பட்டிருந்தன். வெட் பாதிரியாரின் அகராதி ஒன்றும் சுருக்கிய பதிப்பாக வெளியிடப்பட்டிருந்தது. பாரிஸ் நகரிலிருந்து இந்துஸ்தானி சொற்களுக்குரிய பொருள்கள் பிரெஞ்சு மொழியில் தரப்பட்டு ஒரு கையகராதி வெளியிடப்பட்டிருந்தது.

பார்சி எழுத்தில் 1880இல் சையத் ஜாமின் அலி ஜலால் அவர்கள் 'குல்ஷனேஃபைஜ்' (பூந்தோட்ட லாபம்) என்ற பெயரில் அகராதி ஒன்றினை லக்னோ நகரில் வெளியிட்டார். அதில் இந்திமொழிச் சொற்களே அதிகமாக இடம்பெற்றிருந்தன. 1887ஆம் மிர்ஜாஷாஜாதா கைசர் பக்ஷ் என்பவர் 'கைசர் அகராதி' என்ற பெயரில் அலகாபாத்திலிருந்தும், பண்டிட் மதுசூதன் அவர்கள் 'மதுசூதன் நிகண்டு' என்ற பெயரில் லாகூரிலிருந்தும், ஆங்கில-இந்தி அகராதியைத் தானாபூரிலிருந்து முன்னிலால் அவர்களும் வெளியிட்டிருந்தனர். பள்ளி மாணவர்களுக்காக 1881ஆம் ஆண்டிலிருந்து 1895ஆம் ஆண்டு வரையிலான இடைப்பட்ட ஆண்டுகளில் டி. கெபன் அவர்கள் பல அகராதிகளைத் தயாரித்துவெளியிட்டிருந்தார். 1892இல் பாபா பைஜூ தாஸ் அவர்கள் 'விவேக அகராதி' என்ற பெயரில் பாட்னாவிலுள்ள பாங்கிபூரிலிருந்து வெளியிட்டிருந்தார். இதன் பிறகு பற்பல அகராதிகள் வெளியிடப்பட்டிருந்தன. அவற்றுள் இந்திமொழிச் சொற்களுக்கு இந்தி மொழியிலேயே பொருள்கள் தரப்பட்டிருந்தன. அவற்றுள் 'கௌரி நாகரி அகராதி', 'இந்தி அகராதி' 'மங்கள அகராதி', 'ஸ்ரீதர் அகராதி' போன்றவற்றைக் குறிப்பிடலாம். ஆனால், அவையனைத்தும் சின்னஞ்சிறிய வையாகும். மரபுத்தொடர், பழமொழி தொடர்பான அகராதிகளும் வெளிவந்தன. இத்தகைய எண்ணிறந்த அகராதிகள் வெளியிடப் பட்டிருந்தாலும்கூட, நாள்தோறும் வளர்ந்துகொண்டிருக்கும் இந்தி இலக்கியங்களுக்கேற்ப தக்க பொருள் விளக்கத்தோடு கூடிய, அனைவரும் ஏற்கத்தகுந்த விரிவான அகராதி அவ்வமயம் தோன்றவில்லையென்றே கூறவேண்டியிருந்தது.

இச்சமயத்தில்தான் நாகரி பிரச்சாரிணி சபை மிகப்பெரிய, முழுமையான, அகராதிக்கலையின் அடிப்படையில் ஒரு சிறந்த அகராதியைக் கொண்டுவர வேண்டுமென எண்ணியது. சியாம் சுந்தர்தாஸ் அவர்கள் இதன் முக்கியப் பொறுப்பாளராக இருந்தார். இப்பணி தொடங்கிய பிறகு இவர் எங்கிருந்தபோதிலும் ஜம்மு நகரில் பணிபுரிய காஷ்மீர் சென்றிருந்தபோதும்,

காளிசரண் உயர்பள்ளியில் தலைமையாசிரியராகப் பணிபுரிய லக்னோ சென்றிருந்தபோதும், காசி இந்து பல்கலைக் கழகத்தில் இந்தித் துறையில் பேராசிரியராகப் பணிபுரிந்திருந்தபோதும் தன் பணியில் நன்முறையில் தீவிரமாக ஈடுபட்டிருந்தார் எனக் கூறலாம். அகராதி அமைப்பு முறையைக்கூட அறிவியல் அடிப்படையில் அமைத்து, அகராதிக் கலையின் வளர்ச்சியை மனதிற்கொண்டு அவர் மிக உயர்ந்த நிலையில் அப்பணியைச் சிறப்புறச் செய்தார். இலக்கிய மூலங்களில் இடம்பெற்ற சொற்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுவிட்டன. மற்ற அகராதிகளிலிருந்து இடம்பெற வேண்டியசொற்களும் தொகுக்கப்பட்டுவிட்டன. இது மட்டுமன்று; ஒவ்வொரு துறைக்கும் அதன் தொடர்பான சொற்களைப் பட்டியலிட்டு அனுப்பி, தக்கப் பொருள்களும் அறிந்து முறையாகத் தொகுக்கப்பட்டது. தச்சன் முதலாகப் புகைவண்டி வரை,நகை முதற்கொண்டு வாங்கியவர் வரை, கன்னார் முதலாக சூதாடுபவர் வரை, எண்ணெய் வித்துக்கள் முதலாக இரும்பு வரை, தொழிலாளி முதலாக இன்ஜினீயர் வரை பயன்படுத்தி வருகின்ற எல்லாத் துறைகளுக்கும் தொடர்பான சொற்களைத் தக்கச் சான்றுடனும், விரிவான விளக்கத்துடனும், உலகம் தழுவிய அகராதி நெறிமுறையோடு பொருள்களும், பயன்பாட்டு முறைகளும், இயன்ற அளவு அவற்றின் தோற்றுவாயும்கூடக் கொடுக்கப்பட்டிருந்தன.

எடுத்துக்காட்டிற்காக இந்த அகராதியிலிருந்து இருசொற்களின் பொருட்களை அதில் கொடுத்துள்ளபடி இங்கு எடுத்துக்காட்டுகிறேன். இங்கே, அகராதியின் முதற்சொல்லும், இறுதிச்சொல்லும் கொடுக்கப்பட்டிருக்கிறது:

> அ - சமஸ்கிருதம் மற்றும் இந்திமொழியின் எழுத்துக்களின் முதல் எழுத்தாகும். இதன் உச்சரிப்புக்குரிய இடம் மிடறு ஆகும். எனவே, இதனை மிடற்றெழுத்து என அழைப்பர். மெய் யெழுத்துக்களின் உச்சரிப்பு இதன் துணையின்றி நடைபெற இயலாது. இதிலிருந்துதான் க, ங, ச, ஞ முதலான உயிர்மெய்யெழுத்துக்களின் கூட்டு வடிவம் உருவாக்கிச் சொல்லப்பட்டு வருகிறது.
>
> *சிறப்பு:* எழுத்துக்களில் இது மிகச்சிறப்பாகவும் முதன்மையாகவும் கருதப்படுகிறது. உபநிடதத்தில் இதன் சிறப்பு விளக்கப்படுகிறது. கீதையில் ஸ்ரீ கிருஷ்ணன், 'அக்ஷராணாம் கரோஸ்மி' எனக்

கூறுகிறார். உண்மையில் குரல்வளை செயற்படத் தொடங்கியவுடனேயே குழந்தைகளின் வாயிலிருந்து இந்த எழுத்துதான் வெளிப்படும். இதனால்தான் பெரும்பாலான மொழிகளின் எழுத்துக்களில் முதலிடம் இதற்கு வழங்கப்பட்டு இருக்கிறது. இலக்கணிகள் மாத்திரை வேறுபாட்டின் அடிப் படையில் மூன்று பிரிவாகப் பிரித்துள்ளனர். குறில் - அ; நெடில் - ஆ; புலுதம் - அ உ எனப் பிரித்துள்ளனர். ஒவ்வொன்றும் இரு உட்பிரிவைக் கொண்டவையாகும். அவை சானுநாசிக் மற்றும் நிரனுநாசிக் எனப் பெயர்பெறும். (வாயை அங்காத்து உச்சரிக்கும் உயிரெழுத்துக்களில் சில ஒலிகள் மூக்கொலியோடு கூடி உச்சரிக்கப்படும். அவை சானுநாசிக் அதாவது மிடற்று மூக்கொலி என அழைக்கப்படும். சில ஒலிகள் நேராகவே உச்சரிக்கப்படும். அவை நிரனுநாசிக் எனப்படும். அதாவது மிடற்றொலி என அழைக்கப்படும்). மிடற்று மூக்கொலி எழுத்துகட்கு மேலே புள்ளி (பிறைச்சந்திரன்) இடப்படும். தந்திர சாத்திரங் களுக்கேற்ப எழுத்து வரிசைகளில் அகரம் முதலில் இடம்பெறுவதற்குரிய காரணமாக, 'உயிரினங்கள் தோற்றுவிக்கப்படுவதற்குமுன் நான்முகனின் பேதமற்ற நிலையைச் சுட்டிக் காட்டுவதாக உள்ளது' என்று கூறுவர்.

**ஹிப் (ஹிவிப்)**; பெயர்ச்சொல், ஆண்பால் (ஆங்.) (1) பார்லிமெண்ட் அல்லது திட்டமிட்டு அமைக்கப் பட்ட சபையின் ஒரு உறுப்பினர். இவர்தம் குழுவில் அல்லது கட்சியில் இடம்பெற்ற உறுப்பினர் யாதேனும் சிறப்பு வாய்ந்த தீர்மானத்தின் சார்பாகத் தம் ஆதரவை வாக்குமூலம் வழங்க நேரிடும்பொழுது அனைவரும் தவறாமல் பங்குபெறுமாறு செய்யும் பணியை மேற்கொள்பவர். கட்சி கொறடா, உதாரணம் - இம்முறை மன்றத்தின் சுவராஜ்ய கட்சியின் கொறடாவின் முயற்சியால் கட்சியைச் சார்ந்த எல்லா உறுப்பினர்களும் 12ஆம் தேதி கூட்டத்திற்குத் தவறாமல் வருகை புரிந்திருந்தனர்.

**சிறப்பம்சம்:** 'ஹிப்' எனப்படும் கட்சிக்கொறடா தம் கட்சியைச் சார்ந்த உறுப்பினர்களிடம், 'தக்கச் சமயத்தில் அவையில் கொண்டுவரும் சிறப்பு வாய்ந்த

*தீர்மானத்தின்பேரில் தத்தம் வாக்குரிமையைத் தவறாமல் பயன்படுத்த வேண்டும்' என ஆலோசனை கூறுவார். வாக்கெடுப்பின்போது யாரும் சபையை விட்டு வெளியேறா வண்ணம் பார்த்துக்கொள்வார் (அதாவது, எல்லோரும் சபையில் இருக்குமாறு பார்த்துக்கொள்வார்). தம் கட்சிக்காரர்களிடம் எதற்கு, எப்படி? வாக்குரிமை வழங்கவேண்டுமென்ற ஆலோசனையையும் அவ்வப்பொழுது கூறி வருவார், வாக்கெடுப்பின்போது எல்லா உறுப்பினர்களும் உள்ளனரா எனச் சோதித்துப் பார்ப்பார். எப்பொழுதும் தம் கட்சி உறுப்பினர்களிடம் தொடர்புகொண்ட வண்ணம் இருப்பார். அவையில் நடைபெறும் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் நன்கு கவனித்து, அவ்வப்பொழுது கட்சித் தலைவர்க்கு எடுத்துக்கூறி, செய்யவேண்டிய பணிகளை எடுத்துக் கூறுவார். இவர் துணையோடுதான் கட்சித் தலைவர் ஒவ்வொரு நிகழ்ச்சியையும், தீர்மானத்தையும் பரிசீலித்துத் தம் கட்சியின் மேன்மைக்குத் தக்கபடி அவற்றைப் பயன்படுத்தி வருவார். சுருக்கமாகச் சொல்லப்போனால், கட்சியின் நலங்கருதியும், வளர்ச்சியை மனதிற்கொண்டும் ஆரோக்கியமான பணிகளை மேற்கொண்டு கட்சியின் உறுப்பினர் களைக் கண்காணிப்பதே 'ஹிப்' எனப்படும் கட்சியின் கொறடாவின் பணியாகும். (2) சவுக்கு அல்லது சாட்டை; (3) கோச்சு வண்டிக்காரன்."*

இத்தகைய பணி எந்த அளவிற்கு மிகச் சிறப்பாகவும், அறிவியல் அடிப்படையிலும், விரிவாகவும் அமைந்திருந்ததோ, அந்த அளவிற்கு வேறு எந்த நவீன மொழிகளிலும் இதுபோல அன்று உருவாக்கப்படவும் இல்லை. இப்பணி நம்நாட்டு மொழிகளிலேயே செய்யப்பட்ட முதற்பணி மட்டுமன்று; உயர்நிலையில் போற்றப்படும் உலகத்தின் உன்னத மொழிகளுக்குச் சமமாக இந்திமொழிக்கும், புகழும் - பெருமையும் கிடைப்பதற்குரிய வழியை வகுத்ததென்று கூறினாலும், அது மிகையாகாது. இப்பணி எல்லாவற்றிலும் மிகச்சிறந்த பணியாகவும் புதியதாகவும் கருதப்பட்டது. சர். ஜார்ஜ் கிரியர்சன், டாக்டர். ஹார்னலி, பேராசிரியர் சிம்மன் லெவி, டாக்டர். கங்காநாத்ஜா போன்ற பேரறிஞர்கள் இப்பணியைப் பெரிதும் பாராட்டினர். இந்த அகராதியில் இந்திமொழி மற்றும் இலக்கியம் தொடர்பான சொற்கள் மட்டுமன்று; தத்துவம், சோதிடம், மருத்துவம்,

கட்டிடக்கலைத் தொடர்பான கலைச்சொற்களும் கூட இடம்பெற்றிருந்தன. கிளைக்கதைகள், புராணக்கதைகளில் இடம்பெற்ற மாந்தர்கள் பற்றிய விவரங்களும் கொடுக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு சொற்களுக்குரிய சமமான சொற்களும், அது பயன்படுத்தப்படும் முறையும், சொற்பொருளும், நன்முறையில் அமைக்கப்பட்டிருந்தன.

இத்தகைய மிகப்பெரிய நற்செயல் இந்திமொழி உலகில் இதற்கு முன்பு ஒருபோதும் உருவானதில்லை. இதன் முழு வெற்றிக்குரிய பொறுப்பாளராகத் திகழ்ந்தவர் சியாம்சுந்தர் தாஸ். அவர் ஆற்றிய நற்பணி அவரது திறமைக்கும் தலைமைப் பண்பிற்கும் மிகச்சிறந்த உதாரணமாகத் திகழ்ந்ததெனலாம்.

## இந்திமொழியில் பல்துறை அறிவு - அறிவியல் தொடர்பான சொற்களஞ்சியம் தயாரித்தல்:

இந்திமொழி, பல்துறை அறிவு - அறிவியல் தொடர்பான இலக்கியங்களையும் பெற்றிருந்தால் ஒழிய வளர்ச்சிபெற இயலாது என்பதை அவர் தொடக்கத்திலிருந்தே உணர்ந்திருந்தார். நாட்டின் மேம்பாட்டிற்கு அறிவியல் இலக்கியங்கள் மொழிபெயர்த்தோ, புதியதாகப் படைத்தோ இந்திமொழிக் களஞ்சியம் நிறைவு பெறுமாறு செய்தால்தான் உலக இலக்கியத்திற்குச் சமமாக இந்திமொழி இலக்கியங்களும் பெருமைபெற இயலும். எனவே, அறிவியல் இலக்கியங்களைக் கொண்டு இந்திமொழிக்குரிய களஞ்சியங்களை உடனடியாக நிரப்பிவிட வேண்டுமெனப் பெரிதும் விரும்பினார். 'நாகரி பிரச்சாரிணி சபை' தொடங்கிய காலந்தொட்டு அறிவியல் தொடர்பான கட்டுரைகளைப் பலரும் எழுதுமாறு முயற்சி செய்தார். இப்பணிக்குப் பெருந்தடையாக இருந்தது இந்திமொழியில் நிலவியிருந்த கலைச்சொற்களின் பற்றாக்குறையே. இதன் தொடர்பான வேதனையையும், வருந்தத்தக்க நிலையையும் சியாம்சுந்தர் தாஸ் அவர்கள் கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டுள்ளார்:,

"யாரையேனும் எப்பொழுதாவது அணுகி அறிவியல் தொடர்பான நூலொன்று எழுதித்தாருங்கள் எனக் கேட்டால், உடனடியாக அவரிடமிருந்து, 'அதற்குத் துணைபுரியும் கலைச் சொல் அகராதி தயாரிக்கப்பட்டுவிட்டால், அப்பணி எளிதாக முடிவடையும்' எனக் கூறுவர்".

இந்த இழிநிலைப்பற்றி எடுத்துக்கூறும்பொழுது மேலும் அவர் கூறுவார்:

"பதஞ்சலி தன் மகாபாஷ்யத்தில், 'எவரும் இலக்கணியின் இல்லத்திற்குச் சென்று நீர் புதிய சொற்களை உருவாக்கித் தாரும், நான் அதனை நன்கு பயன்படுத்திக் காட்டுவேன்' எனக் கூறமாட்டார்" என்று குறிப்பிடுவர். இன்று நம் நாட்டில் பதஞ்சலி கூறிய கூற்றுக்கு எதிர்கருத்து வலுப்பெற்று விளங்குவதுபோல் தோன்றுகிறது. நன்கு கற்றறிந்த மேதைகள் நாகரி பிரச்சாரிணி சபையிடம் வந்து, 'சொற்களை உருவாக்குங்கள்! நாங்கள் அதனைப் பயன்படுத்தி மொழியையும், இலக்கியத்தையும் செழிப்புடையதாக்குவோம். அத்தகைய சொற்களஞ்சியத்தைக் கொண்டு முன்னேறிவரும் மேலைநாட்டுக் கருத்துக்களோடும், இலக்கியங்களோடும் உறவாடும்படிச் செய்து பெருமைபெறச் செய்வோம்' என்று கூறிவருகின்றனர்".

பேரறிஞர்களின் ஆற்றல் பின்தங்கிக் கிடந்த நேரத்தில் சியாம்சுந்தர்தாஸ் இவ்வாறு தம் கருத்தை வெளிப்படுத்தி உற்சாகப்படுத்த முயன்றார். இப்பணியில் அவரும் நாகரி பிரச்சாரிணி சபாவின் சார்வில் 1898 ஆம் ஆண்டு முதன்மைத் தொகுப்பாசிரியர் பொறுப்பில் இருந்தபடி நன்கு முயன்று அதனை நிறைவேற்றும் பணியைத் தீவிரமாகக் கவனிக்கத் தொடங்கினார். எப்பொழுது இந்திமொழியானது உயர்தொடக்கப் பள்ளி வரை பாடமொழியாக நடைமுறையில் இருந்துவந்ததோ அப்பொழுது இப்பணி தொடங்கப்பெறலாயிற்று. புவியியல், வானியல், கணிதம், அரசியல், தத்துவசாத்திரம், பௌதிகம், வேதியல், மனத்தத்துவம், மதம் ஆகியவற்றின் தொடர்பான கலைச்சொற்கள் உருவாக்கும் பணி தொடங்கப்பட்டபொழுது, வங்காள சாகித்ய பரிஷத் மட்டும் புவியியல், வேதியியல் தொடர்பான சொற்களைத் தொகுத்துக் கலைச்சொல் அகராதியை வெளியிடும் பணியில் கவனம் செலுத்திக் கொண்டிருந்தது. இந்தக் கலைச்சொல்லகராதி இந்திமொழிக்கு மட்டுமன்று, நாட்டின் எல்லா மொழிக்கும் பயன்படும் முறையில் தயாரிக்கப்பட வேண்டுமென்ற மிகச்சிறந்த கண்ணோட்டம் சியாம்சுந்தர்தாஸ் அவர்களிடம் நிலவியிருந்தது, இப்பணிக்கென அவர் மகாமகோபாத்யாய பண்டிட் சுதாகர் துவிவேதி, மகாவீர் பிரசாத் ஆகிய நுண்மாண் நுழைபுலத்திறன் கொண்ட பேரறிஞர்களின் பேருதவியை நாடினார்.

அவர்கள் அனைவரும் சியாம்சுந்தர்தாஸ் அவர்களின் கண்ணோட்டம், செயல்முறை ஆகியவற்றை நன்கு அறிந்தவர்கள். எனவே, அவர்கள் அறிவியல் நெறிப்படி சொற்களைத் தொகுக்க வெப்ஸ்டர் ஆங்கில அறிவியல் அகராதியிலிருந்து சொற்களைத் தேர்ந்தெடுக்கும் பணியைத் தொடங்கலாயினர். ஒவ்வொரு சொல்லிற்கும் தனித்தனியாக அட்டை தயாரிக்கப்பட்டது. பிறகு அவை இனம்வாரியாகப் பிரிக்கப்பட்டு அகரவரிசைப்படுத்தப்பட்டு அவற்றிற்குச் சரியான இந்திச்சொற்களைத் தயாரிப்பதற்காக அந்தத் துறையில் நற்பயிற்சி பெற்றிருந்த நல்லறிஞர்களிடம் அனுப்பப்பட்டது. புவியியல், - வேதியியல் தொடர்பான சொல்லகராதி மட்டும் வங்கமொழியில் ஏற்கனவே தயாரித்து முடித்து வைத்திருந்த சொற்களை ஆதாரமாக எடுத்துக்கொண்டு இந்தியில் தயாரித்து முடித்துவிட்டனர். அதனால், நாட்டில் அறிவியல் சொல்லகராதியின் பயன்பாட்டு முறை ஒன்றுபோல் அமைய வழிபிறந்தது. சொற்கள் தயாரிக்கும் பணிகள் முடிந்தவுடனேயே சரிபார்க்கும் பணிக்காகப் பேராசிரியர் டீ.கே. கஜ்ஜர், என்.டீ. ராணடே, பேராசிரியர் ஏ.சி. சான்யால், பண்டிட் விநாயகராவ், லாலா குஷிராம் மற்றும் பகவதி சகாய் போன்ற மொழியிலும், அறிவியலிலும் நல்லறிவைப் பெற்ற அறிஞர்கள் குழு ஒன்று அமைத்துக் கூட்டப்பட்டது.

இப்பணி வங்காளம், இந்தி ஆகிய மொழிகளில் நிறைவு பெற்ற பிறகு குஜராத்தி, மராட்டி மொழிகளிலும் இத்தகைய முயற்சி மேற்கொள்ள வசதி செய்யப்பட்டது. நான்கே ஆண்டுகளில் இப்பணி வெற்றிகரமாக நிறைவுபெற்று முதன் முதலாக 1906ஆம் ஆண்டில் இந்தக் கலைச்சொல்லகராதி வெளியிடப்பட்டது. வெளியீட்டிற்கு முன்பு முறைப்படுத்தும் பணிக்காக ஒரு துணைக்குழு அமைக்கப்பட்டது. இதில் வட்டாரக் கல்வித் துறையும் உதவும் பொருட்டு இடம்பெறுமாறு செய்யப் பட்டது. அகில இந்திய அளவில் அறிவியல் அறிஞர்க்ளையும், மொழி அறிஞர்களையும் கொண்டு முழுமையாகத் தக்க முறையில் பரிசோதிக்கப்பட்டு திருத்தங்களும், சேர்க்கைகளும் இடம்பெறச் செய்தனர். இறுதி வடிவம் கொடுக்கப்பட்டு அச்சிடப்பட்டு 1906ஆம் ஆண்டு பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வெளியிடப்பட்டது.

அதுவரை கிடைத்த சொற்களை முறைப்படுத்தி ஆங்கிலச் சொற்களுக்கு இணையான இந்திசொற்கள் தவிர, கூடுதலாகவும் சுமார் 5000 சொற்களுக்கு மேல் தக்கச் சான்றுகளுடன்

இடம்பெறச் செய்து அந்தக் கலைச்சொல்லகராதி தயாரிக்கப் பட்டது. அதில் கீழ்க்கண்ட முறைப்படிச் சொற்கள் எட்டு வகையாகப் பிரிக்கப்பட்டு நன்முறையில் அமைக்கப்பட்டிருந்தது:

| விபரம் | ஆங்கிலச்சொற்கள் | இந்திச்சொற்கள் |
|---|---|---|
| கணிதம் | 943 | 115 |
| வானியல் | 731 | 882 |
| புவியியல் | 457. | 532 |
| அரசியல்; பொருளாதாரம் | 1320 | 2115 |
| வேதியியல் | 1220 | 1443 |
| இயற்பியல் | 1267 | 1980 |
| தத்துவம் தொடர்பானவை | 3511 | 7198 |
| மொத்தம் | 9449 | 14265 |

கலைச்சொல்லகராதி வெளியிட்ட பிறகு நாட்டில் பல மாநிலங்களிலும் உள்ள 33 முக்கியமான மொழி அறிஞர்களிடமும், அறிவியல் அறிஞர்களிடமும் மறு ஆய்விற்கென அனுப்பப்பட்டது. இருகுழு அமைக்கப்பட்டுப் பம்பாய், கல்கத்தா மற்றும் பூனாவிலுள்ள அறிவியல் அறிஞர்களின் அபிப்பிராயங்கள் கேட்கப்பட்டன. பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் கல்கத்தா சென்று அங்குள்ள மேன்மைமிகு ஜெகதீஸ் சந்திரபோஸ், டாக்டர். பிபுல்லசந்திரராய் மற்றும் ராமேந்திர சுந்தர் திரிவேதி ஆகியோரைச் சந்தித்து அவர்களுடைய அபிப்பிராயங்களைக் கேட்டறிந்தார். இம்மூவரும் தமக்குரிய துறையில் பெரும் மேதைகளாகத் திகழ்ந்தனர். கல்வித் துறைகளுக்கும் பயன்படுத்துவதற்காக இந்த அகராதி அனுப்பப்பட்டது. பிறகு இந்நூலுக்குரிய திருத்தம் - மாற்றம் தொடர்பாக ஒரு துணை நூலும் வெளியிடப்பட்டது. அதில் ஆங்கிலச் சொற்கள் 10,330 ஆக அதிகரித்துவிட்டன. இந்திமொழிக் கலைச்சொற்கள் கிட்டதட்ட 16,269 ஆக அதிகரித்துவிட்டன. இத்தகைய பணிக்குரிய பாராட்டுகள் பாரதத்தில் மட்டுமன்று; இங்கிலாந்திலுள்ள சயின்ஸ் மேகஜின் என்னும் பத்திரிக்கைக்கூடச் சிறப்பாகக் குறிப்பிட்டுத் தன் பாராட்டுதலைத் தெரிவித்திருந்தது. இந்த அகராதி மீண்டும் நன்கு திருத்தம் பெற்று, காசி இந்து பல்கலைக் கழகத்தின் பேராசிரியர்களின், துணையோடு நல்ல பதிப்பாக வெளிவந்தது. அதற்கும் நம் பாபு சியாம்சந்தர்தாஸ் அவர்களே பதிப்பாசிரியராக இருந்து நற்பணியாற்றினார். நம்நாடு

சுதந்திரம் பெற்ற பிறகு மக்களவையில் இந்திமொழி ஆட்சிமொழியாக அறிவிக்கப்பட்டவுடனேயே இதனை மேலும் பயனுடையதாக்கும் நோக்கோடு 'அறிவியல் மற்றும் தொழில் நுட்பக் கலைச்சொல்லகராதிக் குழு' ஒன்றினை நியமித்து ஆவன செய்ய முனைந்த செயலைக் கொண்டு இப்பணி எந்த அளவிற்குச் சிறப்பு வாய்ந்திருந்ததென்பதை அறுதியிட்டுச் சொல்லலாம்.

இதன் நிறுவனத் தலைவர் டாக்டர் டீ.எஸ். கோத்தாரி அவர்கள்கூட நம் சியாம்சுந்தர்தாஸ் மேற்கொண்ட கோட்பாட்டினையே ஆதாரமாகக் கொண்டு இப்பணியைச் செய்யத் தொடங்கினார் எனலாம். இன்று அக்காலத்தில் அறிவியல் தொடர்பான கருத்துக்களும், அதனைக் கண்டறியத் துணைபுரிந்த துணைக் கருவிகளும் மலைக்கும் மடுவிற்குமுள்ள வேறுபாட்டுடன் காணப்படுகிறது. இருப்பினும்கூட, பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்களின் தொலைநோக்கும், பரந்த அறிவும் ஓர் அறிவியல் அறிஞனைப் போலச் செயற்பட வைத்து வெற்றிகாண வைத்ததென்பதை அவர்தம் பணியின் எதிரொலியால் கண்டறிய முடிந்தது. கலைச்சொல்லகராதிக் குழுவின் பக்கபலமாக இந்திய அரசே நின்றிருந்தது. நாடு முழுவதும் பரவியிருந்த மேதைகளின் பேருதவியும் கிடைத்தன. பொருளாதாரக் குறைபாடும் ஏற்படவில்லை. ஆனால், அடிமைப்பட்டு உழன்றுகிடந்த சமயத்தில், இந்தியை ஆதரிப்பது தவறென நினைக்கப்பட்ட காலத்தில், யாதொரு வசதியும் இல்லாத சூழ்நிலையில் இளைஞன் ஒருவன் அப்பணியை சிரமேற்கொண்டு முறையாகச் செய்து முடித்த அந்த மிகப்பெரிய பணியின் மகத்துவத்தை யாரும் எளிதில் புரிந்துகொள்ள முடியும் என்றே கூறவேண்டியுள்ளது. அவருடைய பதிப்பாசிரியர் பொறுப்பில் கண்டறிந்து வெளியிடப்பட்ட கலைச்சொற்களே அதிகாரப்பூர்வமாக அமைந்து, எல்லோராலும் பேசப்பட்டு வருகிறது என்பதற்கு, அதன் பிறகு அமைக்கப்பட்ட அறிவியல் கலைச்சொல்லகராதிக் குழுவினரால் பரிசீலிக்கப்பட்டு வெளியிடப்பட்ட கலைச்சொல்லகராதியும்கூட அந்தப் பழைய அகராதியையே தக்கச் சான்றாகவும், அடிப்படையாகவும் அமைத்துக் கொண்டு உருவாக்கிய நிலையே சான்றாதாரம் ஆகும் எனலாம். டாக்டர் ரகுவீர் அவர்கள் மூலமாக மத்தியப் பிரதேச அரசின் உதவியோடு இந்திய அரசு செய்வதற்கு முன்பே தனிப்பட்ட முறையில் தன்னிச்சையாக செய்யப்பட்டு வெளிவந்த நூல் ஒன்றுகூட உண்டு; ஆனால் அது ஏற்புப் பெறவில்லை. சியாம்சுந்தர்தாஸ் பொறுப்பேற்றுச் செய்த அப்பணியானது என்றும் பயன்பாட்டிலிருந்து மறைந்துவிடக்கூடியதன்று; மேலும்,

தன்னையே அப்பணிக்கு அர்ப்பணித்து முழுமூச்சுடன் செய்த பணியாதலால் மிகச்சிறப்பாகவும், பெரியதாகவும் கருதப்பட்டு வருகிறது. அவர்தன் பேராற்றலை உலகறியச் செய்த பெருஞ்செயலாக அதனைக் கருதத் தேவை யில்லை. ஆனால், வாழ்வில் அனைவருக்கும் பயனளிக்கக்கூடிய ஒரு பெரும் பணியாக அதனை மேற்கொண்டு செய்ததே நினைக்கத்தக்கதெனலாம். அதன் காரணமாகத்தான் அனைவராலும் இன்றும் போற்றப்பட்டு வருகிறது. உள்ளத்தை தன்பால் ஈர்க்கும் மிகப்பெரிய இப்பணியை மேற்கொண்டு முடித்ததன் மூலம் பாபு சியாம்சுந்தர் தாஸ் அவர்களின் மேலாண்மை நன்கு புலப்பட்டுக் கொண்டிருக்கிறது எனலாம். காலத்தை வென்ற அத்தகைய புனிதப்பணி நம்நாட்டு மொழிகளுக்கிடையே முதல்முதலாக இவரால்தான் செய்து முடிக்கப்பட்டது என்ற உண்மையை உணருவார்க்கு இவர்தம் மேலாண்மை நன்கு புலப்படக்கூடும். நம்நாட்டு மொழிகள் நவீன இந்தி மொழியிடமிருந்து இதைப் பெறுவதையே முதற்பணியாகக் கருதின எனலாம். இதனுடைய ஒரு பதிப்பு கன்னட மொழியில் வெளியிடப்பட்டது. குஜராத்தி, மராத்தி மற்றும் வங்காள மொழிகளில் உருவான அகராதிகள் இந்த நூலின் சொற்களை ஏற்று, இதனைப்போல அமைத்து வெளியிடப்பட்டதென்பர். தமிழ்மொழியில் அதன்பிறகு உருவான அறிவியல் சொற்களஞ்சியம் என்னும் நூல்கூட இந்த நூலின் உதவியைப் பெரிதும் விரும்பி ஏற்றது. 'சப்தசாகர்' எனப்படும் நூலின் பெருமைகூட இதேயளவினதாகும். இவ்வாறு அவர் நவீனமயமான தத்துவ அறிவியல் தொடர்பான சொற்களைத் தொகுத்துக் கொடுத்ததன் மூலமாக நாட்டில் இந்திமொழியை அதற்குரிய சிறப்புவாய்ந்த கௌரவமான இடத்தில் அமர்த்துவதில் மாபெரும் வெற்றி பெற்றார் என்று சொன்னால் அது மிகையாகாது.

## பல்துறை அறிவு - அறிவியல் தொடர்பான இலக்கியப்படைப்பு

கலைச்சொல்லகராதி படைத்து வெற்றி பெற்றதைக் கண்டு மகிழ்ந்து அவர் மௌனமாக அமர்ந்துவிடவில்லை. அடுத்தபடியாக, இதனை மேலும் வளர்த்து பயன்பெறத்தக்க நன்முயற்சியில் ஈடுபட்டார். அறிவியல் மற்றும் இலக்கியத்தில் இடம்பெற்ற பல துறைகளிலும் இத்தகைய கலைச்சொற்கள் முறையாகப் பயன்படுத்தப்பட்டு தமது அர்த்தச் சிறப்பை வெளிப்படுத்தி வரவேண்டுமென்ற மிகப்பெரிய எண்ணத்தையும் உருவாக்கி, அதற்குரிய செயலையும் செய்யத் தொடங்கினார்.

'மனோரஞ்சன் புத்தகமாலா' என்ற பெயரில் நூல் பதிப்பிக்கும் ஒரு முறையைச் சபையில் தொடங்கிவைத்தார். இந்திமொழியில் பலவித விஷயங்களைக் கொண்ட ஒரு வடிவிற்குட்பட்ட நூல்கள் பலவற்றை வெளியிடும் திட்டத்தைத் தீட்டினார். எந்தெந்தத் துறைகளின் தொடர்பாக உள்ள கலைச்சொல்லகராதி உருவாக்கப்பட்டதோ, அத்துறைகளுக்குரிய நூல்கள் வெளியிடும் பணியும் தீவிரமாக்கப்பட்டது. அறிஞர்களைக் கொண்டு மொழிபெயர்ப்பு நூல்களையும், புதிய நூல்களையும் எழுதச்செய்து வெளியிடத் தொடங்கினார். அவையனைத்தும் இயற்பியல், பொருளாதாரம், மனத்தத்துவம், வரலாறு, சமய நூல் போன்றவையாக அமைந்திருந்தன. இவ்வாறு, அவர் அறிவியல் தொடர்பான நூல்களை வெளியிடும் ஒரு புதிய முயற்சியையும் இந்தித் துறையில் தொடங்கிவைத்தார். இத்தகைய, சமூகநோக்கின் அடிப்படையில் செய்யப்பெற்ற நல்முயற்சி இந்திமொழித் துறையில் இதற்கு முன்பு எங்கும் தொடங்கப்படவில்லையென்றே கூறவேண்டும். இத்தகைய பணிவேறு எந்த இந்திய மொழியிலுங்கூட நடைபெறவில்லையென்றே கூறலாம். இந்த 'மனோரஞ்சன் புத்தகமாலை' பணிக்கும் இவரே முக்கிய பதிப்பாசிரியராகத் திகழ்ந்தார். இவருடைய பொறுப்பில் வெளிவந்த நூல்களின் பெயர்களாவன:

*(1) ஆதர்ஷ் ஜீவன் (இலட்சிய வாழ்வு), (2) ஆத்மோத்தார் (ஆன்ம ஈடேற்றம்), (3) குரு கோவிந்த்சிங், (4) ஆதர்ஷ் ஹிந்து (இலட்சிய இந்து), (5) ராணா ஜங் பகதூர், (6) பீஷ்ம பிதாமகர், (7) ஜீவன் கே ஆனந்த் (வாழ்வின் இன்பம்), (8) பௌதிக் விஞ்ஞான் (இயற்பியல் விஞ்ஞானம்), (9) லால் சீன், (10) கபீர் வசனாவளி, (11) மகாதேவ் கோவிந்த ராணடே, (12) புத்ததேவர், (13) மிதவ்யய் (சிக்கனம்), (14) சிக்கோங் கா உத்தான் ஔர் பதன் (சீக்கியர் எழுச்சியும் வீழ்ச்சியும்), (15) வீர்மணி (வீரமணி), (16) நெப்போலியன் போனபார்ட், (17) ஷாசன்-பத்ததி (ஆட்சிமுறை), (18)-(19) ஹிந்துஸ்தான் (இந்துஸ்தானம்), (20) மகரிஷி ,சுகராத் (சாக்ரடீஸ்), (21) ஜியோதிவிநோத் (ஜோதி விநோதம்), (22) ஆத்ம நிரீக்ஷன் (மனக்கட்டுப்பாடு), (23) சுந்தர்சார், (சுந்தரசாரம்). (24)-(25) ஜர்மனி கா விகாஸ் (ஜெர்மனியின் வளர்ச்சி), (26) க்ருஷி கௌமுதி (உழவின் சிறப்பு), (27) க்ர்த்தவ்ய சாஸ்த்ர (கடமை சாத்திரம்), (28)-(29) முசல்மானி ராஜ்ய கா இதிகாஸ் (இஸ்லாமிய நாட்டு வரலாறு), (30) மகாராணா ரணஜீத்சிங், (31)-(32) விஸ்வ பிரபஞ்ச் (உலகப் பிரபஞ்சம்), (33) அகல்யாபாய் ஹோல்கர்,*

*(34) இராமசந்திரிகா, (35) ஐதிஹாசிக் கஹானியாங் (வரலாற்றுக் கதைகள்), (36)-(37) ஹிந்தி நிபந்த் மாலா (இந்திக் கட்டுரை மாலை), (38) சூர் சுதா, (39) கர்த்தவ்ய (கடமை).*

இவற்றுள் புதிய படைப்புகளும் உள்ளன; மொழிபெயர்ப்பு நூல்களும் உள்ளன. ஆயினும், அவை மானுட வாழ்வின் பலதுறை சம்பந்தப்பட்ட கருத்துக்களைக்கொண்ட நூல்கள் என்பதில் ஐயமில்லை. இந்நூல்களை எழுதியோர் அத்துறையில் நுண்மாண் நுழைபுலத்திறனுடையோராவர். அவர்கள், இராமச்சந்திர சுக்லா, இராமச்சந்திரவர்மா, துவாரகா பிரசாத் சதுர்வேதி, டாக்டர். வேணி பிரசாத் மேத்தா, லஜ்ஜாராம் சர்மா, சிவநந்தன் சகாய், நந்தகுமார் தேவசர்மா, புரோகித்ஹரநாராயண் சர்மா முதலியோர் ஆவர். இந்நூல்கள் அனைத்தும் பெரிதும் பாராட்டிப் போற்றப்பட்டதோடு இன்றும்கூட பலநூல்கள் விருப்பத்தோடு படிக்கப்பட்டு வருகின்றன. இவை டாக்டர். சியாம்சுந்தர்தாஸ் அவர்களின் பெருமுயற்சியால் உருவான சாதனையின் பிரதிபலிப்பேயாகும்.

## இலக்கியம் மற்றும் ஆய்வுப் பத்திரிக்கைகள் மேன்மையுறச் செய்தவர்

எந்த நேரத்தில் இத்தகைய பணியைப் பாபு சியாம்சுந்தர்தாஸ் செய்துவந்தாரோ, அப்பொழுது இந்திமொழியில் துப்பறியும் நாவல், கட்டுரை, நகைச்சுவை நாடகம் தவிர உரைநடையில் இலக்கியத்தரம் வாய்ந்த தத்துவம், அறிவியல் தொடர்பான ஆக்கப்பணிகளுக்கு உதவும் வகையில் எத்தகைய சிறப்பு வாய்ந்த பணியும் நடைபெறவில்லையென்றே கூறலாம். எந்த ஒரு மொழியும் உணர்வுபூர்வமான இலக்கியத்தை மட்டும் முன்வைத்து தேசிய மொழியாகிவிட முடியாது. அது எல்லாத் துறைகளிலும் நிறைவான அனைத்துக் கலைகளிலும் பரிபூரணம் பெற்றிருக்க வேண்டும். மேலும், செய்யுளும் உரைநடையும் ஒரே மொழி நடையையுடையதாகவும் இருக்க வேண்டும். ஆனால், அப்பொழுது இந்திமொழிக்குரிய 'உரைநடை கடீபோலியாகவும், செய்யுள் விரஜபாஷையாகவும் இருந்துவந்தது.

இருவேறுவகைப்பட்ட நிலையால் உருவாகும் ஒழுங்கீனத்தால் எல்லாம் பொருளற்றதாகிவிடும். மொழிப் பயன்பாட்டு முறையில் இத்தகைய இருவேறு வகைப்பட்ட நடைமுறை போற்றப்பட்டு வந்தது. இத்தகைய சூழலில் இத்தவறினைச் சுட்டிக்காட்டி ஒருமைப்பாட்டை உருவாக்க இந்திமொழியில் பத்திரிக்கைகளை வெளிவரச் செய்து இந்தித்

தொடர்பான எல்லாத்துறைகளிலும் பணிபுரிவோர்க்கு; சிறப்பாகக் கல்வித்துறையில் பணிபுரிவோர்க்கு இதன் மூலம் தக்க அறிவைப் புகட்டி, எழுத்தில் மொழிநடைக்குரிய ஒரே நிலையை உருவாக்க வேண்டுமென்ற எண்ணம் நிலவுமாறு செய்தார். இத்தகைய பணியை மேற்கொள்ள முயன்றபோது இருவகைப்பட்ட பத்திரிக்கை படிப்போர் அவர் பார்வையில் பட்டனர். ஒருவகையினர் சாதாரண அறிவுடையோர்; மற்றொரு வகையினர் தெளிந்த சிந்தையோடு கூடிய நல்லறிவு வேட்கை கொண்டோராவர். இத்தகையோர் பெற்ற உணர்வின் தராதரமும் உயர்வாகவே அமைந்திருக்கும். இதற்கேற்ப அவர் 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் சபையின் மூலம் 'நாகரி பிரச்சாரிணி பத்திரிக்கை' என்ற பெயரில் ஒரு பத்திரிக்கையை வெளியிட முயன்றதோடு தாமே அதன் பொறுப்பாளராகவும் பதிப்பாசிரியராகவும் இருந்து செயற்பட்டார்.

1896ஆம் ஆண்டு ஜனவரி 3ஆம் நாள் சபாவின் செயற்குழு இந்தியின் புகழ்வாய்ந்த துப்பறியும் நாவலாசிரியர் பாபு தேவகிநந்தன் கத்ரி அவர்களின் வேண்டுகோளுக்கிணங்க 'திறனாய்வு' என்ற பெயரில் சபாவின் சார்பாக ஒரு பத்திரிக்கை வெளியிட வேண்டுமென்ற தீர்மானத்தையும் இயற்றியது. இந்தப் பத்திரிக்கையின் மூலம் வெளிப்படும் ஆய்வுக்கட்டுரைகளின் வாயிலாக எழுத்தாளர்களுக்கு நல்ல எழுச்சியை உருவாக்கி அவர்களின் சிந்தனை, மொழி, நடை அனைத்தும் நல்வழியில் வளர்ச்சியுற தக்க வழிகாட்ட வேண்டுமென்பதே ஸ்ரீகத்ரி அவர்களின் நோக்கமாக இருந்தது. சபாவின் பொதுக்குழு 1896 ஜனவரி 6 ஆம் நாள் கூடியபொழுது இதற்கு எதிரான கருத்தை டாக்டர்சியாம்சுந்தர்தாஸ் அவர்களே எழுப்பினார். இத்தகைய கண்டனத் தீர்மானம் வேறு எந்த வேறுபாட்டின் அடிப்படையிலும் அமையாமல், அதன் சித்தாந்தத்தின் அடிப்படையிலே அமைந்திருந்தது. இதன் காரணமாக அத்திட்டம் சிலகாலம் நிறுத்திவைக்கப்பட்டு, மீண்டும் அதே ஆண்டு மே மாதம் 11 ஆம் நாள் ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப்பட்டு சூன் மாதம் முதல் பத்திரிக்கை வெளிவரத் தொடங்கியது. பத்திரிக்கையின் பெயர் 'நாகரி பிரச்சாரிணி பத்திரிக்கை' என வைக்கப்பட்டு, டபுள் டெமி 48 பக்க அளவில் வெளியிட நிச்சயிக்கப்பட்டது. இதன் எல்லாப் பொறுப்பினையும் டா. சியாம்சுந்தர்தாஸ் அவர்களே ஏற்றிருந்தார். பத்திரிக்கையில் வெளியிட வேண்டிய விஷயங்களும் உறுதி செய்யப்பட்டன. வரலாறு, இலக்கியம், மொழியியல், புவியியல், தொல்பொருள்,

கல்வி தொடர்பான எல்லாச் செய்திகளும் வெளியிட்டு வருவதென முடிவு செய்யப்பட்டது. தேவகிநந்தன் கத்ரி அவர்கள் திறனாய்வுச் செய்திகள் மட்டும் வெளியிட விரும்பினார். ஆனால் டாக்டர். சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் இலக்கியம் தொடர்பாகவும், பிற துறை தொடர்பாகவும் உள்ள எல்லா விஷயங்களையும் வெளியிட வேண்டுமென விரும்பினார். சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் காலத்தின் தேவையறிந்து அதற்கேற்ப செயற்படவேண்டும் என்ற இந்த எண்ணமானது அவரது இந்திமொழியின் வளர்ச்சி பரவலாக எல்லாத் துறையிலும் அமையவேண்டும் என்ற நல்லெண்ணத்தில் அமைந்த ஒன்றாகும்.

இந்தி இலக்கிய வளர்ச்சிக்கு உதவும் நோக்கோடு புத்தம்புதியதாக ஒரு காலாண்டுப் பத்திரிக்கை 1896ஆம் ஆண்டு சூன் மாதம் தொடங்கப்பட்டது. இதன் முதல் வெளியீட்டில் கீழ்க்கண்ட எட்டு கட்டுரைகள் அச்சிடப்பட்டிருந்தன:

(1) கேது நட்சத்திரத்தின் சுருக்கமான வரலாறு
(கோபால் பிரசாத் கத்ரி)

(2) திறனாய்வு (பண்டிட் கங்கா பிரசாத் அக்னிகோத்ரி)

(3) ஐரோப்பிய மக்களிடையே சமஸ்கிருதத்தின் பிரச்சாரம்
(இராய்பகதூர் லட்சுமிசங்கர் மிஸ்ரா, எம்.ஏ.)

(4) பாரதநாட்டின் ஆரிய தேச மொழியின் வட்டாரப் பிரிவும் அதனிடையே நிலவிய உறவும்
(சியாம்சுந்தர்தாஸ், பி.ஏ.)

(5) அற்புதமான ஒளிக்கிரணம்
(பண்டிட் லோக்நாத் திரிபாடி, பி.ஏ.
பாபு கிருஷ்ணா பல்தேவ் வர்மா)

(6) திறனாய்வுக் கொள்கை
(பாபு ஜெகந்நாத்தாஸ் 'ரத்னாகர்', பி.ஏ.)

(7) கவிஞர் போப் வாழ்க்கை வரலாறு
(பாபு ஜெகந்தநாத்தாஸ் 'ரத்னாகர்', பி.ஏ.)

(8) உரைநடை இலக்கியத் தத்துவ ஆய்வு
(பண்டிட் அம்பிகாதத்த வியாஸ், சாகித்தியாச்சாரியர்)

இந்தக் கட்டுரைகளும் அதன் தொடர்பான விஷயங்களும் இப்பத்திரிக்கையின் மேன்மையைக் கண்டறிய துணைசெய்கின்றன. இந்திமொழியில் தக்க பொருளோடு புதிய திறனாய்வு நெறி இந்தக் கட்டுரைகளின் வாயிலாகத்தான் உதயமாயிற்று எனலாம். கங்கா பிரசாத் அக்னிகோத்ரி அவர்கள் எழுதிய கட்டுரைதான் ஆங்கில மேற்கோளுடன் அமைந்து வெளிவந்த முதல் பயன்பாட்டுக் கட்டுரை எனப் போற்றப்படுகிறது. ஸ்ரீ 'ரத்னாகர்', போப் அவர்களால் எழுதப்பெற்ற 'திறனாய்வுக் கட்டுரை' என்பதைத் தழுவல் கவிதையாக மொழிபெயர்த்து எழுதியிருந்தார். இது 24 வரிகளில் திறனாய்வின் பண்பினை விளக்கி, திறனாய்வுக்குதவும் வழிமுறைகளையும் தெளிவாக எடுத்துக் கூறுகிறது. இதில் அலெக்சாந்தர் போப் அவர்களின் வாழ்க்கை விபரமும் படைப்புகளும் அறிமுகம் செய்யப்பட்டுள்ளன. ஏற்கப்பட்ட புதிய கருத்துக்களுடன் அம்பிகாதத்த வியாஸ் பழைய மரபுகளை இணைத்து ஒரு கட்டுரை எழுதியிருந்தார். அவர் இக்கட்டுரையில் எல்லாவிதமான நெறிமுறைகளை விளக்கியதோடு மேலைநாட்டு நெறிமுறைக்குரிய குறுகிய தன்மையைத் தமக்குரிய முறையோடு விளக்கந் தந்து புதினம் தொடர்பான புள்ளி விபரங்களையும் தந்துள்ளார். உலகில் 496,41,98,400 புதினங்கள் உள்ளன என்றும் கூறியுள்ளார். மேலும், கட்டுரையில் தேவைப்படும் வரைபடங்களையும், வண்ணப் படங்களையும்கூட இடம்பெறச் செய்திருந்தார்.

இந்தக் கட்டுரைகளை அச்சிடும் முன்பு செய்யப்பட்டப் பரிசோதனைகளும், ஏற்கும் முறைகளும் இன்றும்கூட யாரும் செய்வதில்லை. கட்டுரை வந்தவுடன் அதனை லட்சுமிசங்கர் மிஸ்ரா, எம்.ஏ. இராதாகிருஷ்ணதாஸ், கார்த்திக் பிரசாத் கத்ரி, ஜெகந்நாத்தாஸ் 'ரத்னாகர்' மற்றும் தேவகிநந்தன் கத்ரி போன்றோர் தக்க பரிசோதனை செய்தனர். பிறகு அவற்றை முறைப்படுத்தி இறுதி வடிவம் கொடுப்பவர் டாக்டர் சியாம்சுந்தர் தாஸ். இந்தப் பத்திரிக்கை பிறகு இவர்தம் நன்முயற்சியால் மாதாந்திரப் பத்திரிக்கையாக வரத்தொடங்கிற்று. 1919ஆம் ஆண்டு வரை இஃது மாதாந்திரப் பத்திரிக்கையாகவே வந்து கொண்டிருந்தது. சியாம்சுந்தர் தாஸ் அவர்கள் இந்தப் பத்திரிக்கை ஒரு முழுத்திறனாய்வு பத்திரிக்கையாகச் செயல்புரியும் தகுதியைப் பெற்றுவிட்டதென உணர்ந்து 1920ஆம் ஆண்டு முதல் முழு ஆய்வுப் பத்திரிக்கையாகவே வெளிவர ஏற்பாடு செய்தார். ஆசிரியர் குழுவில் இவரைத்தவிர இராய்பகதூர் கௌரிசங்கர் ஹிராசந்த் ஓஜா, சந்திரதர் சர்மா குலேரி மற்றும் முன்ஷிதேவி பிரசாத் போன்ற பெரும்புலவர்களும் இடம்பெற்றிருந்தனர். இதன்

நோக்கம் தொடர்பாகக் கீழ்க்கண்ட கருத்து முறையாக அறிவிக்கப்பட்டிருந்தது:

"மேலே குறிப்பிட்ட நான்கு வகைப்பட்ட அடிப்படை ஆதாரங்கள் ((1) நம்மிடையே கிடைக்கும் பழைய புத்தகங்கள், (2) வெளி நாட்டாரின் பயணக்குறிப்பும் அவற்றின் வாயிலாகக் கிடைக்கும் நம்நாடு தொடர்பான குறிப்புகள் அடங்கிய புத்தகங்கள், (3) பழைய கல்வெட்டும், தானதர்மம் தொடர்பான செப்பேடுகளும், (4) பழைய நாணயங்கள் மற்றும் சிற்பம்) பற்றிய வரலாற்றைத் தொகுத்துப் புதிய வரலாறு எழுத வழிவகுக்கப்பட வேண்டும். இத்தகைய பயனுள்ள அடிப்படை ஆதாரங்கள் தேடும் பணி தொடர்ந்து நடைபெறும். இடைவிடாது மேற்கொள்ளும் அத்தகைய முயற்சியால் நாள்தோறும் புதிய செய்திகள் கிடைத்துக்கொண்டே இருக்கும். ஆனால், வருந்தத்தக்க செய்தி என்னவென்றால், பெரும்பாலும் அவை ஆங்கில மொழியில் எழுதப்பட்டு, புதிய ஆய்வு முறைகளும் நெறிகளும் இடம்பெற்றுள்ளன. ஐரோப்பிய தேசத்தை ஒதுக்கிவிட்டுப் பார்த்தால், இந்தியாவில்கூட பல பத்திரிக்கைகள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. அவற்றிலும்கூட வெளியிடப் படும் விபரங்களும் அரசின் குறிப்புகளும்கூட, ஆங்கிலத்தில்தான் உள்ளன. இந்தி மொழியில் கூட அங்கொன்றும் இங்கொன்றுமாக சில வெளியிடப் பட்டு வருகின்றன. எனவே, இத்தகைய சூழலில் இந்திமொழியில் இத்தகைய ஒரு பத்திரிக்கை வரவேண்டியது இன்றியமையாதது. அதில் பழைய கல்வெட்டுகள், தானதர்மம் தொடர்பான செப்பேடுகள், நாணயம், வரலாற்று நூல்களின் கருத்துகள், பழைய புவியியல் குறிப்புகள், பழங்கால மன்னர்களாலும், புலவர்களாலும் தோற்றுவிக்கப் பட்ட மரபுச்செல்வங்கள் போன்றவற்றின் தொடர்பான கருத்துகள் பல கட்டுரை வடிவில் அச்சிடப்படவேண்டும். இதன் காரணமாக பழைய ஆய்வு தொடர்பான ஆய்வுத்திறனும் உருவாக வசதி ஏற்படும். இக்குறையைப் போக்கவும் இந்திமொழியின் பெருமையை மேலும் உயர்த்தவும் காசி நாகரி பிரச்சாரிணி சபா தன் பத்திரிகைக்கு இத்தகைய

புதிய வடிவம் தரமுடிவு செய்துள்ளது. இந்நோக்கோடு இப்பத்திரிக்கையின் புதிய பதிப்பு இந்த வெளியீட்டிலிருந்து அறிமுகப்படுத்தப்படுகிறது. பழங்காலத் தொடர்பான ஆய்வுப்பணிகளில் ஈடுபடும் இந்தியர்களின் எண்ணிக்கை நாள்தோறும் வளர்ந்துவருவதைக் கண்டு மகிழ்ச்சி ஏற்படுகிறது. இந்தச் சூழலில் எந்த நோக்கோடு இந்தப் பத்திரிக்கை புதிய வடிவம் கொடுக்கும் முயற்சியை மேற்கொண்டுள்ளதோ அது மிகச் சாதாரண செயலாகாது. இருப்பினும்கூட ஓரளவு நம்பிக்கை யூட்டுவதாக உள்ளது. பழங்காலத் தொடர்பான ஆய்வினை மேற்கொண்ட அறிஞர்கள் தங்கள் கட்டுரைகளை இப்பத்திரிக்கை மூலம் வெளியிட்டு இதனை அழகுறச் செய்வர் என நம்புகிறோம். இப்பத்திரிக்கையில் புது படைப்புகள் வெளியிட்டு வருவதோடு இந்திமொழி அறிந்தவர்களுக்கு உதவும் பொருட்டு பழங்காலத் தொடர்பான ஆய்வுப் பணிகளின் விவரமும், பேரறிஞர்கள் தம் பேரறிவைக் கொண்டு இந்த அறிவுக்களஞ்சியத்தை எவ்வாறு நிறைத்து வருகின்றனர் என்ற விபரமும் தொடர்ந்து வெளியிடப்பட்டு வரும் என உறுதியாகக் கூறப்படுகிறது."

பத்திரிக்கையின் இத்தகைய வடிவம் உலகம் தழுவிய நிலையில் நல்ல வரவேற்பைப் பெற்றது. டாக்டர் கிரியர்சன் அவர்கள் இராயல் ஏசியாடிக் சொசைட்டி சார்பாக வெளிவந்த பத்திரிக்கையில் இதன் தொடர்பான ஆதரவு நிறைந்த கருத்தை இவ்வாறு வெளியிட்டிருந்தார்:

"தற்பொழுது சபை தன் பத்திரிக்கையின் புதிய பதிப்பை நன்முறையில் அறிவியல் கோட்பாட்டிற் கிணங்க வெளியிட உறுதி செய்துள்ளது. மேலும், இதன் முதல் இரு இதழ்களும் இந்தச் சபையின் நற்பணியின் சிறப்பை நன்கு வெளிப்படுத்திக் காட்டியுள்ளன. இத்தகைய நற்பணியானது இந்தியநாட்டு அறிஞர் கூட்டத்திற்கு எல்லா வகையிலும் பேருதவி புரியும் என்ற நம்பிக்கையை இப்பத்திரிக்கை உருவாக்கத் தொடங்கியுள்ளதென்றும் கூறலாம். இத்தகைய மிகச்சிறந்த பத்திரிக்கை ஒன்றை வெளியிடத் தொடங்கிய இந்தச் சபையை

> உண்மையாகப் பெரிதும் பாராட்ட வேண்டும். இதன் பதிப்புமுறை வெளிநாட்டவராலும் விரும்பிப் பாராட்டத்தக்க முறையில் அமைந்து எல்லா அறிஞர்களாலும் விரும்பி ஏற்கப்படும் என உறுதியாகக் கூறலாம். எல்லாருமே இந்தி மொழியிலேயே எழுதுகின்றனர். இச்சபை இந்திய நாட்டு நிறுவனம் ஆதலால் படிப்பவர்க்கு ஏற்ற முறையில் இந்திய மொழியிலேயே கட்டுரைகளை வெளியிடுகிறது. இதன் கட்டுரையாளர்கள் ஐரோப்பிய அறிஞர்களின் கருத்துக்களையும் ஆய்வுநெறிகளையும் அசைபோடுவது மட்டுமன்று, புதிய முறையில் ஆய்வுக்கட்டுரைகளையும் எழுதிவருகின்றனர்."

இன்று உலகில் எல்லா பேரறிஞர் குழாத்திலும் இந்தப் பத்திரிக்கை தன் மதிப்பை பெற்றிருப்பதோடு, உலகிலுள்ள பல ஆய்வு மையங்கள் தம் ஆண்டறிக்கைகளிலும் இதில் வெளிவந்த சிறப்புவாய்ந்த பலதரப்பட்ட கட்டுரைகளின் விபரங்களையும் வெளியிட்டு வருகின்றனர். இந்தியாவின் புகழ்பெற்ற அறிஞர்களோடு மேலைநாட்டின் தகுதிவாய்ந்த இளம் ஆராய்ச்சியாளர்களின் உதவியையும் முறையாய் பெற்று உலகம் தழுவிய நிலையில் வெளியிட்டு வருகின்ற கட்டுரைகளைத் தன்னகத்தே பெற்று உலா வருகிறது. இந்நிலையில் இப்பத்திரிக்கை எப்பொழுதும் இந்திமொழி உலகில் முதல்நிலையைப் பெற்று விளங்குவதோடு, இதில் வெளியாகும் ஆய்வுக் கட்டுரைகள் உலகிலுள்ள அங்கீகரிக்கப்பட்ட பேரறிஞர்களிடம் நல்ல பெயரையும் பெற்று விளங்கும். இந்தப் பெருமையும் புகழும் டாக்டர் சியாம்சுந்தர்தாஸ் அவர்களைத்தான் சாரும். ஏனெனில், அதற்குரிய நல்ல அடிப்படையை இவரே அமைத்து என்றும் நிலைத்த பெருமைப் பெற்று விளங்கச்செய்தார்.

தற்கால இந்தி இலக்கியப் படைப்பிற்கு 'சரஸ்வதி' பத்திரிக்கை ஆற்றிய தொண்டு முதன்மை வாய்ந்ததாகும். இப்பத்திரிக்கைதான் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தற்கால இந்திமொழிக்குரிய சிறந்த வடிவு, அழகு மற்றும் சுவையனைத்தையும் தந்து சிறப்புச் செய்தது. இப்பத்திரிக்கைதான் இந்திமொழிக்குரிய சிறப்பான வரலாற்றை உருவாக்க ஆரம்பத்தில் முறையான நற்பணியைச் செய்து துணையாக நின்றது. இப்பத்திரிக்கையின் வழியாகத்தான் இந்தி இலக்கிய மொழியின்

இரட்டைத்தன்மை நீங்கி அது நன்கு செம்மையுற்று பண்பட்ட மொழியாக உருவாயிற்று. இலக்கியத்தின் பல்வகைப்பட்ட துறைகள் கடீபோலீ மூலம் அறிமுகப்படுத்தப்பட்டன. இலக்கியத்தின் புதிய துறையான கதை இலக்கியம் இந்திமொழியிலும் பிறப்பெடுத்தது. பொது அறிவும், அறிவியல் தொடர்பான செய்தியும் பொதுமக்கட்கு அவ்வப்பொழுது கிடைத்துவந்தது. இந்திமொழியுலகில் எல்லாச்செய்திகளையும் தன்னகத்தே கொண்ட ஒரு முழுமையான பத்திரிக்கையாக முதன்முறையாக வெளியிடப்பட்ட இதில், எழுச்சியூட்டும் பல்வகைப்பட்ட சிறப்புவாய்ந்த அம்சங்கள் நிறைந்திருந்தன. பாபு சியாம் சுந்தர்தாஸ் 1900 முதல் 1902 வரை இதன் ஆரம்பகால ஆசிரியராக இருந்து நல்ல வடிவைத் தோற்றுவித்து நெறிப்படுத்திச் சிறப்புச் செய்தார். இதனை இத்தனை ஒளிமிக்கதாகவும், கவர்ச்சியுடையதாகவும் செய்து, பெருமைபெறச் செய்ததில் பண்டிட் மகாவீர் பிரசாத் துவிவேதி அவர்களின் தொண்டே மிகமுக்கியமானதாகக் கருதப்படுகிறது. ஆயினும், துவிவேதியை விட வயதில் சிறியவரான பாபுசியாம் சுந்தர்தாஸ் இத்தகைய நற்பணிகளைத் தொடக்கத்திலிருந்தே செய்து வந்ததால், அவரைவிட இவரே பத்திரிக்கை உலகின் மூத்தவராகக் கருதப்படுகிறார். மேலும், இந்தியில் இலக்கியம் மற்றும் ஆய்வுத்தொடர்பான பத்திரிக்கைக்குரிய நல்வடிவை அறிமுகப் படுத்தியவராக இவர் கருதப்படுகிறார். 'சரஸ்வதி' பத்திரிக்கையின் தூண்டுதலினால்தான் இந்தியில் பலவிதமான பத்திரிக்கைகள் வெளிவரத் தொடங்கின. இத்தகைய நற்பணிக்கு வித்திட்டவர் சியாம்சுந்தர்தாஸ் அவர்கள்தான். ஏனென்றால் இந்திமொழியில் இலக்கியப் பத்திரிக்கையின் ஆரம்பகர்த்தா இவரேயாவார்.

'சரஸ்வதி' பத்திரிக்கை 1900ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதலாக வெளிவரத் தொடங்கியது. இதில் சரஸ்வதி படம் மோனோகிராமாக (சின்னமாக) அச்சடிக்கப்பட்டிருந்தது. அதன்மேற்பகுதியில் 'சரஸ்வதி ஸ்ருதி மஹதி ந ஹீயதாம்' என்ற பொன்மொழியும் அச்சடிக்கப்பட்டிருந்தது. இதன் கௌரவம் காசி நாகரி பிரச்சாரிணி சபையின்' ஆமோதித்தலின் மூலம் உருவானதெனக் கூறலாம். இதன் ஆசிரியர் குழுவில் இடம்பெற்றோர்:

(1) பாபு கார்த்திக் பிரசாத் கத்ரி (2) பண்டிட் கிஷோரிலால் கோஸ்வாமி (3) பாபு ஜெகந்நாத்தாஸ், பி.ஏ., 'ரத்னாகர்' (4) பாபு ராதாகிருஷ்ணதாஸ் (5) பாபு சியாம்சுந்தர்தாஸ், பி.ஏ.

இதன் பொறுப்பாசிரியராகத் தொடக்கத்திலிருந்தே சியாம்சுந்தர் தாஸ் பொறுப்பேற்றிருந்தார். இப்பத்திரிக்கையின் முக்கிய நோக்காகக் கீழ்க்கண்டவை பிரகடனப்படுத்தப்பட்டன:

"பரம கருணையுள்ள சர்வசக்தி வாய்ந்த ஜெகதீஸ்வரரின் பேரருளால் உருவான ஈடற்ற நற்சந்தர்ப்பம் உருவாகி இன்று இந்திமொழிப் பற்றாளர்களின் இரசனைக்கு ஏற்றதொரு புத்தம்புதிய சிறப்பான பரிசாக உருவாகியுள்ள ஒன்றின் பெயர்தான் 'சரஸ்வதி' என்பதாகும். பாரத பூமியின் சிறப்புவாய்ந்த பொன்மொழி, 'சரஸ்வதி ஸ்ருதீ மஹதி ந ஹீயதாம்' என்பதாகும். இதன் பொருள், 'கலைமகளின் வீணையொலி என்றும் புனிதமானதும் அழியாததுமாகும்' என்பதாகும். இஃது மிகச்சிறந்த குறியீடாகும். இந்தியின் உண்மையான தொண்டர்களின் நல்லாதரவும் மனப்பூர்வமாக நலம் விரும்பும் பண்பும் உடையோர் இதனைத் தக்கபடி கௌரவித்து விருப்பத்தோடு ஏற்றுப் போற்றி வருகின்றனர். அதன் காரணமாக இஃது இன்றியமையாத ஒன்றாக, என்றும் மாறா சிரஞ்சீவியாகத் தோன்றித் தம் தொண்டினைச் செவ்வனே செய்துவருகிறது. இதனால், இந்தியின் நற்புகழ் நிலைத்திருக்கும். இஃது எண்டிசையும் பரவிச் சென்று நன்கு நிலைத்திருக்கத்தக்கப் போராற்றலைப் பெற்று விளங்கும்.

நம்மைச் சார்ந்தோர் மகாகவி காளிதாஸ் அவர்களின் கதைக்கேற்ப வாமனாவதாரம் எடுத்து மிக உயர்ந்த நிலையிலிருந்த மகாபலியை வென்றுவிடப் பேராசைக் கொண்டிருந்தனர். மக்களிடையே கேலிக்கிடமாகத் தொடக்கத்தில் உருவானபோதும், நம்மைச் சார்ந்தோரின் புதிய பணி, ஆர்வம், பேருதவி, கடமைச்சிறப்பு போன்றவற்றின் சிறப்பான நறுமணத்தைப் பரப்பத்தான் செய்தனர். கருணைப் பண்புடைய ரசிகர்களும், உடன் பணிபுரிந்தோரும் தவறுகளை மன்னித்து தக்க துணையாகவும், வழிகாட்டியாகவும் இருக்கவேண்டுமென்ற எண்ணம் தோன்றாமலா போய்விடும்? அப்படியிருந்துங்கூட, இந்திமொழியின் ஆர்வலரும், நல்லெண்ணங் கொண்டோரும், மேம்படுத்த விரும்பியோரும், இரசிகப்பெருமக்களும் மற்றும் உதவியாளர்களும் இத்தகைய பரந்த நம்பிக்கையை ஏன் பெறவில்லை?

அவர்கள் எல்லா வகையிலும் தம் தோளோனும் கொடியில் பரவிய குளிர்ந்த நிழலில் இந்தப் புத்தம்புதிய பெண்குழந்தையை இருக்கச் செய்து தக்கபடி பாராட்டிச் சீராட்டி வளர்ப்பதில் ஒருபோதும் பாராமுகமாய் இருந்ததில்லை. அதன் காரணமாக இன்று அது தமக்குரிய புதிய வண்ணமாக, இன்று அது தமக்குரிய புதிய பணி, ஆர்வம் மற்றும் புதிய மணங்கவர் அழகோடு உருவாகியுள்ளது.

இதனை இத்தகைய புதிய வடிவோடு உருவாக்கியதற்கு இந்திமொழி இரசிகர்களின் மனமகிழ்ச்சியோடுகூட சரஸ்வதியின் கருவூலத்தையும் தக்கவாறு நிறையும்படிச் செய்வதென்ற முக்கிய நோக்கோடு சிறந்த எழுத்தாளர்களின் உயர்ந்த படைப்புக்களை வெளியிட்டு உற்சாகப்படுத்துவதும், பலதிறப்பட்ட பயனுள்ள நல்ல தரம்வாய்ந்த நூல்களை அறிமுகப்படுத்தி ஆதரிக்க வேண்டுமென்ற எண்ணமுமாகும். மேலும், இந்தப் பத்திரிக்கையில் என்னென்ன கருத்துக்கள் இடம்பெறும் என்பதை 'சரஸ்வதி' என்ற பெயரைக்கொண்டே ஓரளவு முடிவுசெய்ய இயலும். இதில் உரைநடை, செய்யுள், காப்பியம், நாடகம், புதினம், சம்புகாவியம், வரலாறு, வாழ்க்கை வரலாறு, நகைச்சுவை, விகடம், பொழுதுபோக்கு, பழங்கதை, அறிவியல், சிற்பம், பல்வகைக் கலைகளின் சிறப்பு ஆகியவற்றின் தொடர்பான இலக்கிய கருத்துக்கள் தக்கவாறு இடம்பெறும். மொழிநடையில் இப்பத்திரிக்கை தமக்கே உரித்தான தனிநடையைப் போற்றிப் பின்பற்றிவந்ததெனக் கூறலாம். ஆனால், ஆம், நல்மனங்கொண்டோரின் தக்க உதவியோடும், நல்லாதரவோடும் கூடத்தான் தம் கடமையை நிறைவேற்றுவதில், வெற்றி மனோரதம் நன்கு முன்னேறுவதில், தக்கவாறு பணியை மேற்கொண்டு செய்வதில் எந்தவிதமானத் தடையும் தோன்றக் கூடாதல்லவா? இதனால் இத்தகைய லாபம் மட்டும் உருவாகும் என நினைத்ததுண்டு - நல்ல எழுத்தாளர்களின் கட்டுரைகள் உயிர்த் துடிப்புள்ளதாக அமையுமன்றோ! அதனால் இந்திமொழி மேலும் வலுப்பெற்று சிறப்படையுமன்றோ! இதனினும் மேலான ஒரு உறுதியான எண்ணம் நம்மவர்க்கிடையே

உருவாயிற்று. பத்திரிக்கை சம்பந்தமான எல்லாச் செலவுகளும் போகச் சிறிது லாபம் கிடைத்தால் அதை எழுத்தாளர்களுக்கு எங்கள் சேவைபோல் அளிப்பதில் எந்தக் குறைபாடும் இராது. இந்தி மொழியறிந்த சமூகம் இந்தப்பத்திரிக்கை மீது தம் கருணை எனும் பார்வையை நன்கு செலுத்தி, நன்முறையில் நாங்கள் சக்தியனைத்தையும் பயன்படுத்தி எங்கள் கடமையைச் செவ்வனே செய்து வரத்துணை புரியும் என நம்பலாம்."

இந்நோக்கு நிறைவேற டாக்டர் பாபு சியாம்சுந்தர்தாஸ் இப்பணியில் அதிகம் ஈடுபடத் தொடங்கினார். 'சரஸ்வதி' ஒரு முழுமையான தக்க படங்களுடனும் மிகுந்த செய்திகளுடனும் சிறப்பாக அறிவு - அறிவியல் தொடர்பான இந்திமொழியில் வெளிவந்த மிகச்சிறந்த பத்திரிக்கையாகத் திகழ்ந்திருந்தது. முதல் ஆண்டில் இதில் 56 கட்டுரைகள் வெளியிடப்பட்டன. அவை இவ்வாறு அமைந்திருந்தன:

(1) முகவுரை - ஆசிரியர் குழு

(2) பாரதேந்து ஹரிச்சந்திரர் - பாபு இராதாகிருஷ்ணதாஸ்

(3) சிம்பலின் நாடகம் - பாபு இராதாகிருஷ்ணதாஸ்

(4) இயற்கையின் விசித்திரம்
- பண்டிட் கிஷோரிலால் கோஸ்வாமி

(5) காஷ்மீர் யாத்திரை - பாபு கார்த்திக் பிரசாத்

(6) கவி கீர்த்தி கலாநிதி
- பண்டிட் கிஷோரிலால் கோஸ்வாமி

(7) ஃபோடோகிராஃபி - பாபு சியாம்சுந்தர்தாஸ், பி.ஏ.

(8) ராஜா சிவபிரசாத் - பண்டிட் கிஷோரிலால் கோஸ்வாமி

(9) ஏதன்ஸ் நகர தாய்மன் - பாபு இராதாகிருஷ்ணதாஸ்

(10) உயிரினங்களின் படைப்பு
- பாபு சியாம்சுந்தர்தாஸ், பி.ஏ.

(11) வெளியீட்டாளர்களின் வேண்டுகோள் - வெளியீட்டாளர்

(12) பெரிக்ளிஸ் - பாபு இராதாகிருஷ்ணதாஸ்

(13) ஐம்பத்தாறின் வழியனுப்புதலும் புதிய ஆண்டின் வாழ்த்தும் - பாபு இராதாகிருஷ்ணதாஸ்

(14) தற்கால வைசிராய் லார்டு ஜார்ஜ் நெத்தானியல் கர்சன் - பாபு இராதாகிருஷ்ணதாஸ்

(15) பாரதநாட்டின் பழம்பெருங் கட்டிடங்கள் - பாபு காசிபிரசாத்

(16) வசந்தம் - பாபு ஜெகந்நாத்தாஸ், பி.ஏ.

(17) வடமேற்குப் பிரதேசத்திலும் 'அவத்' பகுதியிலும் நாகரிலிபியின் பிரச்சாரம் - பண்டிட் கிஷோரிலால் கோஸ்வாமி

(18) இலங்கையின் கண்டுபிடிப்பு - பண்டிட் கிஷோரிலால் கோஸ்வாமி

(19) சந்திரோதயம் (பிம்பப்பொருளோடு) - பண்டிட் கிஷோரிலால் கோஸ்வாமி

(20) சந்திரோதயம் (முழு பிம்ப வடிவோடு) - பண்டிட் கிஷோரிலால் கோஸ்வாமி

(21) மலயமாருதம் - பண்டிட் கிஷோரிலால் கோஸ்வாமி

(22) அன்புக்காணிக்கை - பண்டிட் கிஷோரிலால் கோஸ்வாமி

(23) கோகினூர் - பாபு கேசவபிரசாத் சிங்

(24) இந்துமதி - பண்டிட் கிஷோரிலால் கோஸ்வாமி

(25) சம்சுல் உல்மா மௌல்வி சையத் அலி பில் கிராமி - பாபு சியாம்சுந்தர்தாஸ், பி.ஏ.

(26) இரயில் - பாபு துர்கா பிரசாத், பி.ஏ.

(27) இரயில் நகரின் தெய்வத்திருக்கோயில் - பண்டிட் ஜெகந்நாத் பிரசாத் திரிபாடி

(28) சந்திரலோக யாத்திரை - பாபு கேசவ பிரசாத் சிங்

(29) ராஜா லட்சுமணசிங் - பண்டிட் கிஷோரிலால் கோஸ்வாமி

(30) இராமனும் ஜானகியும் - பாபு இராதாகிருஷ்ணதாஸ்

(31) மகாகவி பாரவி சேட் கன்னையாலால்

(32) கிராதார்ச்சுனீயத்தில் மொழிநடை - லாலா சீதாராம், பி.ஏ.

(33) சாவித்திரி பிரபோதன் - பண்டிட் கிஷோரிலால் கோஸ்வாமி

(34) சர்தார் தயாள் சிங் - பாபு மனோகர்லால்

(35) பிரமராஷ்டகம் - பண்டிட் கிஷோரிலால் கோஸ்வாமி

(36) டாக்டர் நான்சென் வடதுருவ யாத்திரை
- பாபு கேசவ பிரசாத் சிங்

(37) தாமோதரராவ் வாழ்க்கை வரலாறு
- பாபு கார்த்திக் பிரசாத்

(38) ஏ! அன்பே - பண்டிட் கிஷோரிலால் கோஸ்வாமி

(39) விந்தைக்குரிய சந்திப்பு - பாபு இராதாகிருஷ்ணதாஸ்

(40) பேரறிஞர் இராமகிருஷ்ண கோபால பண்டார்கர்
- பாபு சியாம்சுந்தர்தாஸ், பி.ஏ.

(41) காதல் அழகு - பண்டிட் கிஷோரிலால் கோஸ்வாமி

(42) ஹம்மீர் ஹட் (ஓராய்வு)
- ப. சியாம் பிகாரி மிஸ்ரா, பி.ஏ.
பண்டிட் சுகதேவ பிகாரி மிஸ்ரா, பி.ஏ

(43) பிட் (வைரம்) - பாபு கேசவ பிரசாத் சிங்

(44) சர் சையத் அகமத்கான் - பாபு மனோகர்லால்

(45) நைடத சரிதம் பற்றிய விவாதமும் சுதர்சனும்
- பண்டிட் மகாவீர் பிரசாத் துவிவேதி

(46) மானுடரின் உடல் - பாபு கேசவ பிரசாத் சிங்

(47) வள்ளல் ஜம்சேத் நௌசேர் பாஞ்சி தாதா
- பாபு சியாம்சுந்தர்தாஸ், பி.ஏ.

(48) ஆபத்தின் மலை - பாபு கேசவ பிரசாத் சிங்

(49) பூர்வ சாதகாட்டகம்
- பண்டிட் கிஷோரிலால் கோஸ்வாமி

(50) உத்தரசாத காட்டகம்
- பண்டிட் கிஷோரிலால் கோஸ்வாமி

(51) பண்டிதர் ஸ்ரீதர் பாடக் அவர்களின் கவிதைகள்
(ஓர் ஆய்வு) - பண்டிட் சியாம் பிகாரி மிஸ்ரா, எம்.ஏ.
பண்டிட் சுகதேவ் பிகாரி மிஸ்ரா, பி.ஏ.

(52) திரௌபதி வாக்கின் நுகர்வு
- பண்டிட் மகாவீர் பிரசாத் துவிவேதி

(53) பாரதநாட்டின் சிற்பக்கல்வி
- பாபு சியாம்சுந்தர்தாஸ், பி.ஏ.

(54) பேராசிரியர் மாக்ஸ்முல்லர்
- பண்டிட் கிஷோரிலால் கோஸ்வாமி

(55) ஒரு எளிய வினா
- பாபு துர்கா பிரசாத் பி.ஏ.

(56) இந்தி காவியம் (ஓர் ஆய்வு)
- பண்டிட் சியாம் பிகாரி மிஸ்ரா, பி.ஏ., எம்.ஏ., பண்டிட் சுகதேவ் பிகாரி மிஸ்ரா, பி.ஏ.

இந்தக் கட்டுரைகளின் வாயிலாக அறிவியல், வரலாறு, வேதியியல், புவியியல், வாழ்க்கை வரலாறு, கவிதை, உரைநடை, திறனாய்வு, அங்கதம், மொழிபெயர்ப்பு, பழைய இலக்கியம், புதிய இலக்கியம், ஐரோப்பிய இலக்கியம் தொடர்பான பலதரப்பட்ட சுவைமிக்க சிறப்பான கருத்துக்கள் முதன்முதலாகப் படிப்போர்க்குக் கிடைத்ததென உணர இயலும். இந்த ஆண்டுதான் இந்திமொழியில் கதை இலக்கியத்தின் பிறப்பும், இந்தப் பத்திரிக்கையின் வாயிலாக உருவாயிற்று. அக்கதைதான் பண்டிட் கிஷோரிலால் கோஸ்வாமியின் 'இந்துமதி'. இத்துடன் இந்தியில் முதல் அறிவியல் கதைகூட பாபு கேசவ பிரசாத் சிங் எழுதிய 'சந்திரலோக யாத்திரை' என்பதுகூட இதன்மூலம்தான் பிரசுரமாயிற்று. சியாம்சுந்தர் தாஸ் அவர்களின் வாயிலாக வெளியிடப்பட்டுவந்த 'சரஸ்வதி' என்னும் பத்திரிக்கை மூலம்தான் இந்தி இலக்கியத்தின் நவீனத்தன்மை முழுமையாகத் கொண்ட யுகம் தொடங்கிற்று எனலாம்.

அடுத்த ஆண்டு, 1900 இல் இப்பத்திரிக்கையின் ஆசிரியர் குழுவின் காலக்கெடு முடிவடைந்துவிட்டது. அதன்பிறகு பாபு சியாம்சுந்தர் தாஸ் அவர்கள் இதன் ஆசிரியர் பொறுப்பை முழுமையாக ஏற்றுக்கொண்டார். இத்துடன் எழுத்தாளர்களுக்குரிய சன்மானம் கொடுக்கும் முறைகூட இந்த வருடத்திலிருந்துதான் 'சரஸ்வதி' பத்திரிக்கை மூலமாகத்தான் தொடங்கிற்று எனலாம். பத்திரிக்கையில் வெளியாகும் கட்டுரைகளுக்காகத் தரப்படும் சன்மானமுறை சியாம்சுந்தர் தாஸ் அவர்களின் திட்டமாகும். அஃது இன்றும் தொடர்ந்து இந்தி எழுத்தாளர்களின் பொருளாதார நிலைக்கு அதுவும் எல்லையாக அமைந்து துணைபுரிந்து கொண்டிருக்கிறதெனலாம். பத்திரிக்கையில் நாள்தோறும் நேர்மை வளர்ச்சியுற்றுவந்தது. இவ்வாறு 1902 வரை அவர் ஆசிரியர் பொறுப்பேற்றுச் சிறப்பாக நடத்தி வந்தார். 1902 ஆம் ஆண்டு

டிசம்பர் மாத சரஸ்வதி இதழில் பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் கீழ்க்கண்டவாறு அறிக்கை ஒன்றை வெளியிட்டார்:

"இம்மாதத்தோடு 'சரஸ்வதி' தொடங்கி மூன்றாண்டு முடிந்துவிட்டது. ஆரம்ப காலத்திலிருந்து இன்றுவரை இப்பத்திரிக்கையோடு எனக்கிருந்த தொடர்பு ஆழமானது. முதலாண்டில் இதனை ஒரு ஆசிரியர்குழு கவனித்து வந்தது. அதில் நானும் உறுப்பினராக இருந்தேன். இரண்டு, மூன்றாம் ஆண்டுகளில் இதன் பொறுப்பாசிரியராக இருந்து எல்லாப் பணிகளையும் கவனித்து வந்தேன். ஆனால், தற்பொழுது நான்காவது ஆண்டுத் தொடக்கத்திலிருந்து இப்பணியை இந்தியின் புகழ் பெற்ற எழுத்தாளர் பண்டிட் மகாவீர் பிரசாத் துவிவேதி ஏற்க இருக்கிறார். இம்மாற்றத்திற்குரிய முக்கிய காரணம் எனக்குப் போதுமான நேரம் இல்லாததால் இதன் தொடர்பாகச் செய்யவேண்டிய பணிகளை நிறைவாகச் செய்ய முடியாதிருப்பதேயாகும். ஆகையால், பெயரளவில் பொறுப்பாசிரியராக இருப்பது சரியல்ல என்பதை அறிவேன். ஆனால், நான் என் ஆதரவாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும் இந்த நம்பிக்கை மட்டும் உறுதியாக வழங்க முடியும். அதாவது இன்றுவரை எவ்வாறு இதனோடு தொடர்புகொண்டு பணிபுரிந்து வந்தேனோ, அவ்வாறே, பொறுப்பாசிரியராக இல்லாவிடினும் தொடர்ந்து அதன் வளர்ச்சிக்கும், பெருமைக்கும் என்னால் இயன்ற அளவிற்குப் பணிபுரிந்து வருவேன். மேலும், இதுவரை எழுதிவந்த எழுத்தாளர்களிடம் தொடர்ந்து எழுதிவர வேண்டுமென்றும் விரும்பி வேண்டிக்கொள்கிறேன். தொடர்ந்து இவ்வாறு உதவிவருவர் என்ற நம்பிக்கையும் இருக்கிறது. எதிர்காலத்தில் 'சரஸ்வதி' பத்திரிக்கைத் தொடர்பாக எல்லாத் தொடர்பும் கீழ்க்கண்ட முகவரியோடு தொடர்புகொண்டு தங்கள் ஆதரவை முன்புபோல் நன்கு செலுத்தி வருமாறு கேட்டுக்கொள்வதோடு, கட்டுரை கதை போன்றவற்றையும் இம்முகவரிக்கே அனுப்பி வைக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

பண்டிட் மகாவீர் பிரசாத் துவிவேதி,
ஆசிரியர் - சரஸ்வதி, ஜான்சி.

## இந்திமொழி மற்றும் இலக்கிய வரலாற்று நூல் உருவாக வழிவகுத்தவர்

ஒருபுறம் 'சப்தசாகர்' என்னும் சொற்களஞ்சியப்பணி நடந்துகொண்டிருந்த அதே நேரத்தில் மற்றொருபுறம் இந்திமொழிக்குரிய இலக்கிய வரலாற்று நூலும், மொழிநூலும் இல்லாத ஒரு பெருங்குறையைப் பற்றி எப்பொழுதும் நினைத்தவாறு அதனை உருவாக்க முனைந்தார். இதற்காக அவர் பேராசிரியர் இராமச்சந்திர சுக்லா அவர்களைத் தேர்ந்தெடுத்தார். அவர் 'சப்தசாகர்' எனும் சொற்களஞ்சியத்திற்குரிய முன்னுரையாக இந்தி இலக்கிய வரலாறு எழுதுமாறு செய்தார். இதன் அடிப்படையில் இந்திமொழி வரலாற்றை எழுதி வெளியிட பாபு சியாம்சுந்தர் தாஸ் அவர்களே முன்னின்று ஆவன செய்யத் தொடங்கினார். இதன் விபரம் இவரது படைப்புகள் பற்றிக் கூறப்படும் பகுதியில் விளக்கப்படும். இதற்கு முன்பு பயன்பாட்டில் இருந்த கார்ஸா த தாசி என்பவர் எழுதியது போன்ற நூல்கள் எல்லாம் மேலைநாட்டு மொழியிலேதான் இருந்தன. சிவசிங் சரோஜ் இயற்றிய வாழ்க்கை விவரத் தொகுப்புநூல் மட்டும் இருந்தது. மிஸ்ரபந்து இயற்றிய, 'மிஸ்ரபந்து விநோதம்' என்ற நூல்கூட ஒரு விரிவான வாழ்க்கை வரலாற்று நூலாகத்தான் இருந்ததேயொழிய உண்மையான அறிவியல் நெறிமுறையில் அமைந்த வரலாற்றுநூல் எனக்கூற இயலாது. நாள்தோறும் காலையில் காலாற நடந்தபடி அவர் இராமச்சந்திர சுக்லா அவர்கள் வீடுவரை சென்று இதன் தொடர்பான பணிகளைக் கண்டறிந்துவந்த நிகழ்ச்சியிலிருந்து சியாம்சுந்தர்தாஸ் இப்பணியில் எந்த அளவிற்கு அக்கறை கொண்டிருந்தார் எனத் தெரிந்துகொள்ளலாம். எழுதிவைத்திருக்கும் பகுதிகளை வாங்கி வந்து நாள் முழுவதும் அச்சுக்கோத்து அச்சடிக்கப்பட்டு மறுநாள் சரிபார்க்க பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்களே அவருடைய வீட்டிற்குச் சென்று வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். இப்படி ஓராண்டுவரை நடந்தது. சுக்லா அவர்களின் வரலாற்று நூல் அவருடைய பெருமுயற்சியின் பயனேயாகும். இந்த 'இந்தி இலக்கிய வரலாறு' இன்றுவரை அனைவராலும் ஏற்றுக்கொள்ளக்கூடியதாக நிலைநாட்டப்பட்டுத் திகழ்ந்து வருகிறது. மேலும், இந்திமொழி உலகிற்கு ஒரு அணிகலனாக விளங்கிவருகிறது எனலாம்.



# 4. நிகழ்ச்சிகளின் சாளரத்திலிருந்து

*புத்துலக இந்திமொழி இலக்கியச் சிற்பி பாபு சியாம்சுந்தர் தாஸ் அவர்களின் ஆளுமை எப்பொழுதும் சிறப்பாகவே இருந்தது. அவர் நற்குணத்தைப் போற்றுபவராகவும், கட்டுப்பாட்டை விரும்புபவராகவும், கடமை வீரராகவும், தன்மானம் நிறைந்தவராகவும், ஆழ்நோக்குள்ளவராகவும், உயர்நோக்கின் பொருட்டு அனைத்தையும் தியாகம் செய்யும் சிறந்த தலைவராகவும் திகழ்ந்தார் எனலாம். அவரது உயர் ஆளுமை எப்படி இருந்ததோ அப்படித்தான் அவரது தோற்றமும் இருந்தது. செந்நிற மேனி, நெடிய உடல், அடர்ந்த சீரான மீசை, உற்றுநோக்குவாரைத் தம்பால் ஈர்க்கும் மலர்ந்த கண்கள் - எல்லாம் ஒன்றாக இணைந்து உயர்கொள்கையின் இருப்பிடமாகி நின்று களங்கமற்ற அவர்தம் நற்தோற்றத்தை வெளிப்படையாகக் காட்டிக்கொண்டிருந்தது. இந்தியின் மேன்மைக்கெனப் பாடுபட்ட பெரியோனாக விளங்கினாலும்கூட அவர் ஆங்கிலேயர்க்குரிய ஆடை அணிகளையே அணிந்திருந்தார். வட்ட பெல்ட் கேப் அணிந்திருந்தார். காசி இந்து பல்கலைக் கழகத்திலும் மற்றும் பாரதத்தின் பிற அறிஞர்களுக்கிடையேயும் இவர்தம் பேரறிவும், சொல்லாற்றலும் நற்புகழ்பெற்று விளங்கிற்று. இவர்தம் வாழ்வில் நிகழ்ந்த ஒருசில நிகழ்ச்சிகள் இவர்தம் தனித்தன்மையை மேலும் சிறப்படையச் செய்தன எனலாம்.*

*பேராசிரியர் ஜே.ஜி. வெனிஸ் அக்காலத்திய புகழ்பெற்ற அறிஞராக இருந்ததோடு, காசியிலுள்ள ராணி கல்லூரியின் ஆங்கிலப் பேராசிரியராகவும் இருந்தார். சியாம்சுந்தர் தாஸ் அவருடைய அன்பிற்குப் பாத்திரமாக இருந்துவந்தார். அவர் பி.ஏ. வகுப்பின் ஆங்கில வகுப்பில், 'ஆங்கிலக் கல்வியின் இன்றியமையாமை' பற்றி ஒரு கட்டுரை எழுதுமாறு பணித்திருந்தார். பாபு சியாம்சுந்தர் தாஸ் ஆங்கிலத்தை எதிர்த்துக் கட்டுரை எழுதியிருந்தார். டாக்டர் வெனிஸ் அது பற்றி வினவியபொழுது தைரியமாக எழுந்துநின்று, உணர்வோடு, 'It dames the spiriit of Educated' என்று கூறினார். கொள்கைவழி எழுந்த இந்த உணர்வு அவருடைய எண்ணத்தை நன்கு பிரதிபலித்தது எனலாம்.*

*அவர் நாகரி பிரச்சாரிணி சபையைத் தம் மகளாகக் கருதிவந்தார். அவருடைய பெரும்பாலான நூல்கள் இச்சபையின் மூலமாகத்தான் வெளியிடப்பட்டிருந்தன. அவற்றுள் பல டஜன்*

கணக்கான பதிப்புகளைப் பெற்றிருந்தன. தொடர்ந்து வெளியிடப்பட்டும் வந்தன. அப்புத்தகங்கள் வழியாகப் பெறவேண்டிய ராயல்டிகளைக்கூட அவர் பெறவில்லை. ஏனெனில், மகளின் செல்வத்தை விரும்பி ஏற்பது நம் சமூகத்தில் மிகப்பெரிய பாவமாகக் கருதப்பட்டு வந்தது. அப்படியிருக்க இச்சபையின் பணத்தைப் பற்றிய பேச்சு எப்படி எழ நேரிடும்?

இத்தகைய மேம்பட்ட நோக்கின் காரணமாகத்தான் இன்றும் நாகரி பிரச்சாரிணி சபை நிலைத்திருக்கிறது எனலாம்.

இன்று பெரும்பாலும் எல்லாப் பேராசிரியர்களுக்கும் கிடைத்துள்ள பெரும்பேறு என்னவென்றால் அவர்களுடைய குழந்தைகள் பெரும்பாலும் முதல் வகுப்பிலேயே எம்.ஏ. தேர்வில் வெற்றிபெற்றுவிடுவர். மேலும், யாதொரு பெருமுயற்சியுமின்றியே பல்கலைக்கழகத்தில் ஆசிரியராகவும் ஆகிவிடுவர். டாக்டர் சாஹெப் அவர்களின் மகன்கூட எம்.ஏ. தேர்ச்சி பெற்றிருந்தான். அனைத்துத் தகுதிகளையும் குறைவின்றி நிறைவாகவே பெற்றிருந்தான்.

அப்பொழுது காசி இந்து பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராகப் பேராசிரியர் சியாம் சரண்டே என்பவர் இருந்தார். அவர் தன் நண்பராகிய சியாம்சுந்தர்தாஸிடம், அவருடைய மகனின் பணி நியமனம் தொடர்பாக, 'நீங்கள் ஒருமுறை பண்டிட் மதன்மோகன் மாளவியா அவர்களைச் சந்தித்து இதுபற்றிப் பேச முயலுங்கள். பிறவற்றை நான் பார்த்துக்கொள்கிறேன்' என்று கூறினார். ஆனால், அவர் மாளவியா அவர்களைச் சந்திக்கவே இல்லை. துணைவேந்தரின் கையில் நியமனப் பொறுப்பு வந்தபோது சியாம்சுந்தர்தாஸ் அவர்களின் மகனுடைய விண்ணப்பத்தாளே இல்லை. எப்படி நியமனம் செய்ய இயலும்? பிறகு ஒரு சந்தர்ப்பத்தில் துணைவேந்தர் டாக்டர் இராதாகிருஷ்ணன் அவர்களைச் சந்திக்குமாறு கூறவே, அவ்வாறே அவரும் அதன் தொடர்பாகச் சந்திக்கப் போனார். ஆனால், அங்கே பண்பாடு பற்றியும், இலக்கியம் பற்றியும் பேசிவிட்டுத் திரும்பிவிட்டார். இதனால், பையன் தந்தையைப் பிரிந்து தொலைவில் உள்ள அலிகார் தர்மசமாஜம் கல்லூரிக்குச் சென்று பணிபுரிய நேரிட்டது.

மாளவியா அவர்கள் காசி இந்து பல்கலைக் கழகத்தின் தொடர்பான அனைத்திற்குமே பொறுப்பாளராகத் திகழ்ந்தார்; ஆனால், இவரோ ஒரு இந்தித் துறைத் தலைவர் மட்டுமே.

இருப்பினும், இந்தித் தொடர்பான விஷயத்தில் அவருடன் மோதுவார், தகராறு செய்வார். ஒருமுறை இந்திமொழித் தொடர்பாக உருவாக்கப்படவேண்டிய திட்டத்திற்கான தேவைப்படும் தொகையிலிருந்து சிறிது குறைத்து மாளவியா அவர்கள் கொடுத்துவிட்டார்கள். சியாம்சுந்தர்தாஸ் சென்று மறுப்புத் தெரிவித்ததோடு, அவரிடம், 'ஆங்கிலத்திற்கு அதிகம் தந்துள்ளீர்கள்' என்றார். பலர் நிறைந்த காரியாலயத்தில் அவர், 'இந்திக்குத் தாங்கள் அநீதி இழைத்துவிட்டீர்கள். தாங்கள் ஆங்கிலத்தின் ஆதிக்கத்திற்கு அடிமையாகிவிட்டீர்கள்!' என்று துணிவுடன் கூறினார்.

மாளவியா அவர்கள் இனிமையின் தேவதையாகவும், கலைமகளின் மகனாகவும் திகழ்ந்தவர். அவர் புன்னகைபூத்தபடி, 'ஆங்கிலம் பணத்திற்குரிய மொழி என்பதையும் இந்தி தவத்திற்குரிய மொழி என்பதையும் மறந்துவிட்டீர்! இந்திமொழி பணத்தால் நடைபோடுகிறதா? அல்லது தவத்தினாலா?' இப்பதிலைக் கேட்டவுடன் அவர் அமைதி அடைந்துவிட்டார்.

வானொலியில் பேசுவதற்காக ஒருமுறை அழைக்கப்பட்டிருந்தார். அதற்கு அவர் எந்த பதிலும் எழுதி அனுப்பவில்லை. அதிகாரி அவரைச் சந்தித்து இதுபற்றி கேட்டபொழுது அவர், 'சர் தேஜ் பகதூர் சப்ரூ அவர்களுக்கு என்ன சன்மானம் தருகிறீர்கள்?' என்று கேட்டார். அதற்குரிய பதில் கிடைத்தவுடன் அவர், 'சட்டத்துறையில் அவருக்கு என்ன இடமோ அதே இடம்தான் எனக்கு இந்தித் துறையிலும்! ஆயினும், சன்மானம் தருவதில் ஏன் இந்த வேறுபாடு. இந்திக்கு மட்டும் ஏன் இந்த இழிநிலை? எனவேதான் பதில் எழுதி அனுப்பவில்லை' என்றார்.

அவருடைய வாழ்வில் அவர் இளைஞரான இரு மகன்களை இழக்கநேரிட்டது. அவரது உடல்நலம் பெரிதும் பாதிக்கப்பட்டது. ஆயினும்கூட சபைக்குச் சென்று பணிபுரிவதை என்றும் நிறுத்தியதில்லை.

ஒருமுறை ஒரு ஆய்வேடு திருத்துவதற்காக இவரிடம் வந்து சேர்ந்தது. பணியிலிருந்து ஓய்வுபெற்றுவிட்டார். தன் சீடருக்குச் சிபாரிசு செய்யும் நோக்கோடு மற்றொரு பல்கலைக் கழகத்தைச் சார்ந்த ஒரு பேராசிரியர் இவரிடம் வந்து சிபாரிசு செய்ய முயன்றார். சென்றவர், 'இப்படிக் கடுமையாகச் செயலாற்றினால் இந்தி எப்படி வளர்ச்சியுறும்' என்றும், 'எதிர்காலத்தில் ஆய்வேடு

திருத்த எப்படி அனுப்ப இயலும்' என்றும் குறிப்பாகக் கூறினார். உடனே இவர், 'இந்தி மொழித்துறையின் வளர்ச்சி அதன் தன்மானத்தின் அடிப்படையில் வளரவேண்டியது. இத்தகைய செயல்முறையில் எனக்கு நம்பிக்கையில்லை. இனிப் பல்கலைக் கழக ஆய்வேட்டினை எனக்கு மதிப்பீடு செய்ய அனுப்ப வேண்டாம்' என்றார்.

பேடப் அவர்கள் இந்தியில் நகைச்சுவையோடும் அங்கதச் சுவையோடும் சிறப்பாக எழுதக்கூடிய ஒரு மதிப்புவாய்ந்த எழுத்தாளர். அவரது தந்தை ஜெயதேவகௌர் டாக்டர் சியாம்சுந்தர் தாஸின் நண்பர். அங்கதச் சுவையோடு சின்னஞ்சிறிய கருத்துக்களை எழுதுவதில் பேடப் அவர்கள் திறமை வாய்ந்தவர். அதனால், அனைவரையும் தம்பால் ஈர்த்துவந்தார். சியாம்சுந்தர் தாஸ் அவர்கள் பண்பட்டவராதலால் அவரிடம் இத்தகைய கேலி-கிண்டல் யாரும் வைத்துக்கொள்ளுவதில்லை. எனவே, இவரைப் பொறுத்தவரை அங்கதம் வெகுதூரம் உள்ள ஒரு விஷயமாகும். நண்பர்களின் தூண்டுதலால் பேடப் அவர்கள் டாக்டர் சியாம்சுந்தர் தாஸ் அவர்களிடம் ஒருமுறை இதுபோலக் கிண்டலாகப் பேசிவிட்டுச் சென்றுவிட்டார். அதன் பிறகு அவரிடம் செல்லும் துணிச்சல் அவருக்கு ஏற்படவில்லை. ஒருநாள் டாக்டர் பாபு சியாம்சுந்தர் தாஸ், அவரைத் தன் வீட்டிற்கு அழைத்திருந்தார். அவர் வெட்கத்துடன் காணப்பட்டார். இவர் அவரிடம், 'நல்லது செய்தாய்; உன் தந்தை நன்முறையில் வாழ்வ தோடு மட்டுமன்று, தக்கவாறு வாழவும் அறிந்துகொண்டவர். நீ அவரிடம் சென்று கொஞ்சம் வாங்கிக்கொள்! ஒரு மூட்டை கோதுமையை விஸ்வேஸ்வரகஞ்ச்சிலிருந்து அனுப்பி வைக்க வேண்டும்!' என்று கூறினார்.

பேடப் அவர்களுக்கு வியர்த்து விறுவிறுத்துப் போய்விட்டது. அதன்பிறகு ஒருபோதும் சியாம்சுந்தர் தாஸ் அவர்களிடம் கேலி கிண்டலாகப் பேசுவதேயில்லை.

பேராசிரியர் மகாவீர் பிரசாத் துவிவேதி அவர்கள் சியாம்சுந்தர் தாஸ் அவர்களைவிடப் பெரியவராவார். இருவரிடமும் கொள்கை வேறுபாடு இருந்தது. ஒருமுறை இருவரும் மனந்திறந்த எழுத்துப்போர்கூட செய்துகொண்டுவிட்டனர். ஆனால், மகாவீர் பிரசாத் துவிவேதி தன் எல்லாத் தொகுப்பையும் சபைக்கு அதன் தகுதியறிந்து அன்பளிப்பாகத் தந்துவிட்டார். பிறகு சபையிலிருந்து பண்டிட் மகாவீர் பிரசாத் துவிவேதிக்கு ஈடுயிணையற்ற மிகச்சிறந்த, பொருத்தமான இலக்கிய நினைவுமலர் ஒன்று டாக்டர்

சியாம்சுந்தர் தாஸ் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வெளியிடப்பட்டது. அதுபோல, வேறு எவருக்கும் அத்தகைய சிறப்பு கிடைக்கவேயில்லை.

இத்தகைய மேன்மை வேறு எங்கும் அரிதாகவே காணக் கிடைக்கக்கூடும்.

இந்த ஒருசில நிகழ்ச்சிகள்தாமே டாக்டர் சியாம்சுந்தர் தாஸ் அவர்களின் ஆளுமை தன்மையைச் சுட்டிக்காட்ட வல்லன.



# 5. இலக்கியப் பணிக்கானப் பாராட்டுகள்

**சி**யாம்சுந்தர்தாஸ் அவர்களுடைய படைப்புகள் எப்பொழுதும் இந்தி உலகின் மரியாதைக்குப் பாத்திரமாகவே இருந்துவந்திருக்கின்றன. அவர் நாகரி பிரசாரிணி சபையின் மூச்சாக மட்டுமன்றி அனைத்துமாகவே விளங்கிவந்தார். இந்தி சாகித்ய சம்மேளன், அவரைத் தம் தலைவராக 39 வருடத்தின் குறைந்த வயதிலேயே தேர்ந்தெடுத்துத் தம் செய்ந்நன்றியை நன்கு வெளிப்படுத்திக்கொண்டதோடு 'வாசஸ்பதி' பட்டத்தை வழங்கி கௌரவித்தது. காசி இந்து பல்கலைக் கழகம் அவருக்கு டி.லிட். பட்டம் வழங்கிச் சிறப்பு செய்தது. அற்றைய அரசு அவருக்கு 'இராய்பகதூர்' பட்டம் வழங்கி கௌரவித்தது. நாட்டின் சிறப்பு வாய்ந்த இலக்கிய மற்றும் கலாச்சார நிறுவனங்களும் அவரை எப்பொழுதும் கௌரவித்துவந்தன. அவருடைய மரணத்திற்குப்பின் அவருடைய நூற்றாண்டு விழாவினைத் தில்லியில் மூன்று நாட்கள் கொண்டாடினர். இந்திமொழியின் வேறு எந்த இலக்கியவாதிக்கும் இத்தகைய ஆக்கப்பூர்வமான சிறப்புவாய்ந்த நூற்றாண்டு விழா நடத்தியதில்லை. அச்சமயத்தில் ஜனாதிபதி முதலாக சமூகத் தலைவர் மற்றும் இலக்கியத் தொண்டர் அனைவரும் ஒன்றுகூடி உருவாக்கிய ஆக்கப்பூர்வமான சந்திப்பாகத் தோற்றமளித்தது. நூற்றாண்டு நினைவு மலரும், பாராட்டு மலரும் வெளியிடப்பட்டன. அத்தருணத்தில் புகழ்பெற்ற இலக்கியவாதிகள் பலரும் பாராட்டுப் பெற்றனர்.

சியாம்சுந்தர்தாஸ் அவர்களின் வாழ்த்து அவருடைய நற்பணிகளேயாகும். 'சப்தசாகர்' எனப்படும் சொற்களஞ்சியப்பணி நிறைவேறிய பிறகு நாகரிபிரச்சாரிணி சபை அப்பணியில் ஈடுபட்டிருந்த பொறுப்பாசிரியர்களையும் பதிப்பாசிரியரையும் பாராட்டவேண்டுமென முடிவு செய்தது. அவர்கட்கு ஒரு பொன்னாடை போர்த்தி, பாக்கெட் கடிகாரம், ஒரு பேனா ஆகியவற்றையும் அன்பளிப்பாக' வழங்குவதெனவும் முடிவு செய்திருந்தனர். சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் இதன் தொடர்பானத் தம் உறுதியான கருத்தை இவ்வாறு வெளியிட்டு விட்டார்:

'நான் என் வாழ்நாளில் சபையிடமிருந்து எத்தகைய பரிசினையும் பெற்றுக்கொண்டதில்லை. எதிர்காலத்தில்கூட இத்தகைய எந்தப் பரிசையும் எங்கும் விரும்பி ஏற்றுக் கொள்ளமாட்டேன்.'

இறுதியாக, சபை 'அகராதி வெளியீட்டு விழா நினைவு மலர்' வெளியிட முடிவு செய்து மகாமகோபாத்யாய கௌரிசங்கர்

ஹீராசந்த் ஓஜா அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு பணி தொடங்கி நன்கு நிறைவேறியது. அதில் கீழ்க்கண்ட கட்டுரைகள் இடம்பெற்றிருந்தன:

*(1)* ஜோதிட நூல் கர்க்க சம்கிதாவில் பாரத நாட்டின் வரலாறு (ஆசிரியர் - ஸ்ரீ காசிபிரசாத் ஜாயஸ்வால், எம்.ஏ., வித்யாமகோததி)

*(2)* அவதி, இந்தி வட்டாரத்தில் இராமன் - இராவணன் யுத்தம் (ஆசிரியர் - இராய்பகதூர் ஸ்ரீ ஹீராலால், பி.ஏ.,)

*(3)* பிருதிவிராஜ் ராசோ காப்பியம் இயற்றிய காலம் (ஆசிரியர் - மகாமகோபாத்யாய இராய் பகாதூர் ஸ்ரீ கௌரிசங்கர் ஹீராசந்த் ஓஜா).

*(4)* ஆமேரின் கச்வகாஜாதியும் ராவ்பூஜன் மற்றும் ராவ் கீல்ஹன் ஆகியோரின் காலமும் (ஆசிரியர் - ஸ்ரீ ஹரிசரண்சிங் சௌஹான்)

*(5)* பழைய நாணயங்கள் தொடர்பான சில செய்திகள் (ஆசிரியர் - ஸ்ரீ லோசன் பிரசாத் பாண்டே)

*(6)* இந்தி இலக்கிய வரலாற்றில் இடம்பெறாத பகுதிகள் (ஆசிரியர் - ஸ்ரீ பாஸ்கர் இராமச்சந்திர பாலேராவ்).

*(7)* இரவீந்திரநாத் டாகுர் (ஆசிரியர் - ஸ்ரீ நளினி மோகன் சன்யால், பாஷா தத்துவரத்னம், எம்.ஏ.)

*(8)* கௌடில்யர் காலத்திய சில மரபுகள் (ஆசிரியர் - ஸ்ரீ கோபால் தாமோதர் தாமஸ்கர், எம்.ஏ.)

*(9)* பழங்கால ஆர்யவர்த்தமும் அதன் முதல் பேரரசனும் (ஆசிரியர் - ஸ்ரீ ஜெயசங்கர் பிரசாத்)

*(10)* தற்கால இந்தியில் சமஸ்கிருத சொற்களை ஏற்றல் (ஆசிரியர் - மகாமகோபாத்யாய கிரிதர் சர்மா சதுர்வேதி)

*(11)* மகாராஷ்ட்ர படைமுகாம் (ஆசிரியர் - ஸ்ரீ சிவதத்த சர்மா)

*(12)* உச்சரிப்பு (ஆசிரியர் - ஸ்ரீ கேசவ பிரசாத் மிஸ்ரா)

*(13)* கவிராஜன் தோயி அவர்களும் அவருடைய பவன்தூத் அதாவது தென்றல்விடு தூது நூலும் (ஆசிரியர் - ஸ்ரீ பலதேவ் உபாத்யாய, எம்.ஏ.)

(14) கரஹியா கௌ ராயசௌ.
(ஆசிரியர் - ஸ்ரீ உபேந்திரசரண் சர்மா)

(15) புராணங்களின் சிறப்புகள் பற்றிய ஆய்வு (ஆசிரியர் இராய் பகதூர் ஸ்ரீ பண்ட்யாபைஜ்நாத், பி.ஏ.)

(16) பிகாரி சத்சயி நூலின் பிரதாப் சந்திரிகா உரை (ஆசிரியர் புரோகிதர் ஸ்ரீ ஹரி நாராயண சர்மா, .பி.ஏ)

(17) ஆசார்ய கவி கேசவதாஸ்
(ஆசிரியர் - ஸ்ரீ பீதாம்பரதத்த படத்வால், எம்.ஏ.)

(18) இலக்கிய விரஜபாஷையும் அதன் இலக்கணச் சாதனங்களும்
(ஆசிரியர் - ஸ்ரீஜெகந்நாத்தாஸ், 'ரத்னாகர்', பி.ஏ.)

(19) சமூகத்தின் மேன்மை
(ஆசிரியர் - ஸ்ரீ இந்திரதேவ் திவாரி, எம்.ஏ.)

(20) பாலித்தீவில் இந்துக்களின் விழாக்கள்
(ஆசிரியர் - ஸ்ரீ ஹீரானந்த சாஸ்திரி, எம்.ஏ.)

(21) வாத்ஸல்ய ரசம்
(ஆசிரியர் - ஸ்ரீ அயோத்தியாசிங் உபாத்யாய)

(22) கௌடில்யர் அர்த்தசாத்திரம் இயற்றிய காலம்
(ஆசிரியர் - ஸ்ரீ கிருஷ்ணசந்திர வித்யாலங்கார்)

(23) கருத்ஸ்த் (ஆசிரியர் - இராய்கிருஷ்ணதாஸ்)

(24) இந்திமொழியின் கூட்டுவினையில் உருவாகும் சிக்கல்கள் (ஆங்கிலம் - On the Problem of Compound Verbs in the Hindi Language)
(ஆசிரியர் - பேராசிரியர் பராநிகோப்)

(25) The Terminense of Hindi, Calligraphy
(ஆசிரியர் - திரு. ஜூல்ஸ் பலான்ஞ்ச்)

(26) வாசவதத்தை (ஆசிரியர் - ஸ்ரீ ஏ.ஜி. ஷெரிஃப்)

(27) மகாகவிபாணரின் கிடைத்தற்கரிய சில கவிதைகளின் அறிமுகம் (ஆசிரியர் - ஸ்ரீ வடுகநாத சர்மா, எம்.ஏ.)

(28) காசிநகரின் மகிமை (இயற்றியவர் - ஸ்ரீ ஜெகந்நாத்தாஸ் 'ரத்னாகர்').

(29) ஆவரண் - திரை (இயற்றியவர் - ஸ்ரீ ஜெயசங்கர் பிரசாத்).

*(30) நீர்வீழ்ச்சியின் சுதந்திரம்*
*(இயற்றியவர் - ஸ்ரீசாந்தி பிரியதுவிவேதி)*

*இந்த மலரில் சியாம்சுந்தர்தாஸ் அவர்களின் படைப்புக்களைப் பற்றிய செய்தி பத்து பக்கம் மட்டுமே இடம்பெற்றிருந்ததெனலாம். மீதி அனைத்தும் பயனுள்ள சிறப்புவாய்ந்த ஆய்வுக் கட்டுரைகளேயாகும். ஏனெனில், இப்பணியைக்கூட டாக்டர் சியாம்சுந்தர்தாஸ் அவர்களின் ஆக்கப்பூர்வமான செயலுக்குக் கவனம் செலுத்துமாறு செய்ய விரும்பினார். இம்மலர் வெளியீட்டு விழா 1929ஆம் ஆண்டு பிப்ரவரி 14-15 ஆம் நாள் வசந்த பஞ்சமியில் நடந்தது. அந்நாள் பகவதி சாரதா அவர்களின் பிறந்த நாள் ஆகும். நாடு முழுவதிலிருந்தும் புகழ்வாய்ந்த அறிஞர்கள் காசி நகர்க்கு வருகைபுரிந்திருந்தனர். நகரின் கல்வியாளர்களும் பாமரமக்களும் கூடி இந்த விழாவினை நடத்தினர். மாளவியா அவர்கள் சபைக்குரிய புதிய கட்டிடத்திற்கான அடிக்கல் நாட்டி, அந்நாளின் நினைவை நிரந்தரமாக்கிவிட்டார். டாக்டர் கௌரிசங்கர் ஹீராசந்த் ஓஜா இந்தச் சிறப்பு மலரைச் சமர்ப்பணம் செய்வித்த முறை மிகச் சிறப்பு வாய்ந்ததாக அமைந்திருந்தது:*

**சமர்ப்பணம்**

இதன் படைப்பாளரும் உயிரனையவருமான மேன்மைமிகு திருவாளர் பாபு சியாம்சுந்தர்தாஸ், பி.ஏ.

**அவர்களுக்கு**

அவர்தம் பேருழைப்பு நற்றொண்டு மற்றும் அறிவின் ஆக்கம்

**மற்றும்**

அவர்தம் பொறுப்பில் இந்திமொழிக்குரியமிகப்பெரியஅகராதியாகிய 'இந்தி சப்தசாகரம்' வெளியிடப்பட்டது. அதன் பொருட்டு அவரைப் பாராட்டும் பொருட்டும், புகழும் பொருட்டும் காசி நாகரி பிரச்சாரிணி சபையினரால் பணிவுடன் வெளியிடப்பட்டது.

*இந்த விழாகூட கல்வியாளர்களின் வாழ்த்தினைப் பெறுவதற்காகவே கூடியதெனலாம். இதன்மூலம் புகழ்வாய்ந்த ஆக்கப்பூர்வமான நல்வடிவம் ஒன்று உருவாக்கப்பட்டது. அஃது கல்வித் துறையில் இந்திமொழிக்கென ஒரு தனித்தன்மை நிறைந்தநோக்கம் நிறைவேறியது எனலாம்.*



# 6. படைப்புகள்

## படைப்புகளின் கால வரிசை

*சியாம்சுந்தர்தாஸ் புதிய நூல்கள் பல எழுதியுள்ளார். பழம்பெரும் நூல்களுக்கும் புத்தம்புதிய பத்திரிக்கைகளுக்கும் பதிப்பாசிரியராகவும் பொறுப்பேற்றுப் பணியாற்றியுள்ளார். பள்ளிகளுக்குத் தேவையான பாடப்புத்தகங்களும் எழுதியுள்ளார். இவ்வாறு இந்தி இலக்கிய உலகில் பல துறைகளிலும் அவர் தம் எழுத்துப் பணியைச் செய்துள்ளார். இவர் மூலமாக எழுதப்பட்ட, தொகுக்கப்பட்ட, புதுப்பிக்கப்பட்ட நூல்கள் கிட்டத்தட்ட நூறு இருக்கும். அந்நூல்களின் பெயர்களும் வெளிவந்த காலங்களின் வரிசைக்கிரமங்களும் இவ்வாறு அமைந்துள்ளன:*

### (1) புதிய படைப்புகள்

*நூல்களின் வெளியீட்டிற்குரிய கிறிஸ்தவ ஆண்டு வளைவு கோட்டில் கொடுக்கப்பட்டுள்ளது. (1) நாகரி கேரக்டர் (1986) (ஆங்கிலத்தில்), (நாகரி எழுத்தின் தன்மை), (2) 1900 ஆண்டின் இந்திக் கையெழுத்துப் பிரதிகளின் தொடர்பான ஆய்வறிக்கை (1903), (3) 1901 ஆண்டின் இந்திக் கையெழுத்துப் பிரதிகளின் தொடர்பான ஆய்வறிக்கை (1904), (4) 1902 ஆண்டின் இந்திக் கையெழுத்துப் பிரதிகளின் தொடர்பான ஆய்வறிக்கை (1905), (5) 1903 ஆண்டின் இந்திக் கையெழுத்துப் பிரதிகளின் தொடர்பான ஆய்வறிக்கை (1906), (6) 1904 ஆண்டின் இந்திக் கையெழுத்துப் பிரதிகளின் தொடர்பான ஆய்வறிக்கை (1907), (7) 1905 ஆண்டின் இந்திக் கையெழுத்துப் பிரதிகளின் தொடர்பான ஆய்வறிக்கை (1908), (8) முதல் மூன்றாண்டிற்குரிய இந்திக் கையெழுத்துப் பிரதிகளின் தொடர்பான ஆய்வறிக்கை 1906-1908 (1912), (9) இந்தி கோவித் இரத்னமாலா பாகம் 1 மற்றும் 2 (1909-1914) (பாடப்புத்தகங்கள்), (10) சாகித்யாலோசன் (1922) (இலக்கியத் திறனாய்வு), (11) பாஷா விஞ்ஞான் (மொழி நூல்) (1923), (12) இந்தி பாஷா கா விகாஸ் (1923) (இந்தி மொழியின் வளர்ச்சி), (13) இந்தி நூலின் கையெழுத்துப் பிரதிகளின் விபரம் (1923), (14) உரைநடைக்கொத்து (1925), (15) பாரதேந்து அரிச்சந்திரர் (1927), (16) இந்திமொழியும் இலக்கியமும் (1930), (17) கோஸ்வாமி துளசிதாஸ் (1931), (18) ரூபகரஹஸ்யம் (நாடக வகைகள்) (1931), (19) பாஷையின் ரகசியம் - பாகம் - 1 (மொழிநூல்) (1935), (20) இந்திமொழியின்*

*காவலர்கள் - பாகம் - 1 மாற்றும் பாகம் - 2 (1940-41), (21) என் வாழ்க்கை வரலாறு (1941),*

## (2) பதிப்பித்த நூல்கள்

*(1) சந்திராவதி மற்றும் நாசிகேதோபாக்யானம் (1901), (2) சத்ரபிரகாசம் (1903), (3) இராமசரிதமானஸ் (1906), (4) பிருதிவிராஸ் ராசோ (1904-12), (5) வனிதா விநோத் (1905), (6) இந்தி விஞ்ஞான அகராதி (1906), (7) இந்திராவதி பாகம் -1 (1906), (8) ஹம்மீர் ராசோ (1908), (9) சாகுந்தலம் நாடகம் (1908), (10) முதல் இந்தி சாகித்ய சம்மேளன் கட்டுரை மலர் (1911), (11) அசோகரின் மதம் தொடர்பான கல்வெட்டுகள் (1913), (12) பாலர் விநோதம் (1924), (13) இந்தி சப்தசாகர் 1-4 பாகம் (பேரகராதி) (1916-26), (14) மேகதூதம் (1920), (15) தீனதயாள் கிரி கிரந்தாவளி (1921) (நூல் திரட்டு), (16) பரமால் ராசோ (1921), (17) ராணி கேதகி கி கஹானி (1925), (இராணி கேதகியின் கதை), (18) பாரதேந்து நாடகாவளி (1927) (நூல் திரட்டு), (19) கபீர் கிரந்தாவளி (1928) (நூல்திரட்டு), (20) இராமசரிதமானஸ் பாஷா டீகா (1929) (உரை நூல்), (21) இராதாகிருஷ்ண கிரந்தாவளி (1930) (நூல் திரட்டு), (22) சத்சயி சப்தக் (1933), (23) துவிவேதி அபிநந்தன் மலர் (1933), (24) இரத்னாகர் (1933), (25) பாலர் சப்தசாகர் (1935) (கையகராதி), (26) திரிதாரா (1945), (27) நாகரி பிரச்சாரிணி பத்திரிக்கை 1 முதல் 18 பாகங்கள், (28) மனோரஞ்சன் புத்தகமாலா 1 முதல் 41 பாகங்கள், (29) சரஸ்வதி (1900-1901-1902).*

## (3) தொகுப்பு நூல்கள்

*(1) மானஸ் முக்தாவளி (1920), (2) இராமாயணச் சுருக்கம் (1920), (3) இந்தி நிபந்த் மாலா பாகம் 1-2 (1922) (கட்டுரைத் தொகுப்பு), (4) பத்மாவத் சுருக்கம் (1927), (5) இந்தி நிபந்த் ரத்னாவளி பாகம் - 1 (1941) (கட்டுரைத்தொகுப்பு), (6) இந்தி பிரைமரி (1905) (இந்தி தொடக்க நூல்), (7) இந்தி முதற் புத்தகம் (1905), (8) இந்தி இலக்கணம் (1906), (9) இந்திய அரசாங்கம் (1908), (10) இந்தி தொகுப்புநூல் (1908), (11) பாலர் விநோதம் (1908), (12) சரள் சங்கிரகம் (1909), (13) நூதன் சங்கிரகம் (1919), (14) அனுலேக் மாலா (1919), (15) புதிய இந்தி ரீடர் பாகம் - 7 (1923), (16) இந்தி தொகுப்பு நூல் பாடம் 1-2 (1925), (17) இந்தி குசும் சங்கிரகம் பாகம் 1-2 (1925), (18) இந்தி குசுமாவளி (1927), (19) இந்தி உரைநடைத் தொகுப்பு (1927), (20) சாகித்ய பிரதீபம் (1932), (21) இந்தி*

உரைநடைத் தொகுப்பு பாகம் *1-2 (1936-48), (22)* இந்தி பிரவேசிகா பத்யாவளி *(1939-42)* (செய்யுட் தொகுப்பு), *(23)* இந்தி பிரவேசிகா கத்யாவளி *(1939-42)* (உரைநடை நூல்), *(24)* இந்தி கத்ய சங்கிரகம் *(1945)* (உரைநடை நூல்), *(25)* இலக்கிய கட்டுரைகள் *(1945).*

## (4) ஆய்வுரைகளும் கட்டுரைகளும்

*(1)* சந்தோஷ் *(1894), (2)* இந்திய ஆரிய மொழிகளின் வட்டாரப் பிரிவும் அவற்றின் தொடர்புகளும் *(1894), (3)* நாகர் இனமும் நாகரி எழுத்தின் தோற்றமும் *(1894), (4)* வடமேற்கு பிரதேசங்களிலும் அவத் பிரதேசத்திலும் உள்ள வழக்காடு மன்றங்களில் பயன்படுத்தப்பட்டுவந்த எழுத்துக்களும் கல்வி முறையும் *(1898), (5)* இந்திய மொழிகளின் ஆய்வு *(1898), (6)* சாக்கிய வம்சத்து கௌதம புத்தர் *(1899), (7)* உயிரினங்களின் தோற்றம் *(1900), (8)* மகா பண்டிதர் இராமகிருஷ்ண கோபால் பண்டார்கர் *(1900), (9)* கொடைவள்ளல் ஜம்ஷேத் நௌஷர்வான் அவர்கள் *(1900), (10)* இந்திய சிற்பக்கலைக் கல்வி *(1900), (11)* பீசல்தேவ் ராசோ *(1902), (12)* பாரதேஸ்வரி மகாராணி விக்டோரியா *(1901), (13)* இந்தியின் ஆதிகாவியம் *(1901), (14)* கல்வி *(1901), (15)* ஃபோடோகிராஃபி *(1901), (16)* மௌல்வி சையத் அலி பில்கிராமி *(1901), (17)* ஃபதேர் சிக்ரி *(1901), (18)* சட்டக்கல்வி *(1902), (19)* கடமையும் சத்தியமும் *(1902), (20)* முத்ர ராட்சசம் *(1902), (21)* ராசோவின் சொற்கள் *(1902), (22)* பல்கலைக்கழக மான்யக்குழு *(1902), (23)* லாலா விரஜ மோகன்லால் *(1902), (24)* நாகரி எழுத்தும் இந்தியும் *(1902), (25)* தில்லி தர்பார் *(1903), (26)* உடற்பயிற்சி *(1906), (27)* சந்த்பர்தாயி *(1911), (28)* நமது லிபி *(1913), (29)* கோஸ்வாமி துளசிதாஸ் அவர்களின் விநயாவளி *(1920), (30)* இந்தி கையெழுத்துப்பிரதிகளின் தேடல் *(1920), (31)* இராமாவத் சம்பிரதாயம் *(1924), (32)* தற்கால இந்தி உரைநடை இலக்கியத்தின் ஆரம்ப ஆசிரியர் *(1926), (33)* பாரத நாட்டின் நாட்டியக் கலைச் சாத்திரம் *(1926), (34)* கோஸ்வாமி துளசிதாஸ் *(1927-28), (35)* இந்தி இலக்கிய வீரகாவியம் *(1929). (36)* பாலகாண்டத்தின் புதிய பிறப்பு *(1931), (37)* சந்திரகுப்தர் *(1932), (38)* தேவநாகரியும் இந்துஸ்தானியும் *(1937).*

## (5) சொற்பொழிவுகள்

*(1)* இந்தி சாகித்ய சம்மேளனம் (தலைமையுரை; பிரயாகை)

(2) வட்டார இந்தி சாகித்ய சம்மேளனம்
(தலைமையுரை; அலிகார்)

(3) ஓரியண்டல் கான்ஃபரன்ஸ் (பாட்னா)
(கீழ்த்திசை மொழிகளின் மாநாடு)

(4) ஓரியண்டல் கான்ஃபரஸ் (பனாரஸ்)
(கீழ்த்திசை மொழிகளின் மாநாடு)

அவருடைய நூல்கள் நாகரி பிரச்சாரிணி சபை, இந்துஸ்தானி அக்காதெமி, இண்டியன் பிரஸ், சாகித்ய ரத்னமாலா காரியாலயம், மாக்மில்லன் கம்பெனி ஆகிய வெளியீட்டகங்களின் மூலம் வெளியிடப்பட்டிருந்தன. அவருடைய நூல் விவரப்பட்டியல்களின் வாயிலாக அவர் இந்தி மொழியில் ஆரம்ப பாடப்புத்தகம் முதலாக இந்திமொழி வரலாறு, இந்தி இலக்கிய வரலாறு மற்றும் அறிவியல் தொடர்பான எல்லாக் கருத்துக்களும் அடங்கிய நூல்கள் எழுதியுள்ளார் எனத் தெரியவருகிறது. இந்திமொழி, இலக்கியம் தொடர்பான இத்தகைய விரிவான நிலையில் வேறு எவரும் எழுதவில்லையெனத் தெளிவாகத் தெரிகிறது.

## (6) கட்டுரைகள்

பாபு சியாம்சுந்தர்தாஸ் தமது 19ஆம் வயதிலிருந்து கட்டுரை எழுதத் தொடங்கியுள்ளார் எனத் தெரியவருகிறது. இவருடைய கட்டுரைகள் 1894ஆம் ஆண்டிலிருந்து 1937ஆம் ஆண்டு வரை பலதரப்பட்ட பத்திரிக்கைகளில் வெளிவந்துள்ளன. நூல்கள் எழுதும் பணியும், பதிப்பிக்கும் பணிகளும் 1896ஆம் ஆண்டில் தொடங்கி வாழ்வின் இறுதிக் காலம் வரை அதாவது 1945ஆம் ஆண்டு வரை தொடர்ந்து நடந்துவந்தது. இவர் முதலில் ஆங்கில மொழியில்தான் 'நாகரி கேரக்டர்' (நாகரி எழுத்தின் தன்மை) என்ற நூல் எழுதி வெளியிட்டார். இந்தி மொழியில் எழுதிய முதல் நூல் 'சந்தோஷ்' என்பதாகும். 1906ஆம் ஆண்டு வரை பலவிதமான கட்டுரைகளை எழுதிவந்தார். அச்சமயம் இலக்கியத்திற்குப் புறம்பான விஷயங்களைப் பற்றியும் எழுதுவோரின் அளவு மிகப்பெரிதாகவே பரவியிருந்தது. மனநூல், வாழ்க்கை வரலாறு, பலவிதமான மொழிகளின் இலக்கியச் சிற்பிகள், தொழிலதிபர்கள், புலவர் பெருமக்கள், ஆட்சியாளர்கள், நிலைநாட்டப்பெற்ற பண்பட்ட நீதிமுறைகள், கல்வி, உடல்நலம், அறிவியல் முதலான விஷயங்கள் தொடர்பாகப் பற்பல கட்டுரைகளை எழுதிவந்துள்ளார்.

இந்தக் கட்டுரைகள் பெரும்பாலும் 'நாகரி பிரச்சாரிணி பத்திரிக்கை'யிலும், 'சரஸ்வதி' பத்திரிக்கையிலும் வெளியிடுவதற்காக எழுதப்பட்டன. பத்திரிக்கையில் வெளியிடப் படவேண்டிய கட்டுரைகளில் எவையேனும் எழுதப்படாமல் விடப்பட்டிருந்தால், அவற்றைத் தக்கவாறு எழுதி வெளியிடும் பொறுப்பு ஆசிரியரைச் சார்ந்ததேயாகும். மேலும், அச்சமயத்தில் எழுதப்படும் கட்டுரைகளுக்கு யாதொரு சன்மானமும் தரப்பட்டதுமில்லை. இதனால், ஆசிரியரின் பொறுப்பு அதிகமாக இருந்தது. இவரால் எழுதப்பட்ட பெரும்பாலான கட்டுரைகள் இத்தகைய பொறுப்பினைச் சிறப்பாக நிறைவேற்றவேண்டுமென்ற நிலையில் எழுதப்பட்டவையே ஆகும். இலக்கியத்திற்குப் புறம்பான விஷயங்களைப் பற்றி டாக்டர் சியாம்சுந்தர்தாஸ் எழுதினாலும், அவை உயிரினங்களைப் பற்றியதாகவோ, ஃபோடோகிராஃபி சம்பந்தப்பட்டதாகவோ இருந்தாலும்கூட தேவையான எல்லா செய்திகளும் அவற்றில் இடம்பெற்று பயன்தரத்தக்கதாகவே அமைந்திருந்தன. அவற்றில் மொழி நடை, கருத்துக்கள், வடிவங்கள் மற்றும் தரப்பட்டிருந்த வரைபடங்களும் ஓவியங்களும்கூட அவருடைய பேரறிவின் சிறப்பை எடுத்துக்காட்டக்கூடியவையாகவே இருந்தன.

இவர் 1906ஆம் ஆண்டிற்குப் பிறகு மொழி, இலக்கியம், கலை, பண்பாடு, எழுத்து மற்றும் தொல்பொருள் தொடர்பானவற்றில் விருப்பம் நீங்கிப்போய், மொழி, இலக்கியம் தொடர்பாகக் கண்டறிந்த செய்திகளை சிறந்த முறையில் கட்டுரையாக எழுதி வெளியிடலானார். இதற்கென அவர் மேற்கொண்ட ஆய்வுப்பணிகளின் தொடர்பான பணிகளில் அதிகம் ஈடுபாடு கொண்டதன் காரணமாக ஆழமான புலமையும் கருத்துக்களும் கிடைத்ததோடு தம் நோக்கிற்குத் தேவைப்படும் உயர்ந்த தத்துவங்களையும் அவற்றிலிருந்து பெற்று பெருமை பெற நேரிட்டது. இவர் கண்டறிந்த விஷயங்களைக் கொண்டு எழுதிய எல்லாக் கட்டுரைகளும் ஆழ்ந்த பொருளோடு மட்டுமன்று என்றும் பயன்தரத்தக்க வகையில் அமைந்து அறிவை வளர்க்கும் துணைக்கருவியாகவும் திகழ்ந்திருந்தன எனலாம். அவர் இலக்கிய நோக்கில் அறிவியற் கருத்துக்களையும், அறிவியல் நோக்கில் இலக்கிய கருத்துக்களையும் நயம்பட எழுதிவந்தார். இத்தகைய விஷயங்களை எழுதும் கட்டுரையாளர், படிப்போரின் அறிவுத்திறனோடு ஒரே தன்மையுடையவராக்கும் திறன் மற்றும் தரம் ஆகியவற்றில் வெற்றிகாண இயலாது போயிருந்தால் இயல்பான நற்சிந்தனையாளராகத் திகழ்ந்திருக்கமாட்டார்; இத்தகைய பேராற்றல் அவரிடம் இயல்பாக அமைந்திருந்ததெனலாம்.

அவருடைய பெரும்பாலான கட்டுரைகள் பல நூல்களில் இடம்பெற்றுள்ளன. சில கட்டுரைகள் காலத்திற்கேற்றதாகவும், சில சூழ்நிலைக்கேற்ப கட்டாயத்தின் பேரில் எழுதப்பட்டவையாகவும் இருந்தன. அவையும்கூட தமக்குரிய சிறப்போடு அமைந்திருந்த தென்றாலும்கூட, காலத்தை வெல்லும் சிறப்புவாய்ந்த கட்டுரைகளாக அமைந்திருக்கவில்லை என்றே கூறவேண்டி யிருக்கிறது.

அவர்தம் வாழ்நாளில் ஆக்கப்பூர்வமான புதிய படைப்பிலக்கியங்களை அதிகம் படைக்கவில்லை. ஆனால், இலக்கியப் படைப்பிற்குரிய அடிப்படைத் தத்துவங்களை வரலாற்று நெறிமுறையில் கற்றறிந்தும் ஆய்வு செய்தும் பயன்பாட்டு முறையில் எழுதியுள்ளார் எனக் கூறலாம். இத்துடன் பல இடங்களில் அகப்பட்டு மறைந்துகிடந்த இந்தி இலக்கியங்களை வெளிக்கொணர்ந்து தக்கவாறு பாதுகாத்து. செம்மைப்படுத்திப் பதிப்பித்து வெளியிட்டார். அத்தகைய நூல்களின் வாயிலாக உலகில் இந்திமொழிக்குரிய பழைய இலக்கியங்களின் அறிமுகம் நன்முறையில் உருவாகி அதன் பெருமையும் புகழும், நன்கு பரவலாயின. அவர் வகுப்புகளில்கற்பிப்பதற்கேற்ற இந்தி ஆரம்பப்பாடப்புத்தகம், கடிதம் எழுதும் கலை முதலாக எம்.ஏ. வகுப்பிற்கு வரை உதவும் தொகுப்பு நூல்கள் வரை வெளியிட்டும், தாமும் எழுதி வெளியிட்டும் வந்தார். இத்தகைய பணிகளுக்கு உதவும்பொருட்டு அறிவியல் மற்றும் சாத்திர நூல்களின் கருத்துக்களையும் தனித்தனியாக நூல் வடிவில் வெளியிடவும் ஏற்பாடு செய்தார். தொகுப்பு நூல்களில் இலக்கியகர்த்தாக்களின் அறிமுகம் இடம்பெற்றிருந்ததோடு, பாடங்கள் தொடர்பான குறிப்புகளும் நன்முறையில் இடம் பெற்றிருந்தன. வகுப்புகளுக்கு ஏற்ப இலக்கியங்களைத் தக்க வாறு பாகுபடுத்திப் படிப்படியாக கல்வி கற்போர் நல்லறிவைப் பெற்றுச் சிறக்கும் முறையில் தரம்பிரித்துப் பாடநூல் வெளியிடும் முறைக்கு இவரே பிள்ளையார் சுழி இட்டார் எனலாம். பாடப்புத்தகங்களுக்கு ஏற்ப இலக்கியங்களையும், கட்டுரைகளையும் தேர்ந்தெடுக்கும் நிலையில் இவர் பெற்றிருந்த கருத்து மிகச் சிறப்பு வாய்ந்த ஒன்றாகும். அவரால் வெளியிடப்பட்ட அந்த முறைகளும் வடிவங்களும் இத்துறைக்கு ஒரு வழிகாட்டியாக அமைந்து இன்றும்கூட அவற்றை ஆதாரமாகக் கொண்டு பாடநூல் வெளியிட்டு வருவோர் எண்ணிக்கை மிகுதியாகும்.

## வாழ்க்கை வரலாறும் ஆய்வுக் கட்டுரைகளும் இந்தி கோவித் ரத்னமாலா பாகம் 1, 2 மற்றும் இந்தி மொழிச் சிற்பிகள் பாகம் 1 – 2

அவர் இலக்கிய கர்த்தாக்களின் வாழ்க்கை வரலாற்றையும் விரிவாக எழுதினார். அவர் இப்பணியை 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே செய்யத்தொடங்கினார். 'இந்தி கோவித் ரத்னமாலா' இருபாகங்களாக வெளியிடும் பணி 1914ஆம் ஆண்டு பூர்த்தி ஆயிற்று. இந்தி மொழியின் எண்பது அறிஞர்கள் மற்றும் தொண்டர்களின் அறிமுகமாக அவர்களின் வாழ்க்கை வரலாறு வெளியிடப்பட்டது. இதன் முதற்பாகம் 1909ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. இந்தி மொழித் தொண்டர்களைச் சுருக்கமாக அறிமுகப்படுத்தி அவர்களுக்கிடையே தூய அன்பும் உறவும்உருவாகும்படிச் செய்வதே இதன் நோக்கமாக அமைந்திருந்தது. இந்திமொழி இலக்கிய உலகில் புலவர் பெருமக்களால்எழுதப்பட்ட திறனாய்வுக் கட்டுரைகளால் மனக்கசப்பும் வெறுப்புணர்ச்சியும் பரவிக்கொண்டிருந்தன. அவர் இதனைப் போக்கும் நோக்கோடுதான் இத்தகைய நூல்களை வெளியிட முயற்சி செய்தார். அச்சமயத்தில் இந்தி மொழித் தொண்டர்களும் இலக்கிய கர்த்தாக்களும் தங்கள் தங்கள் கண்ணோட்டத்திற்கேற்ப இந்தி மொழிக்குத் தொண்டு செய்துவந்தனர். ஒவ்வொருவர்க்கும் தனித்தனி திறமை நிறைந்திருந்தது. அதனை பாபு சியாம்சுந்தர்தாஸ் நூல்களின் மூலம் வெளிப்படுத்தி ஒருவர் ம்ற்றொருவரின் அருகே வருமாறு வழிவகுத்தார். இதில் எல்லா இனத்தவர்க்கும், மரபினைப் போற்றுவோர்க்கும் மற்றும் எல்லாப் பிரிவினர்களுக்கும் உரிய இடத்தை வழங்கிருந்தார். அப்பொழுது இந்திமொழியுலகில் தொண்டு புரிந்துவந்த இளைஞர்களில் பெரும்பாலோர் அவருடைய மாணவர்களாகத் திகழ்ந்திருந்தனர். அவர்களையும் பரிவோடு நன்முறையில் இந்நூலில் அறிமுகம் செய்து, தொடர்ந்து நன்கு தொண்டாற்றுவதற்குரிய ஆக்கத்தைப் பெறுமாறு செய்தார். இவ்வாறு எல்லா இந்திமொழித்தொண்டர்கள் மற்றும் இலக்கிய கர்த்தாக்களின் வாழ்க்கை வரலாற்றை இவ்வாறு நூலாக வெளியிடும் முதல் முயற்சியாக இந்திமொழியில் இவரால்தான் மேற்கொள்ளப்பட்டு வெளியிடப்பட்டதெனலாம். இதன் தேவை இந்தி மொழியுலகில் நிரந்தரமாகத் தொடர்ந்து இருந்துவந்தது. பலருடைய பெரும் புகழுக்கு இந்த நூல்களே அடிப்படை ஆதாரமாக நிலவிவந்தன என்பர். இந்த நூல் மிக எளிய மொழியில் எழுதப்பட்டிருப்பதோடு நடுவுநிலைமையோடு எல்லாச் சிறப்பான செய்திகளும் விடுபடாமல் இடம்பெறச்

செய்திருந்தார். விடுபட்ட செய்திகள், விளக்கம், சுருக்கம், மாற்றம் போன்றவை தக்கவாறு இடம் பெற்று பிறகு 'இந்திமொழியின் நிறுவனர்கள்' என்ற பெயரில் இருபாகங்களாக நன்முறையில் வெளியிடப்பட்டது.

## பாரதேந்து அரிச்சந்திரர்

வாழ்க்கை வரலாற்று நூல் வரிசையில் அவரது இரண்டாவது படைப்பாக இடம்பெற்றது 'பாரதேந்து அரிச்சந்திரர்' என்பதாகும். இஃது 'இந்தி கோவித் ரத்னமாலா' என்ற வெளியீட்டின் வளர்ச்சிப்படி ஆகும். இதுபோலவே இந்திமொழி இலக்கியத்தின் பெருஞ்சாரதிகளின் அறிமுகம் சுருக்கமாகத் தரப்பட்டும், அவர்களின் இலக்கியத் தொண்டின் விபரங்கள் தரப்பட்டும், முறையான மதிப்பீடு செய்யப்பட்டும், அவர்கள் தொடர்பான எல்லாச் செய்திகளும் எல்லார்க்கும் மிக எளிதாகக் கிடைக்க வேண்டுமென்பது அவரது அவா. 'பாரதேந்து நாடகாவளி' என்னும் நூலுக்குப் பதிப்பாசிரியராக இருந்து பணிபுரிந்தபோது அவருடைய உள்ளத்தில், 'அந்த நூலிற்குரிய முகவுரை தொடர்பான எல்லாச் செய்திகளையும் முறையாகத் தொகுத்துத் தனியாக ஒரு நூல்வடிவில் வெளியிடவேண்டும்' என்ற எண்ணம் உருவாயிற்று. அந்த நூலில் இடம்பெறவேண்டிய எல்லாவிதமான சிறப்பம்சங்களும் முறையாகப் பெற்று அச்சுவாகனம் ஏறவேண்டுமென பெருமுயற்சி எடுத்துக்கொண்டார். இதில் பாரதேந்துவின் காலம், பரம்பரை, வாழ்க்கை வரலாறு, பரவிக்கிடந்த நல்லுணர்வுகள், காவியப் படைப்புகள், நாடக ஆக்கங்கள், உரைநடை நூல்கள், வாழ்வின் துயரச்செய்திகள், 'பாரதேந்து' என்னும் பட்டப்பெயரின் மாண்பு, வாழ்வின் முடிவு மற்றும் முடிவுரை ஆகிய இயல்களை அமைத்திருந்தார். இந்நூல் கிட்டத்தட்ட நூறு பக்கங்களைக்கொண்டிருந்தது. இப்பணி இந்திமொழிக்குரிய நற்பணியின் , மூன்றாம் பத்தாண்டில் நிறைவேறியது. சாகித்ய அக்காதெமி' இன்று இந்தப் பணியைத் தான் இந்திய இலக்கியச் சிற்பிகள் என்ற வரிசையில் செய்து வருகிறது. நூல் நல்ல படங்களுடனும், செய்திகளுடனும் நிறைந்திருந்தது. இந்நூல் தொடர்பான கருத்து வேறுபாடுகள் பலநிலவி யிருந்தும்கூட, வாத-விவாதத்திற்குரிய நூலாக அமைந்திருக்க வில்லை. பாரதேந்து அரிச்சந்திரரின் வாழ்வு, இலக்கியம் தொடர்பாக ஆய்வு செய்வார்க்குத் தேவையான எல்லாச் செய்திகளும் எளிய முறையில் இந்நூலின் வாயிலாகக் கிடைத்துவந்ததோடு அவரின் வாழ்க்கைவரலாற்றினையும்

இலக்கியத் தொண்டினையும் பரவலாக ஆய்வு செய்வதற்கான வாயிற் கதவு திறக்கப்பட்டது எனலாம். இத்தகைய சிறப்புவாய்ந்த நிலை எல்லா நூல்களிலுமே இடம்பெறுமாறு செய்தார் எனலாம். 'கோஸ்வாமி துளசிதாஸ்' என்ற நூலாகட்டும், 'ராணி கேதகியின் கதை' என்ற நூலாகட்டும், ராஜா லட்சுமணசிங் அவர்களால் எழுதப்பெற்ற காளிதாஸ் நூலுக்குரிய பதிப்புரையாகட்டும், இராதாகிருஷ்ணன் கிரந்தாவளியாகட்டும் எல்லாவற்றிலும் இத்தகைய சிறப்பம்சங்கள் நிறைந்திருந்ததைக் காணலாம். தற்காலநிலைக்கேற்ப இலக்கியக் கர்த்தாக்களின் எளிய வாழ்வையும், இலக்கியப் படைப்பையும் நன்முறையில் அறிமுகப்படுத்தும் எல்லா நூல்களிலுமே அவர் தற்கால இந்திமொழியிலேயே எழுதத் தொடங்கி, அவையனைத்தும் அறிவுபூர்வமாகத் திகழுமாறு செய்தார். இன்று இத்தகைய நூல்கள் ஏராளமாக வெளிவரினுங்கூட, அக்காலத்தியச் சூழலில் இத்தகைய பணியைச் செய்திருப்பது மிகச் சிறந்த ஒன்றாகத்தான் கருதவேண்டியிருக்கிறது.

## கோஸ்வாமி துளசிதாஸ்

துளசிதாசரின் வாழ்வும், இலக்கியமும் தொடர்பான அவருடைய திறனாய்வு நூலாகக் கருதப்படுவதுதான் கோஸ்வாமி துளசிதாஸ் என்பதாகும். இவர் 'இராமசரிதமானஸ்' காவியத்தின் பதிப்பாசிரியர் பணியைக்கூட துவிவேதி காலத்தின் துவக்கத்தில் செய்துள்ளார். துளசிதாசர் இலக்கியத்தின்மீது அவருக்கு அதிக ஈடுபாடும் உயர்ந்த கருத்தும் நிலவியிருந்தது. சிறுவயதிலிருந்தே இந்த நூலின் தாக்கம் அவரிடம் அதிகம் இருந்ததெனலாம். இவர் துளசிதாசரின் சம்பந்தப்பட்ட தமக்குக் கிடைத்த எல்லாக் கருத்துக்களையுமே ஆய்வு செய்து தொகுத்து வெளியிட்டதோடுகூட, காலத்திற்கேற்ப அவருடைய இலக்கியத்தையும் புதிய நோக்கில் திறனாய்வு செய்திருந்தார். பேராசிரியர் இராமச்சந்திர சுக்லா துளசிதாசர் பற்றிய ஒரு சிறந்த ஆய்வு நூலை எழுதியிருந்தார். அஃது அவரது கண்ணோட்டத்தின் பெருஞ் சிறப்பாலும் மதிப்பீட்டாலும் மிகச் சிறந்த திறனாய்விற்குரிய அளவுகோலாகத் திகழும் உரிமையை பெற்றிருந்தது. 'துளசி கிரந்தாவளி' என்ற நூலின் பதிப்பாசிரியராகப் பொறுபேற்றிருந்த போது சுக்லா அவர்கள் மூலம் கட்டுரைகள் எழுதச் செய்திருந்தார். துளசிதாசரின் வாழ்க்கை வரலாற்றைப் பேராசிரியர் இராமச்சந்திர சுக்லா அவர்கள் பாபு சியாம்சுந்தர் தாஸ் அவர்கள் திரட்டிக்கொடுத்த மூலாதாரங் களைக்கொண்டுதான் எழுதியிருந்தார். 'துளசிதாசர்' நூலின்

இரண்டாவது பதிப்பில் சுக்லா அவர்கள் தன்னுடைய கருத்தாக வெளியிட்டிருந்த பல வரலாற்றுச் செய்திகளின் தொடர்பான கட்டுரைகளை நீக்கிவிட்டார். ஏனென்றால், அவையனைத்தும் சியாம்சுந்தர் தாஸ் அவர்களின் கருணையால் கிடைத்தவையாகும். துளசிதாசரின் வரலாற்றுத் தொடர்பான ஆய்வுக்கு உதவும் மூலாதாரங்கள் அனைத்தும் சியாம்சுந்தர் தாஸ் நூலாகிய 'துளசிதாசர்' என்ற இந்த நூலில் முழுமையாக இருந்தன. இத்துடன் அவருடைய இலக்கியம் தொடர்பான எல்லாச் சிறப்புவாய்ந்த பயனுள்ள கருத்துக்களும்கூட நன்கு அமைந்திருந்தன எனலாம். 'கோஸ்வாமி துளசிதாஸ்' என்ற நூல் இன்றைய ஆய்வு நோக்கிற்கேற்ப ஆழ்ந்த ஆய்வின் கருத்தாக ஏற்க இயலாவிடினுங்கூட அவருடைய வரலாறு, இலக்கியம் தொடர்பாக இன்றும் அறிந்துகொள்ள விழைவார்க்கு ஏற்ற செய்திகளை முழுமையாகத் தரக்கூடிய அனைவராலும் ஏற்கத்தக்க செய்திகளைத் தன்னகத்தே கொண்ட ஒரு நல்ல நூலாக இது கருதப்பட்டு வருகிறது எனலாம்.

## பதிப்பித்த நூல்கள்

### தேடல் - விபரம்

அவருடைய பொறுப்பில் வெளிவந்த நூல்களில் பழம்பெரும் இந்திமொழி நூல்களில் தேடல் தொடர்பான ஆண்டறிக்கை மற்றும் மூன்றாண்டறிக்கை தொடர்பான விபரங்கள் முன்பே தரப்பட்டுள்ளன. இவற்றின் வாயிலாக அவர் இந்தி இலக்கிய ஆராய்ச்சிப் பணிக்கும் வரலாறு எழுதும் பணிக்கும் தேவையான மூலாதாரங்களைத் தந்ததோடு ஆய்வுக்கும் தேடல் பணிக்கும் உரிய நற்பாதையையும் காண்பித்துள்ளார். இப்பணி முறையோடு முதன்முதலாக அவரால் செய்யப்பெற்ற மிகச்சிறந்த நற்பணியாகும். இந்நோக்கில்பார்த்தால் உண்மையிலேயே அவர் ஆய்வுலகில் எல்லாராலும் போற்றப்பெற்ற தகுதிவாய்ந்த தலைவராகத் திகழ்ந்தார் என்று கூறலாம்.

### இந்தி சப்தசாகர் மற்றும் அறிவியல் அகராதி

இந்தி சப்தசாகர் மற்றும் இந்தி அறிவியல் தொடர்பான செய்திகள் அனைத்தும் முன்பே கூறப்பட்டுவிட்டன. அவருடைய இப்பணி உலகச் சாதனைகளுள் ஒன்றாகக் கருதப்பெறுகிறது. இந்த அகராதிகள் இந்திய மற்றும் உலக மொழிகளுக்கிடையே இந்திமொழியின் பெருமையை மேலும் உயர்த்தின என்று துணிந்துகூறலாம். பல சிறப்பம்சங்களால் இந்த அகராதி

இந்திமொழியில் முதன்மையான இடத்தைப் பெற்றுவிட்டன என்றும் கூறலாம். இதன் தொடர்பான செய்திகளும் கூட முன்பே விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

## சாகுந்தலம் மற்றும் மேகதூதம் நூல்கள் வெளியீடு

அவர் பதிப்பாசிரியராக இருந்து வெளியிட்ட பல நூல்களில் ராஜா லட்சுமணசிங் எழுதிய 'மேகதூதம்' மற்றும் 'சாகுந்தல நாடகம்' போன்ற நூல்களும் இடம்பெற்றிருந்தன. ராஜா லட்சுமணசிங் பாரதேந்துவிற்கு முற்பட்ட இந்திமொழி இலக்கியத்துறையைச் செம்மைப்படுத்திய பேரறிஞர் ஆவார். அவருடைய வழியைப் பின்பற்றித்தான் பாரதேந்து அவர்கள் தற்கால உரைநடை இலக்கியம் நன்கு வளர்வதற்கான ஆக்கப்பூர்வமான செயல்களைச் செய்துவந்தார் எனலாம்.

ராஜா லட்சுமணசிங் இந்திமொழியில் உரைநடைக்குரிய மொழி சம்பந்தப்பட்ட கருத்தைக் கீழ்க் கண்டவாறு வெளியிட்டுள்ளார்:

> "என் கருத்தின்படி இந்தியும் உருதுவும் இருவேறு வகைப்பட்டச் சிறந்த மொழிகளாகும். இந்நாட்டின் இந்துக்கள் இந்திமொழியைப் பேசிவருகின்றனர்; இந்நாட்டின் முகம்மதியர்களுக்கும் பாரசீக மொழியைக் கற்றறிந்த இந்துக்களுக்கும் உருது ஒரு பேச்சு மொழி ஆகும். இந்தியில் சமஸ்கிருதச் சொற்கள் அதிகமாக இடம்பெற்றுள்ளன. ஆனால், உருதுமொழியில் அரபி-பாரசீகச் சொற்கள் அதிகம் இடம்பெற்றுள்ளன. ஆனால், உருதுமொழியில் அரபி-பாரசீக மொழிச்சொற்கள் இன்றி இந்தி மொழியைப் பேச இயலாது என்று சொல்வதும் தேவையற்றது; அரபி-பாரசீக மொழிச்சொற்கள் அதிகம் இடம்பெறுமாறு செய்து பேசும் மொழியை இந்திமொழி எனக் கூறுவது தவறு என்று சொல்லவதும் தேவையற்றது" (இரகுவம்சம் நூலின் மொழிபெயர்ப்பு).

ராஜா லட்சுமணசிங் பல்வகைப்பட்ட கொள்கைகளை முன்வைத்து இந்திமொழித்துறையில் நற்றொண்டாற்றினார். அவருடைய மொழிநடை தூய இந்தி மொழி நடையாக மட்டுமன்று, சமஸ்கிருதத்தின் எளிய, இனிய, நற்சொற்கள் இடம்பெறுமாறு செய்து எழுதுவதில் வல்லவர். அரபி மற்றும் பாரசீகமொழிச் சொற்களும் அளவோடு, எந்த அளவிற்கு

மக்களிடையே அது செல்வாக்குப் பெற்றிருந்ததோ, அந்த அளவிற்கு இடம்பெற்றிருந்தன. விரஜபாஷையின் மொழிநடையும்கூட அவருடைய உரைநடையில் நிறைந்திருக்கும். அவருடைய படைப்புக்களில் தொடக்ககால இந்திமொழி உரைநடை நன்முறையில் அமைந்திருந்து எதிர்கால இந்தி மொழி உரைநடைக்குரிய ஆக்கத்தையும் ஊக்கத்தையும் நல்கிற்று எனலாம். அவருடைய மொழிநடை உணர்வை முதலிடமாகப் பெற்றுத் திகழ்ந்தது என்று கூறலாம்.

ராஜா லட்சுமணசிங் அவர்களின் சாகுந்தல நாடகம் (காளிதாசரால் இயற்றப்பெற்ற 'அபிஞான சாகுந்தலம்') முதன்முதலாக 1863ஆம்ஆண்டு வெளியிடப்பட்டது. அதன் 2-வது பதிப்பின் மொழிபெயர்ப்பில் ஆசிரியர் மூலநூலின் படியே, அதாவது உரைநடை உள்ள இடத்தில் உரைநடையாகவும், கவிதை உள்ள இடத்தில் கவிதையாகவும் மொழிபெயர்த்து அமைத்திருந்தார். கவிதைகள் அனைத்தையும் விரஜபாஷையில் அமைத்திருந்தார். ஆனால், முதற் பதிப்பில் பெரும்பாலும் உரைநடை வடிவாகவே மொழிபெயர்ப்புச் செய்திருந்தார். ஓரிரு இடங்களில் மட்டும் சில கவிதைகள் இடம்பெற்றிருந்தன. இந்த முதற்பதிப்பு கிடைக்கவில்லை. ஃப்ரட்ரிக் பிங்காட் என்பவர் இந்நூலினை இங்கிலாந்தில் தன் ஆங்கிலக் குறிப்புரையுடன் பதிப்பித்து வெளியிட்டிருந்தார். ஆனால், அந்த அரசாங்கப் பதிப்பு அதிக விலையுடையதாக இருந்தது. மற்றொன்று, இந்தி மட்டும் அறிந்திருந்தவர்க்கு அந்த நூல் பயனளிக்கவில்லை. மக்கள் 2ஆம் பதிப்பைவிட அதிகமாக முதற்பதிப்பையே விரும்பி ஆர்வத்துடன் படிக்கலாயினர். டாக்டர் சியாம்சுந்தர்தாஸ் அதனை மீண்டும் அப்படியே யாதொரு மாற்றமுமின்றி பதிப்பித்து வெளியிட்டார். அதில் எழுத்துக்கள் ஒன்றுபோல் அமையவில்லை. ஐந்தாவது மெய்யெழுத்துக்களைப் பயன்படுத்தும்பொழுது ஒரு குறிப்பிட்ட நிலையைப் பின்பற்றாது விருப்பம்போல அதன் வடிவம் அமைந்திருந்தது. இதைக் கண்டறிந்த சியாம்சுந்தர்தாஸ் எழுத்து அமைப்பு முறையில் ஒருமைப்பாட்டைப் பின்பற்றிய தோடு ஐந்தாவது மெய்யெழுத்தைப் பயன்படுத்தியபொழுது எல்லா இடங்களிலும் மூக்கொலி எழுத்துக்களையே பயன்படுத்தி வந்தார். இந்திமொழியில் அப்பொழுது ஐந்தாம் மெய்யெழுத்தோடு மூக்கொலி எழுத்து முறையையும் பயன்படுத்தாது தங்கள் விருப்பம்போல எழுதிவந்தனர். அதன்மீது அதிக கவனம் செலுத்தி ஒருமுகப்படுத்தி வெளியிடுவதில் அதிக கவனம் செலுத்தி வந்தார். இந்நூலில் அவர் ராஜா லட்சுமணசிங் அவர்களின் வாழ்க்கை வரலாறும், மொழிபெயர்ப்பின் சிறப்பம் சங்களையும் நன்கு

ஆய்வுநெறியில் எழுதி அறிமுகப்படுத்தியிருந்தார். அவர் இந்நூலில் மூலநூலின் சமஸ்கிருத சுலோகங்களையும்கூட அச்சிட்டு வெளியிட்டிருந்தார். டாக்டர் சியாம்சுந்தர் தாஸ் இப்பணியில் நன்கு கவனம் செலுத்தி நன்முறையில் வெளியிட்டிருந்தார். இவ்வாறே மேகதூதம் நூலையும் பதிப்பித்தார் என்று சொல்லலாம். இவருடைய தனித்திறனால் பதிப்பிக்கப்பட்ட அந்த 'சாகுந்தல நாடகம்' என்ற நூல் 1908ஆம் ஆண்டு முதன்முதலாக வெளியிடப்பட்டது. அதன்பிறகு இதன் பல பதிப்புக்கள் தொடர்ந்து வரலாயின.

பாபு சியாம்சுந்தர் தாஸ் அவருடைய இரண்டாவது மொழிபெயர்ப்பு நூலாகிய காளிதாசரின் 'மேகதூதம்' என்ற நூலினையும் முறையாக 1920ஆம் ஆண்டு பதிப்பித்து வெளியிட்டார். இந்நூலில் ராஜா லட்சுமணசிங் அவர்கள் வாழ்க்கை வரலாற்றினைத் தந்ததோடு அவருடைய படைப்பு களின் சிறப்பம்சங்களையும் சுருக்கமாகத் தந்திருந்தார். இந்தக் காளிதாசரின் 'மேகதூதம்' நூலின் மொழிபெயர்ப்பு நூல் இதற்குமுன்பே 1882இல் முதல் பாகமும் 1884இல் 2ஆம்பாகமும் வெளியிடப்பட்டிருந்தன. பிறகு 1893ஆம் ஆண்டு இதன் மூன்றாவது பதிப்பு வெளிவந்தது. ஆனால், அது கிடைக்கவில்லை. இதனை நம் பாபு சியாம்சுந்தர் தாஸ் மக்களுக்கு எளிதாகக் கிடைக்குமாறு செய்திருந்தார். 'மேகதூதம்' நூலின் மொழிபெயர்ப்பு நூல்கள் பல வெளிவந்திருந்தும்கூட ராஜா லட்சுமணசிங் அவர்களின் மொழிபெயர்ப்புக்குப் பல நிலைகளில் அவற்றில் ஈடுகொடுக்க முடியவில்லையென்பதை பாபு சியாம்சுந்தர் தாஸ் அவர்களும் நன்கு அறிந்திருந்தார். லல்லூ ஜி மற்றும் பாரதேந்து அவர்களுக்குப் பிறகு இந்திமொழி உரைநடை இலக்கியத்தினை நன்முறையில் போற்றி வளர்த்த பெருமையும் இவரைச் சார்ந்திருந்ததென்ற எண்ணமும் இவருக்கு இருந்தது. 'மேகதூதம்' மொழிபெயர்ப்பு நூலில் இடம்பெற்ற கவிதைகளோடு மூலநூலின் சுலோகமும் கொடுக்கப்பட்டிருந்தது. ஒருபக்கத்தில் சுலோகம் கொடுக்கப்பட்டு அதற்கு நேராக உள்ள மற்றொரு பக்கத்தில் இந்திமொழியில் மொழிபெயர்க்கப்பட்டிருந்த கவிதைகள் கொடுக்கப்பட்டிருந்தன. சுலோகத்தின் உரைநடை வடிவம், கடின சொற்களுக்கு உரிய பொருள்களும் அந்தந்தப் பக்கத்தின் அடியிலேயே அடிக்குறிப்பாகக் கொடுக்கப்பட்டிருந்தன. இந்தப் பதிப்பில் தனிமையில் வாடித் துன்புற்றிருந்த விரகிணி யக்ஷபத்தினியின் ஓவியம்கூட வண்ணங்களில் கலைநுட்பத்தோடு ஆர்ட் பேப்பரில் அச்சிட்டு இடம்பெறச் செய்திருந்தார். பாபு சியாம்சுந்தர் தாஸ் அவர்களுக்கு எவையெவை அழகாகவும்

சிறப்பாகவும் தென்படுகிறதோ அவற்றை அப்படியே வெளியிட்டு வந்தார். இதற்குச் சான்றாகத் திகழ்வது ராஜா லட்சுமணசிங் அவர்களின் நூலே ஆகும். ராஜா லட்சுமணசிங் அவர்களின் உரைநடைச் சிறப்பினை 'சாகுந்தலம்' நாடகத்திலிருந்து சான்றாக ஒன்றினை இவ்வாறு சுட்டிக்காட்டியுள்ளார்:

> "அனுசுயா (இரகசியக்குரலில் பிரியம்வதாவிடம்), தோழியே! நானுங்கூட இதுபற்றி சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். இப்பொழுது இதன் தொடர்பாகச் சிலவற்றை நான் கேட்கலாமா? (உரக்க) மகாத்மா அவர்களே!தங்கள் இனிய வாக்கின் மீது நம்பிக்கை வைத்து நான் இதனைக் கேட்க விரும்புகிறேன். நீங்கள் எந்த அரச குலத்தை அலங்கரிப்பவர்? எந்த நாட்டு மக்களைப் பிரிவுத் துன்பத்தில் ஆழ்த்தி விட்டு இங்கே எழுந்தருளியுள்ளீர்? சிரமம் நிறைந்த காட்டிற்கு வந்து உங்கள் மென்னுடலை வருத்திக் கொள்ளும் காரணம் யாதோ?"

## ராணி கேதகி கி கஹானி மற்றும் நாசிகேதோபாக்யான்

ராணி கேதகி கி கஹானி (இராணி கேதகியின் கதை) என்ற நூலினைப் பதிப்பித்து பாபு சியாம் சுந்தர்தாஸ் அவர்கள் நாகரி பிரச்சாரிணி சபையின் மூலம் 1925இல் வெளியிடச் செய்தார். இந்நூல் 34 பக்கங்களை மட்டும் கொண்ட ஒரு சின்னஞ்சிறிய நூலாகும். இதில் 16 பக்கங்களில் பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்களின் முன்னுரை இடம்பெற்றிருந்தது. இக்கதை இந்திமொழி உரைநடை இலக்கிய வரலாற்றில் சிறப்பாகக் குறிப்பிடப்படுகிறது. மொழித்துறையில் இந்திமொழி உரைநடை வளர்ச்சிக்குரிய தொடக்கத்தை இது சிறப்பாக உருவாக்கித் தந்ததால், இக்கதையை எழுதிய ஆசிரியர் இன்ஷா அல்லா கான் அவர்களின் பெயருக்குக் பெருமை ஏற்பட்டது. இன்ஷா அல்லா கான், சதல்மிஸ்ரா மற்றும் லல்லூஜிலால் ஆகியோர் இந்தி உரைநடை இலக்கியத்தின் ஆரம்பகர்த்தாக்கள் எனக் கருதுகின்றனர். மூவரும் ஒரே காலத்தவர்கள். இன்ஷா அல்லா கான் 1818ஆம் ஆண்டில் இறந்துவிட்டார். ஆனால், லல்லூஜிலால் மற்றும் சதன் மிஸ்ரா அவர்களும் அவருடைய சாவிற்குப் பல ஆண்டுகள் கழித்தே ஃபோர்டு வில்லியம் கல்லூரியில் தங்கள் ஓய்வூதியத்தைப் பெற்றுவந்தனர்.

ஃபோர்டு வில்லியம் கல்லூரிக்கு வெளியில் ஆர்வத்தோடு இந்தி உரைநடை இலக்கியத்தைத் தோற்றுவிக்கும் பணியில் அதிகம் ஆர்வம் காட்டியவர்களுள் இன்ஷா அல்லா கான் அவர்களே சிறந்தவராவர். அவர் தன் பங்காகத்தான், 'உதயபானு சரிதம்' அல்லது " 'இராணி கேதகியின்கதை' (ராணி கேதகி கி கஹானி) எழுதி வெளியிட்டார். ஹக்கீம் மாஷா அல்லா அவர்களின் நன்மகனாக சையத் இன்ஷா 1765 ஆம்ஆண்டு முர்ஷிதாபாத்தில் பிறந்தார். அவருடைய தந்தை இவருடைய பிறப்பிற்கு முன்புதான் தில்லியிலிருந்து அங்குச் சென்றிருந்தார், அவர் கல்வியாளர்களின் குடும்பத்தில் பிறந்திருந்ததினால்நல்ல கல்வி கற்க முடிந்தது. தந்தையுடன் சிறுவயதிலேயே முர்ஷி தாபாத்திலிருந்து ஃபைஜாபாத் வந்துவிட்டார். ஷா ஆலம் அவர்களின் சபையில் கவிஞர் என்ற முறையில் தக்க மரியாதை இவருக்கும் கிடைத்துவந்தது. ஒருபக்கம் முகம்மதிய அரசர்களின் பொருளாதார நிலை, அரசியல்நிலை சீர்கெட்டிருந்த நிலையில் கிழக்கிந்தியக் கம்பெனியாரின் பெருமை வளர்ந்துகொண்டிருந்தது. இதனால், ஷா ஆலம் அரசரின் கண்கள் பிடுங்கப்பட்டிருந்தன. மற்றொரு புறத்தில்தன் சுபாவத்தை விடமுடியாத இன்ஷா அல்லா சமகாலக் கவிஞர்களைக் கவியரங்குகளில் தாக்குவதில் பின்வாங்கியதில்லை. அவர்களுடன் கடுமையான மனஸ்தாபம் ஏற்பட்டுவிட்டது. அதனால், அவர்களுக்கிடையே மனவேறுபாடு படிப்படியாக வளரத்தொடங்கியது. லக்னோ கவியரங்கம் புதிய உத்வேகத்துடன் வளர்ந்துவரும் சிறந்த மையமாகத் திகழத் தொடங்கியது. அங்கிருந்து இவர் அவத் பிரதேசத்தின் தலைநகருக்குச் சென்றார். இங்கே ஷா ஆலம் அவர்களின் மகன் சுலைமான் ஷிகோக் அவர்களின் ஆட்சி நன்கு நடைபெற்று வந்தது. இங்கு வாழ்ந்துவந்த புகழ்பெற்ற ஜுர்அத், முஸ்ஹபி போன்ற கவிஞர்களுக்கும் அவர்களின் சீடர்களுக்கும் இடையே மோதல் ஏற்பட்டது. இன்ஷா அல்லா கான் சிறந்த சிந்தனை யாளராக மட்டுமன்று சிறந்த கல்விமானாகவும் திகழ்ந்தார். லக்னோவிற்குரிய ஆடம்பர மற்றும் உல்லாச வாழ்வில் மூழ்கி விட்டதன் காரணமாக அவருடைய கவிதைகளும் அதற்கேற்ற மாற்றம் பெறத்தொடங்கின. அதனால் உருவான பெரும் புகழின் காரணமாக நவாப் சாதாத் அலி கான் அவர்களின் சபையில் இவர் கவிரத்தினமாகத் திகழும் பெரும் பேற்றைப் பெற முடிந்தது. ஆரம்பத்தில் அவருக்கு அங்கு நல்ல மதிப்பு கிடைத்தபோதிலும், சிறுகச்சிறுக அரசர்க்கும் அவருக்கும் இடையே இடைவெளி அதிகம் ஏற்படலாயிற்று. இதனிடையே அவருடைய மகன் இளமைப் பருவம் அடைந்து வாலிப வயதில் இறந்துவிட்டான்.

அதுகண்டு அவர் மனம் பெரிதும் பாதிக்கத்தொடங்கியது. சிரிப்பு கேலி-கிண்டல் மற்றும் பொழுதுபோக்காக ஒருவிதப் போதை உணர்வில் காலத்தைக் கடந்துவந்த இந்த இலக்கியவாதியின் இறுதிக்காலம் துன்பமும் தொல்லையும் நிறைந்தவாறு கழிந்துபோயிற்று.

அவர் பாரசீகம், உருது மற்றும் இந்திமொழியில் பெரும்புலவராகவும், படைப்பாளராகவும், சிறந்த கவிஞராகவும் திகழ்ந்திருந்தார். அவருடைய படைப்புகளின் பெயர் - 'தரி ஆயே லதாஃபத்' (பாரசீக மொழியில் இயற்றப்பட்டது), 'சில்கே கௌர்' (உருது மொழியில் இயற்றப்பட்டகதை), 'லதாய் ஃபூஸ்த் ஆதத்' (துணுக்குகளின் தொகுப்பு), 'குல்யாதே இன்ஷா' (இன்ஷா அல்லா கான் அவர்களின் உருது - பாரசீக மொழிகளில் இயற்றிய எல்லாக் கவிதைகளின் தொகுப்பு நூல்), இந்தி உரைநடையில் 'உதயபானு - சரிதம் அல்லது ராணி கேதகி கி கஹானி' என்ற நூலைப் படைத்திருந்தார்.

'தரி ஆயே லதாஃபத்' இன்ஷா அல்லா கான் அவர்களின் புலமைக்கு ஒரு சான்றாகத் திகழ்கிறது. உருது மொழிக்குரிய இலக்கணம், மொழிநூல் மற்றும் காவிய சாத்திரம் தொடர்பான செய்திகள் இடம்பெற்ற பாரசீக மொழியில் எழுதப்பெற்ற மிகச்சிறந்த நூலாகும். இதன் உருது மொழிபெயர்ப்பு நூலும்கூட உள்ளது. 'சில்கே கௌஹர்' என்ற உரைநடைக் கதை நூலில் மேலே புள்ளி வைத்து எழுதவேண்டிய உருது - பாரசீக மொழிகளின் சொற்கள் பயன்படுத்தவில்லை. கவிதையில் கூட இவர் இத்தகைய முயற்சியை மேற்கொணடுள்ளார். சதாத் அலிகான் அவர்களின் சபையில் அவ்வப்பொழுது சொல்லிவந்த பொழுதுபோக்கான நகைச்சுவை நிறைந்த துணுக்குகள் தொகுக்கப்பெற்ற நூல்தான் 'லதாய் ஃபூஸ்த் ஆதத்' என்பதாகும். 'குல்யாதே இன்ஷா' என்ற நூலில்அவருடைய பாரசீக-உருது கவிதைகள் இடம்பெற்றுள்ளன. விஷமத்தனமான விநோதம் நிறைந்த துணுக்குகளை இயல்பாகவும் நுணுக்கமாகவும் வெளிப்படுத்தும் ஆற்றலை இயல்பாகவே பெற்றிருந்தார். லக்னோ அரசவையில் அவர் தங்குதடையின்றி கடல் மடை திறந்தாற்போல் கவிதைகளை வெளிப்படுத்துவதில் வல்லவராகத் திகழ்ந்தார். இத்துடன் அருவருப்பாகவும் இரு பொருள்பட எல்லை கடந்து பாடுவதில் வல்லவராகவும் திகழ்ந்தார். போட்டி மனப்பான்மை யோடு விரோதியாளர்க்கு முன்பு கவிதை படைக்க நேரிடும்போது கவிதை வாயிலாகவே வெளிப்படையாகவே தாக்கும் பழக்கத்தை மேற்கொண்டிருந்தார். இத்தகைய ஒருசில குறைபாடுகள்

இருப்பினுங்கூட உருது மற்றும் இந்திமொழிகளில் கவிதை படைப்பதில் பெருஞ்சக்தி கொண்டவராகத் திகழ்ந்தார் எனலாம்.

அவர் பாரசீக மற்றும் சமஸ்கிருத மொழிகளிடமிருந்து சற்று விலகி பாமர மக்களின் இடையே பிரபலமான எளிய பேச்சு மொழியில்தான் இந்தி இலக்கியம் படைக்கும் மரபு எதிர்காலத்தில் உருவாக வேண்டுமென்று எண்ணி, அதற்குத் தாமே வழிகாட்டியாக அமைய வேண்டுமென்ற நோக்கில் அத்தகைய மொழியைப் பயன்படுத்தியே எல்லா நூல்களையும் படைத்தார். ஆனால், அது எந்த அளவிற்கு வெற்றிபெற்றது எனக் கேள்வி கேட்க நேரிட்டால், அதற்குப் பதிலாக, 'அடுத்து வந்த வழித்தோன்றல்கள் இவருடைய வழியை விரும்பி ஏற்கவில்லை' என்றே கூறவேண்டியிருக்கிறது. ஏனென்றால், இவர்தம் இந்த மொழிநடையில் எளிமையோ, தனிச்சிறப்போ, நடையோட்டமோ அமையவில்லை என்றே கூறவேண்டியிருக்கிறது. அவருடைய உரைநடையின் ஒரு பகுதி இங்கே சான்றாகத் தரப்படுகிறது. இதனை உற்று நோக்குவார்க்கு இவ்வுண்மை புலனாகும்.

"ஒருநாள் உட்கார்ந்திருந்தபோது இந்தக் கருத்து என் கவனத்தில் நிலைபெறத் தொடங்கிற்று. எந்தக் கதையும் ஹிந்தி மொழியிலிருந்து விடுபட்டு யாதேனும் பேச்சு மொழியோடு வெளிப்பட்டால் என் மனம் மலர் மொட்டுபோல மலரக்கூடும். வெளியே பேசப்படும் பேச்சுமொழியோ நாட்டுப்புற மொழியோ இதில் இடம்பெறக் கூடாது. நாம் சந்திக்கும் மக்களிடையே ஒருசில படித்த மேதைகள், பழைமைவாதிகள், பத்தாம்பசலிகள் - இதனைக் கேள்விப்பட்டால், இது எடுபடாது என்றே பிதற்றுவர். ஆனால் ஹிந்துத்வம் கிடைக்கும்; மொழித்து வழும் தோன்றா. அவ்வளவுதான், ஆஹா! இப்படிப் பட்ட நல்லெண்ணம் கொண்டோர் - சிறப்பாக - தமக்குள் பேச-கீச முயலும்போது அப்படியே உள்ளவாறு பேசுவர். எந்த வெறு வாயும் மெல்ல இடம் ஏற்படாது. இது ஏற்படவே வேண்டாமே என்ன!"

இன்ஷா அல்லா கான் இத்தகைய மொழிநடையை விரும்புவராய் இருந்தார். அதில் ஹிந்த்வி மொழியைத் தவிர பிற பேச்சுமொழிகூட இடம்பெற்றதில்லை. வெளிவட்டார மொழியோ, நாட்டுப்புற மொழியோ, பிற கிளைமொழியோ எதுவும் வந்துவிடக்கூடாது. அந்தக் காலத்தில் இத்தகையைப்

பணியைச் செய்யக்கூடியவர் ஒருவரும் இல்லையென்றே கூறலாம். ஏனென்றால் உரைநடை மொழியில் தம்முடைய தனித்தன்மையை வெளியிடும் ஆற்றல் எவருக்கும் இருந்ததில்லை. இத்தகைய பணியைச் செய்வதும் பெருங்கடினமாக இருந்தது. ஆயினுங்கூட அவர்தம் நோக்கத்தைத் தம்முடைய 'ராணி கேதகி கி கஹானி' என்ற நூலில் வெளிப்படுத்திக் காட்டியிருந்தார். பாபு சியாம்சுந்தர்தாஸ் இன்ஷா அல்லா கான் அவர்களுடைய வாழ்க்கை வரலாற்றுடன், அவருடைய இலக்கியம் தொடர்பான தத்துவங்களையும், கொள்கைகளையும்கூட தம் நோக்கில் ஆய்ந்து வெளியிட்டிருந்தார். அக்கருத்து அப்பொழுது இந்திமொழிக்குப் பெரும் நன்மையைத் தரக்கூடியதாக இருந்தது.

இதேபோல், சதல் மிஸ்ரா எழுதிய 'சந்திராவளி கதை அல்லது நாசிகேதோபாக்கியானம்' என்ற நூலினையும் பதிப்பாசிரியராக இருந்து இவரே வெளியிட்டார்.

ஃபோர்ட் வில்லியம் கல்லூரியில் லல்லூஜிலால் அவர்கள் செய்ததுபோல மொழிப்பெரும்புலவராய்த் திகழ்ந்த சதல் மிஸ்ரா அவர்களும்கூட இந்திமொழியின் உரைநடை இலக்கியம் வளரப் பாடுபட்டார் எனலாம். இவர் நடைமுறையில் இருந்த கடீபோலி நடையைத் தம் உரைநடையில் இடம்பெறச் செய்தார். ஆனாலும் கற்றோரிடையே லல்லூஜிலால் மொழிநடையே விரும்பி ஏற்கப்பட்டு வந்தது எனலாம்.

பண்டிட் சதல் மிஸ்ரா அவர்கள் 'நாசிகேதோபாக்யான்' மற்றும் 'இராமசரிதம்' என்ற இருநூல்களை எழுதினார். இதில் 'நாசிகேதோபாக்கியானம்' அதிகம் பிரபலம் அடைந்திருந்தது. இரண்டுமே மொழிபெயர்ப்பு நூல்கள்தான். உபாக்கியான நூலில் முற்பகுதியில் நாசிகேதன் பிறப்பு பற்றிய செய்திகளும் இரண்டாவது பகுதியில் எமலோகத்தில் நுழைதல் பற்றிய விளக்கமும் இடம் பெற்றிருந்தது. 'இராம சரிதம்' என்ற நூல் அத்யாத்ம இராமாயணத்தின் மொழிபெயர்ப்பே ஆகும். அத்யாத்ம இராமாயணத்தின் முன்னுரை இங்கே கொடுக்கப்பட்டிருக்கிறது. இதில் அவருடைய நடையின் தன்மை புலப்படுகிறது.

> "இந்தப் புத்தகத்தை மொழிபெயர்க்க வேண்டியதற்குரிய காரணம் ஒன்று உண்டு. சதல் மிஸ்ரா பண்டிதராகிய நான், எனக்குப் பள்ளியில் சமஸ்கிருதப் புத்தகங்களைச் சொல்லித் தர இருந்த பல பெரியவர்களுள் ஒருவரான சகல குணம் அறிவும் கொண்ட மிஸ்டர் ஜான் கில் கிறிஸ்து அவர்கள் ஒருநாள், 'இந்து அத்யாத்ம இராமாய

ணத்தை' மொழிபெயர்க்க வேண்டும், அதுவும் பாரசீக மற்றும் அரபு மொழிகளின் கலப்படம் இன்றி கடீபோலி நடையில் இருக்க வேண்டும்' என்றார். அதன்படி 1862இல் மாண்புமிகு கவர்னர் பால்ஜ்லி லார்ட் மார்டங் அவர்கள் காலத்தில் இந்த இராமசரிதம் இயற்றப்பட்டது",

'நாசிகேதோபாக்கியான்' நூலின் உரைநடை இவ்வாறு அமைந்துள்ளது:

'இவ்வாறு நாசிகேதன் முனி எமபுரியையும் நரகத்தையும் வர்ணித்து பிறகு எப்படி-எப்படிக் கர்மம் செய்கிறார்களோ அப்படி அனுபவித்தேயாக வேண்டும் என்றார். இதைக்கேட்ட எல்லா முனிவர்களுக்கும் மேலும் சொல்லத் தொடங்கினார். பசு, பிராமணன், தாய், தந்தை, நண்பன், குழந்தை, பெண், முதியோர், குரு ஆகியோரைக் கொன்றவர்களும், பொய்ச்சாட்சி சொன்னவர்களும், பொய்யான காரியங்களை இரவு பகலாகச் செய்பவர்களும், தன் மனைவியை ஒதுக்கிவிட்டு மற்றொரு பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டவர்களும், பெண்களின் துயரைக் கண்டு ஆனந்தம் கொள்பவர்களும், தம் மதத்திற்கு மாறான இழிவான செயல்களைச் செய்பவர்களும், எல்லோரையும் பகைத்து வாழ்பவர்களும் ஆகிய இத்தகைய பாவிகள், அதிகம் அச்சுறுத்தும் தென்திசை வாசல் வழியாக நரகம் சென்று அடைவர்'.

கீழ்த்திசை பேச்சுமொழியும் விரஜபாஷையும் தோற்றுவித்த பெருந்தாக்கத்தால் இவர் தம்மை அதிலிருந்து விடுவித்துக்கொள்ள முடியவில்லை. அத்தகைய தாக்கத்தை இவருடைய உரைநடை இலக்கியத்தில் ஒரு குறையாகவே காணமுடிகிறது. அதில் மட்டுமன்று, சில இலக்கண அமைப்பில், சில சொல்லமைப்பில், சில வாக்கிய அமைப்பில்கூட பிழைபட அமைந்திருப்பதையும் அவருடைய உரைநடை நூல்களில் காணமுடிகிறது. இருப்பினுங்கூட, அவருடைய உரைநடையின் தாக்கம் பிறரைவிட அதிகமாகவே அடுத்துவந்த உரைநடைகளில் காணமுடிகிறது. இவர் 1823ஆம் ஆண்டிலிருந்து ஃபோர்ட் வில்லியம் கல்லூரியில் ஓய்வூதியம் பெற்றுவந்தார்.

பிறகு இந்த தொடக்ககால உரைநடைகள் நன்கு செம்மைப்படுத்தப்பட்டு 'இந்தி உரைநடையின் தொடக்கால உரைநடை ஆசிரியர்கள்' என்ற தலைப்பில் வெளியிடப்பட்டன. இந்தி இலக்கிய உலகில் இவர்களுடைய தொண்டு தக்க இடத்தைப்பெற்று சிறப்புற்றன. இந்த மூன்று தொடக்கால உரைநடை இலக்கியகர்த்தாக்கள் படைத்த நூல்களை டாக்டர் சியாம்சுந்தர்தாஸ் தம் வாழ்நாள் வரை உரைநடை இலக்கியத்தின் அடிப்படை நூல்கள் எனப் போற்றிப் பாராட்டி வந்துள்ளார்.

**பிருதிவிராஜ் ராசோ** : சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் இந்திமொழிக்குரிய பழைய சிறப்பு வாய்ந்த பாராட்டிற்குரிய புலவர்களின் படைப்புகளையெல்லாம் பதிப்பித்து வெளியிட வேண்டுமென முடிவு செய்தார். இதனடிப்படையில் அவர் பல பெரும்புலவர்களின் காவிய நூல்களின் தொகுப்பினைச் செம்மைப்படுத்திப் பதிப்பித்தார். அந்தப் பெரும்புலவர்களை இந்திமொழி பேசும் சமூகத்தினரிடையே தக்கவாறு அறிமுகப் படுத்தி, அவர்தம் மாண்பினை உலகறியச் செய்தார். அதனால், அத்தகைய பெரும்புலவர்களின் சிறந்த காப்பியங்கள் மக்களால் ஏற்கப்பட்டு பாராட்டும் நிலை உருவாகத் தொடங்கிற்று. இல்லையேல், இந்திமொழி மிகக்குறைந்த அளவில் ஒருசில புலவர்கட்குரிய மொழியாக மட்டும் கருத இடம் ஏற்பட்டிருக்கக் கூடும். இப்பணியில் இவர் முதன்முதலாக தொடக்க முயற்சியாக மேற்கொண்டு வெளியிட்ட காப்பியமே 'பிருதிவிராஜ் ராசோ' என்பதாகும். இந்தக் காப்பியம் இந்திமொழிக்குரிய மிகப்பழைமை வாய்ந்த நூல்களுள் ஒன்றாகவும் சிறப்பாகவும் கருதப்பட்டு வந்தது. ஆனால், அன்றுவரை இந்தி இலக்கிய உலகில் அஃது தக்கவாறு செம்மைப்படுத்தப்பட்டு யாரும் பதிப்பிக்கவில்லை. கையெழுத்துப் பிரதிகூட மிக எளிதாக கிடைக்கவில்லை. அன்று இதனை பதிப்பிக்கும் பணிகூட மிகவும் பொருட்செலவு தேவைப்படும் பணியாகத்தான் இருந்தது. இந்தி மொழியின் தொடக்ககாலப் பெரும்புலவரின் நூல்கூட கிடைக்காமல் இருந்தது. இஃது இந்திமொழியாளர்கட்குப் பெரும் நாணந்தரத் தக்கச் செய்தியாகவே இருந்தது. அவர் 'பிருதிவிராஜ் ராசோ' காப்பியத்தின்மீது மட்டுமன்று, இந்தியிலுள்ள எல்லா ராசோ இலக்கியங்களின் மீதும் தம் கவனத்தைத் திருப்பத் தொடங்கினார்.

பெரும்பாலும் எல்லாப் பெரும்புலவர்களும் இந்தி இலக்கியத்தின் தொடக்க காலமாக கி.பி. ஆயிரத்திலிருந்து 1500 வரை கருதி வந்தனர். மொழி முழுமையாக நல்வடிவம் பெற்று நடைமுறைக்கு வருவதற்கு முன்பிலிருந்தே அதன் தொடர்பான

பல ஆக்கப்பூர்வமான பணிகள் நடைபெற்றுக் கொண்டு தானிருக்கும். ஒரு குறிப்பிட்ட பழைய இலக்கிய மொழியிலிருந்து புதிய பேச்சுமொழியில் இலக்கிய வடிவம் தோன்ற கொஞ்சம் அதிகமாகவே காலம் பிடிக்கும் என்பதை யாவரும் அறிவர். தூய அபப்பிரம்சமொழியிலிருந்து பாமர மொழியின் பக்கம் இந்திமொழியின் ஆர்வம் இந்தக் காலத்தில்தான் அதிகம் உருவாயிற்று எனலாம். உண்மையாகவே இந்த மொழி அபப்பிரம்ச மொழியிலிருந்து சற்று வேறுபட்ட நிலையில் பிறப்பெடுத்துள்ளது. அப்பொழுது படைக்கப்பட்ட இலக்கியங்கள் பழைமையையும், மரபையும் முழுமையாக ஏற்றுப் படைக்கப்பட்டு வந்திருந்தபோதிலும்கூட தத்பவ சொற்கள் மிகுதியாகப் பயன்படுத்தும் நிலை அதிகரித்துக்கொண்டு வந்திருக்கிறது.

அந்தக்காலத்திய இலக்கிய வரலாற்றைப் படைக்கத் தேவைப்படும் மூலாதாரங்களுக்குரிய நூல்கள் கிடைப்பது அரிதாக இருந்ததால் பல தொல்லைகள் தோன்றியவண்ணம் இருந்தன. இப்பொழுது இந்தி இலக்கியங்கள் படைக்கப்பட்டுவந்த வட-மேற்கு இந்தியப் பகுதிகளில் தொடர்ந்து முகம்மதியர்களின் படையெடுப்புகள்தான் நடந்துகொண்டிருந்தன. இத்தகைய சூழ்நிலையில் அமைதியோடு சிறப்புவாய்ந்த இலக்கியங்களைப் படைப்பதும் பாதுகாப்பதும் தடையின்றி நிகழ்ந்திருக்கும் என்பது எளிதாகக் கருதக்கூடிய ஒன்று அன்று. இதே காரணத்தால்தான் ராஜபுதானத்தில் முயன்று தேடிப்பெற்ற ஒருசில இலக்கிய மூலாதாரங்களைப் பற்றி டாக்டர் சியாம்சுந்தர்தாஸ் இவ்வாறு எடுத்துக் கூறியிருக்கிறார்:

> 'ராஜபுதானத்தில் பழைய இந்தி இலக்கிய நூல்களைத் தேடிக் கண்டறியும் பணியை முடுக்கி விடுவோமானால் நமக்குத் தேவையான பயனுள்ள நல்ல இலக்கிய மூலாதாரங்கள் கிடைக்கக்கூடும். கடந்தகால அரசியல் சமூகச் சூழ்நிலையின் காரணமாகக் கலைத்துறையில் சிறப்பான வளர்ச்சி ஏற்படாமலும், இலக்கியம் படைக்கப்படாமலும் போயிருக்கக் கூடுமன்றோ? இதுபற்றியும் அறிந்துகொள்ள நமக்குச் சந்தர்ப்பம் கிடைக்கலாமன்றோ?'

இத்துடன் அவர் இக்கருத்தையும் கூறியுள்ளார்:

> 'அக்காலத்தில் பிற கலைகளுக்கு இருந்த நிலையைக் கண்டு இலக்கியக் கலையும் மேம்பட்டிருக்கக் கூடுமோ, தேவையான நூல்கள் படைக்கப்

பட்டிருக்கக் கூடுமோ என்று கூற முடியாதபடி உள்ளது'.

சியாம்சுந்தர் தாஸ் இதுபற்றி சிந்திக்கத் தொடங்கிய காலம்வரை 'ராசோ' என்ற பெயரில் ஒருசில நூல்கள் கிடைத்திருந்தன. ஆயினும் அவை முழுமையாகவும் செம்மையாகவும் கிடைக்கவில்லை. அவற்றை ஆராய்ந்தார்க்கு அந்நூற்களின்மீது நம்பிக்கையும் ஏற்படாமல் போய்விட்டது. அந்த அளவிற்குப் பிழைகள் மலிந்திருந்தன எனலாம். ஒருசில பெரும்அறிஞர்கள் தங்கள் அனுபவ அறிவைத் துணைக்கொண்டு அன்று வரைக் கிடைத்திருந்த ஆதாரங்களின் அடிப்படையில் தக்கப் பிழைதிருத்தம் செய்து செப்பனிட்டு முழு வடிவில் வெளியிட முயன்றும்கூட அந்நூல்கள் முழுமையாக ஆதாரப்பூர்வமாக அமையவில்லை. கிடைத்துச் செம்மைப்படுத்தி வெளியிட்ட நூல்களில் மிகுதியாகத் தொடர்ந்து நூறாண்டு காலமாகச் சாரணர்கள் பரம்பரை பரம்பரையாகப் பாடிவந்த புகழ்ப் பாமாலைகள் அதிகமாக இடைச்செருகல்களாக இடம் பெற்றிருந்தது கண்டறியப்பட்டிருந்தன. அதனால் ஒரே நூல் பலவிதமான அம்சங்களோடும் பலவிதமான மொழிநடைகளோடும், பல நூல்களாகக் காட்சியளித்து வந்தன.

அக்காலத்தில் வாழ்ந்த புலவர்பெருமக்கட்கு சமூகத்தில் எந்தவிதமான கௌரவமோ, மரியாதையோ இருந்ததில்லை. அங்குமிங்குமாக அவர்களின் படைப்புக்களில் தேசிய உணர்வும், நாட்டுப்பற்றும் தென்பட்டாலுங்கூட, அதனால் சிறப்புநிலை அடைந்திருந்தாலுங்கூட, மக்களிடையே, இனத்தாரிடையே, நாட்டினிடையே ஏற்றத்தாழ்வு உயர்வுகளையே பரப்புகின்ற இழிந்த செயல்களையே அவர்கள் செய்து வந்தார்கள் எனலாம். ஒருசில காப்பியங்களில் அழகிய உத்திகள், உள்ளத்தை ஈர்க்கும் நிகழ்ச்சிகள், நல்ல கவிநயம் மற்றும் சிறந்த பண்புநலன்கள் போன்றவை இடம்பெற்றிருந்தன. ஆனால், அவையனைத்தும் ஓரளவே. ஆனால், போர்க்காட்சிகளை அளவுக்கு மீறிய நிலையில் நன்கு இடம்பெறச்செய்வதில் பெரும் வெற்றி கண்டிருந்தனர். அவர்களுடைய படைப்பில் ஒருசில இடங்களில் அருமையான சொற்கள் நயம்பட இடம்பெற்றிருப்பதைக் காணலாம். போர்க்காட்சிகளை வர்ணிக்கும்பொழுது அதன் தொடர்பான புத்தம்புதிய சொற்கள் நயம்பட இடம்பெறச் செய்துள்ளனர். காவியத்தைப் படைக்கும் நிலையில் அனைவரும் அபப்பிரம்சம் மொழியில் போற்றிவந்த மரபுகளையே முழுமையாகப் போற்றிவந்தனர். அக்காலத்திய இலக்கியங்கள் பெரும்பாலும்

ராஜஸ்தானத்துப் பகுதிகளில்தான் அதிகமாகப் படைக்கப்பட்டு பரம்பரை பரம்பரையாகப் பாமரமக்கள் சிலவற்றையும், அரசாங்கம் சிலவற்றையும் போற்றிப் பாதுகாத்துவந்தன. அந்தக் காப்பியங்கள் அனைத்தும் மன்னர்களின் வீரத்தினைப் புகழ்ந்து பாடிய செய்திகளையே பெரும்பாலும் தன்னகத்தே பெற்றிருந்தன எனலாம். யாதேனும் ஒரு நாட்டின் அரசிளங்குமரியின் அழகில் மயங்கி ஒரு அரசன் அவளை அடைவதற்காகப் பெரும்போர் தொடுக்க முயன்று, தம் வீரத்தைப் போர்க்களத்தில் நிலைநாட்டித் தான் நினைத்ததை முடித்துக்காட்டுவான். போரின் வர்ணனை களில் அக்காலத்திய சாரணக் கவிஞர்கள் பெருஞ்சாதனை புரிந்திருந்தனர். அதற்கு, அவர்கள் அரசருடனேயே போர்க் களத்தில் இருந்து போர்க்காட்சிகளை நேரில் கண்டறிந்ததே காரணமாகும். சில நேரங்களில் அவர்களும் தங்கள் கைகளில் வாளேந்தி தம்மை ஆதரித்துவந்த அரசருக்காகப் போரிடவும் செய்தனர்.

அக்காலத்திய இலக்கியங்களில் பிரபந்த காவியங்களும் மற்றும் உதிரிப்பாடல்களாலான காவியங்களும் எழுதப்பட்டன. இவை 'ராசோ' என்ற பெயரில் அழைக்கப்பட்டு வந்தன. இந்த 'ராசோ' சொல் தொடர்பான கருத்துக்களைச் சிலர் இரகசியம் எனக்கூறி வருகின்றனர். பேராசிரியர் இராமச்சந்திர சுக்லா அவர்கள் இச்சொல் 'சாயண்' என்ற சொல்லின் மாற்று வடிவம் என்றே கருதுகிறார். ஏனென்றால், பீசல்தேவ் ராசோ என்ற காப்பியத்தில் பல இடங்களில் 'காவியம்' என்ற சொல்லிற்குப் பதிலாக அடிக்கடி 'இராசாயண்' என்ற சொல் பயன்பட்டிருக்கிறது.

'பிருதிவிராஜ் ராசோ' மிகப்பெரிய ஒரு பெருங்காவியமாகும். சிலர் இதை இந்திமொழியின் முதல் மகாகாவியமாகக் கருதுகின்றனர். இஃது 2500 பக்கங்களைக் கொண்டது. 96 சமயம் அதாவது சருக்கங்களைக் கொண்டது. இந்திமொழியின் யாப்பிலக்கணத்தில் கூறப்படும் 'சப்பயி' நெறிமுறையைப் போற்றி கவித்த, தூஹா, தோமர், திரோடக், காஹா மற்றும் ஆர்யா சந்தங்களில் அதாவது வடிவங்களில் இயற்றப்பட்ட செய்யுட்கள் இடம்பெற்றிருக்கின்றன. இந்த நூலை மகாகாவியம் என்று சொல்வதைக்காட்டிலும் பெரும்பேரிலக்கியம் என்று பெயரிட்டு அழைப்பதே பொருத்தமாகும். ஏனென்றால், இதில் மகா காவியத்திற்குரிய இலக்கணமோ, கருத்துகளோ இல்லை மற்றும் இதில் ஒரு குறிப்பிட்ட கதைக் கருவும் நெறிமுறையோடு இடம்பெற்று வளர்ச்சிபெறவில்லை. இந்த நூல் தில்லியை ஆண்டுவந்த இறுதி இந்து சாம்ராஜ்யத்தின் மன்னராகிய

பிருதிவிராஜனின் அரசவைக்கவிஞர் சந்த்பர்தாயி என்பவரால் இயற்றப்பட்டது எனச் சொல்லப்படுகிறது. கிடைத்துள்ள பிரதிகளிலிருந்து இந்தக் காவியத்தின் இறுதிப்பகுதியை இக்கவிஞரின் மகன் ஜல்ஹண் என்பவர் இயற்றி நூல் முழுமைபெறுமாறு செய்தார் என்று கருத்தும் தெரியவருகிறது.

'நூலினை ஜல்ஹண் கையில் ஒப்படைத்து
மாமன்னர் பணிநிமித்தம் யானும்
கஜினி மாநகர்க்குச் சென்றேனே',
"இரகு நாத சரிதம்
அனுமன் இயற்ற, போஜன்
எஞ்சிய இறுதிப் பகுதியை
இயற்றி நிறைவு செய்தான்.
பிருதிவி ராஜ்ராசோ காவியம்
சந்த்பர் தாயி இயற்ற,
எஞ்சிய இறுதிப் பகுதியை
மகனே நிறைவு செய்தான்"

'பிருதிவிராஜ் ராசோ' தொடர்பாக ஆய்வு செய்த புகழ்பெற்ற பேராசிரியர்கள் பூலர், மாரிசன், கௌரிசங்கர், ஹீராசந்த் ஓஜா, முன்ஷி தேவி பிரசாத், பண்டிட் மோகன்லால் விஷ்ணுலால் பண்ட்யா, மகாமகோபாத்யாய ஹர்பிரசாத் சாஸ்திரி ஆகியோர்களுக்கிடையே இதன் தொடர்பான கருத்துவேறுபாடுகள் அதிகம் நிலவிவந்தன.

இதில் ஆபூவின் யாகக் குண்டத்தின் நான்கு க்ஷத்திரிய மரபினர்களின் தோற்றத்திலிருந்து தில்லியின் இறுதி இந்துப் பேரரசர் பிருதிவிராஜ் கைதுசெய்யப்படும் நிகழ்ச்சி வரை உள்ள கதைக்கரு இடம்பெற்றுள்ளது. சம்யுக்தை-பிருதிவிராஜ் தொடர்பான புகழ்பெற்ற கதையும்கூட இதில் இடம்பெற்றுள்ளது. இதில் சங்கேஜ், தைமூர் ஆகியோரின் படையெடுப்புகள் பற்றிய செய்திகள்கூட இடம்பெற்றுள்ளன. பிருதிவிராஜ் பேரரசரின் அரசவைக் கவிஞராகிய காஷ்மீர் கவி ஜயானக் அவர்கள் பிருதிவிராஜ் வெற்றியினை அடிப்படையாகக் கொண்டு படைத்த 'பிருதிவிராஜ் வெற்றி' என்ற நூலினையும், இந்தக் காவியத்தில் கூறப்பட்ட தேதிகளைக் கொண்டும், ஒருசில கல்வெட்டுகளைக் கொண்டும் இக்காவியத்தை ஆராய்ந்தோர் இந்நூல் ஏற்புடையதன்று என்றும், போலியானது என்றும், நம்பத்தகாத

ஒன்று என்றும் கூறிவருகின்றனர். பிருதிவிராஜ் வெற்றி என்ற நூலில் சந்த்பர்தாயி என்ற பெயரில் யாதொரு கவிஞரின் பெயரும் இடம்பெறவில்லை. ஒரு சுலோகத்தில் மட்டும் 'சந்திரராஜ்' என்ற ஒரு சொல் இடம்பெற்றிருக்கிறது. டாக்டர் கௌரிசங்கர் ஹீரா்சந்த் ஒஜா அவர்கள் அது காஷ்மீரின் சந்திரக் என்ற கவிஞரைக் குறிப்பது என்கிறார். இச்சூழலில் பேராசிரியர் இராமச்சந்திர சுக்லா அவர்கள் கீழ்க்கண்ட கருத்தை வெளியிட்டுள்ளார்:

> 'சந்த்பர்தாயி என்ற பெயரில் யாரேனும் ஒரு கவி இருந்திருக்கக் கூடுமேயானல் அவர் பிருதிவிராஜ் அரச சபையில் இருந்திருக்க மாட்டார். அப்படி இருந்திருக்க சந்தர்ப்பம் இருந்திருக்குமேயானால் அவர் கவி ஜயானக் காஷ்மீர் திரும்பிச் சென்றபிறகே இருந்திருக்கக்கூடும். இப்படிக்கூட நேர்ந்திருக்கக் கூடும் என நினைக்க இடமிருக்கிறது. பிருதிவிராஜ் மகன் கோவிந்தராஜ் அல்லது அவருடைய தம்பி ஹரிராம் அல்லது இவ்விருவரிடமும் அல்லது வழித் தோன்றலிடம் சந்த்பர்தாயி என்ற பெயரில் யாரேனும் பாணபட்ட கவி இருந்திருக்கக்கூடும். அக்கவியிடம் பிருதிவிராஜ் வீரவாழ்வு பற்றிக் கூறியிருக்கக்கூடும். அதைக்கேட்டு அவர் இக் காவியத்தைப் படைத்திருக்கக்கூடும். பிறகு பற்பல நூல்கள் பல புலவர்களால் கற்பனையாக இயற்றியிருக்கக்கூடும். இவற்றைக்கொண்டே இன்று அக்கவிஞரை பிருதிவிராஜ் காலத்தவர் என எண்ணி இவ்வாறு 'ராசோ' என்ற பெயரோடு புகழ்ந்து போற்றத் தொடங்கிவிட்டனர்."

ஹர்பிரசாத் சாஸ்திரி அவர்களின் கருத்தின்படி ஒருசிலர் சந்த்பர்தாயி அவர்களின் பிறப்பிடம் மகதம் என்றும், ஒருசிலர் 'ராசோ' காபியத்தை அடிப்படையாகக் கொண்டு லாகூர் என்றும் கூறி வருகின்றனர். இவருடைய கருத்தின்படி சந்த்பர்தாயி பிருதிவிராஜன் தந்தை சோமேஸ்வரின் அவைப்புலவராகவும் பிருதிவிராஜனின் நண்பராகவும், அமைச்சராகவும் இருந்துள்ளார். நாகூரில் (ராஜஸ்தான்) பிருதிவிராஜ் மூலம் சந்த்பர்தாயிக்கு நிலம் வழங்கியிருந்தார். இப்பொழுதும் அவருடைய பரம்பரையினர் அங்கே வசித்து வருகின்றனர். இராம்நாராயண் தூகர் அவர்கள் 'பிருதிவிராஜ் சரிதம்' நூலின் அடிப்படையில் இவ்வாறு தம் கருத்தை எழுதியுள்ளார்:

'ஜெய்ப்பூர் நகரின் விக்டோரியா ஹாலில் உள்ள நூல் நிலையத்தில் எந்தப் புத்தகத்தில் இந்தக் கருத்தைக் கண்டறிந்து வெளியிட்டேனோ அந்தப் புத்தகத்தின் இறுதியில் 'சந்த்பர்தாயி அவர்களின் யாப்பு வடிவம் இழைந்து கிடந்தன. இவற்றை மகாராணா அமர்சிங் அவர்கள் செம்மைப் படுத்துமாறு செய்து வெளியிட்டார்'.

மேற்குறிப்பிட்ட கருத்தினையும் விக்கிர ஆண்டு *1672*இல் மகாராஜா ராஜசிங் மூலமாக ராஜ் சமுத்திரம் குளத்தின் மண்டபத்தில் செதுக்கப்பட்ட ஒரு பாடலின் கருத்தினையும் இணைத்து நோக்குவார்க்கு முதன்முதலாக இவற்றில்தான் 'ராசோ' என்ற சொல் காணக்கிடக்கிறது எனத் தெரியவரும். இந்த நூலின் தொகுப்பு முதன்முதலாக அமரசிங் அரசரின் ஆட்சிக்காலத்தில்தான் வெளியிடப்பட்டதென அனைவரும் கருதிவருகின்றனர். அவருடைய ஆட்சிக்காலம் விக்கிரம ஆண்டு *1653-1678* ஆகிய ஆண்டிற்கு இடைப்பட்டதாகும். ஆகையால் இந்நூல் *17*-ஆம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் எழுதப்பட்டிருக்கக்கூடும் எனக் கருதலாம். நாகரி பிரச்சாரிணி சபைக்குக் கிடைத்த கைப்பிரதி விக்கிரம ஆண்டு *1642*ஆம் ஆண்டு எழுதப்பட்டது எனக் கூறுகின்றனர். இதற்கான அடிப்படைச் சான்றுகள் அதிகம் கிடைத்துள்ளன. கிடைத்த இரண்டு பிரதிகளிலும் இடைச்செருகல் அதிகம் இருப்பினும்கூட, சந்த்பர்தாயி என்ற பெயரில் ஒரு புலவர் கட்டாயம் இருந்திருக்க வேண்டுமென்பதில் யாதொரு கருத்து வேறுபாடும் இல்லை. ஏனென்றால், சமீபத்தில் முனிவர் ஜின்விஜய் அவர்கள் 'புராதன பிரபந்தத் தொகுப்பு' என்ற நூலில் இடம் பெற்ற 'ஜெயசந்த் பிரபந்தம்' என்ற நூலில் சந்த்பர்தாயி அவர்களின் நான்கு 'சப்பய்' கவிதைகளை எடுத்துத்தந்துள்ளார். எந்த 'பிருதிவிராஜ்-விஜய்' என்ற நூலை அடிப்படையாகக் கொண்டு டாக்டர் ஓஜா சந்த் பர்தாயி கவிஞரைப் பற்றிச் சந்தேகக் கருத்துக்களை வெளியிடுகிறாரோ, அந்த நூலின் பிரதிகூட அரைகுறையாகத்தான் கிடைத்திருக்கிறது. இத்துடன் பட்டகேதார் அவர்கள் எழுதிய 'ஜெயசந்த் ராசோ' என்ற நூலில் சந்த் பர்தாயி மற்றும் பட்டகேதார் ஆகியோர்களிடையே நடந்த வாத-விவாதம் பற்றிய குறிப்புக்கூட இடம்பெற்றுள்ளது. இத்தகைய பற்பல கருத்துக்களை முன்வைத்து நோக்குவார்க்கு இன்று கிடைத்துள்ள 'ராசோ' காவியம் பழைய நூல்களின் முழு வடிவையும் பெற்றிருக்கவில்லை என்பதும், அதிகமான இடைச்செருகல் பிற்காலத்தில் சேர்க்கப்பட்டுள்ளன என்பதும்

உள்ளங்கை நெல்லிக்கனி போலத் தெளிவாகத் தெரியக்கூடும். டாக்டர் சியாம்சுந்தர் தாஸ் அவர்களின் கருத்துப்படி,

> "தற்காலத்திய 'பிருதிவிராஜ் ராசோ' நூலில் இடைச்செருகல்கள் அளவுக்கு மீறி இடம் பெற்றுள்ளன. இத்துடன் யாப்பு - வடிவமைப்பிலும் கூட சிதைவுகள் காணப்படுகின்றன. எனவே, இன்றுள்ள ராசோ நூல் சந்த்பர்தாயி மூலம் படைக்கப்பட்ட எல்லாக் கவிதைகளின் ஒரு தொகுப்பான பதிப்பு நூல் என்றே கூறவேண்டியுள்ளது".

'பிருதிவிராஜ் ராசோ' நூலில் மிகப்பழைய காப்பிய மரபையொட்டிய கூறியது கூறல் என்னும் உத்தியோடு (சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை போல) உரையாடல் வடிவில் கதை கூறப்பட்டுவருகிறது. பிருதிவிராஜன் மரபினர் மற்றும் அவர்களுடைய வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சிகள் அனைத்தும் - குறிப்பாக சம்யுக்தையை அபகரித்தல், ஷஹாபுத்தீன் கோரியினுடைய படையெடுப்பும் போர் நிகழ்ச்சிகளும் - அவற்றின் வர்ணனைகளும் மிகச்சிறப்பாகவும் அழகாகவும் விளக்கம்பெற்றுள்ளன. இலக்கிய நோக்கில் இவை இந்தியின் முதல்தரமான காவியமாக எண்ணப்பட்டு வருகிறது. இடத்திற்கு இடம் யாப்பு வடிவமாற்றங்களும் இடம்பெற்றுள்ளன. ஆயினும் காவியம் ஆற்றொழுக்காக நன்முறையில் அமைந்துள்ளது. இதனை பதிப்பித்து வெளியீட்டின் வாயிலாக டாக்டர் சியாம்சுந்தர் தாஸ் இராஜஸ்தானி, இந்தி மொழிகட்கும் மற்றும் வரலாற்றிற்கும் பெரிதும் பேருதவி செய்துள்ளார் என்று கூறலாம்.

மோகன்லால் விஷ்ணுலால் பண்ட்யா மற்றும் இராதாகிருஷ்ணதாஸ் ஆகிய பேரறிஞர்களோடு கூடிப் பணிபுரிந்து இந்நூலினை நன்முறையில் பதிப்பித்து வெளியிடவேண்டுமென சியாம்சுந்தர் தாஸ் உறுதி செய்துகொண்டார். இந்த நூல் ஐந்து பாகமாக வெளியிடப்பட்டது. முதல் பதினொன்று பருவங்களும் 1904ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டன. இதில் முகவுரை எழுதப்படவில்லை. ஆனால், பருவங்களின் விபரத்தோடு விரிவான பட்டியல் ஒன்று கொடுக்கப்பட்டது. ஒவ்வொரு பருவத்தின் இறுதியில் தேவையான குறிப்புரைகள் தரப்பட்டன. சொற்பொருட்கள் விரிவாகவே அடிக்குறிப்புகளில் தரப்பட்டன. இத்துடன் பாடபேதமும் கொடுக்கப்பட்டிருந்தன. பின்வரும் பகுதிகளில் குறிப்புகள் தராமல் பாடபேதம் மட்டும் தரப்பட்டன. முடிவுரையாகத் தரப்பட்ட பகுதியில் 'பிருதிவிராஜ் ராசோ'

தொடர்பான கருத்துக்கள், காவிய மாண்பு, மொழிச்சிறப்பு, வரலாற்றுண்மை, நூலின் இயல்பான அமைப்பின் சிறப்பம்சம், பிருதிவிராஜன் தொடர்பான நிகழ்ச்சிகளின் வரலாற்றுச் சிறப்பு ஆகியவற்றின் மதிப்பீடுகள் ஆய்வுநெறியில் இடம் பெற்றிருந்தன. 'இந்நூலில் உள்ள கருத்துக்களில் யாதேனும் குறைபாடுகள், மாற்றங்கள் இருப்பதாகக் கற்பார் எண்ணினால் தயவுசெய்து அவற்றை எங்கள் கவனத்திற்கு கொண்டுவருமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறது' என்ற வேண்டுகோளும் இறுதியில் தரப்பட்டிருந்தது. இப்படிப்பட்ட பயனுள்ள குறிப்புகள் ஒவ்வொரு பகுதியிலும் தரப்பட்டு வரலாற்று உண்மைகளைக் கண்டறியும் பெருமுயற்சிக்கு வழிவகுத்தனர்.

இதன் 2வது பாகத்தில் 12 முதல் 18 வரை உள்ள பருவங்கள் இடம்பெறுமாறு செய்து 1906ஆம் ஆண்டில் வெளியிட்டனர். இதில் நூலிற்கு உதவிய மூலநூல்கள் பற்றி செய்திகள், பாடபேதங்கள், குறிப்புரைகள் மிகக் குறைவாகவே இடம்பெறலாயின. மூன்றாவது பாகத்தில் 54 பருவங்கள் வரை இடம்பெற்றிருந்தன. இதில் யாதொரு குறிப்புரையும் இடம்பெறவில்லை. நூல் முடியும் தருவாயில் இருந்ததனால் பதிப்பாசிரியர் குழுவில் இராதாகிருஷ்ணதாஸ் அவர்கள் பங்கேற்கவில்லை. ஆனால், கன்னையா அவர்கள் இப்பதிப்பிற்காக அதிகமாகப் பேருதவி செய்தார்கள். நான்காவது பாகத்தில் 61வது பருவம் வரை இடம்பெற்றிருந்தன. இஃது 1910இல் வெளியாயிற்று. இதில் பாடபேதமும் உள்ளடக்கமும் இடம்பெற்றிருந்தன. ஆனால், குறிப்புரைகள் இடம்பெறவில்லை. இறுதி பாகம் 1912இல் வெளியிடப்பட்டது. இஃது நான்காவது பாகத்தைப் போலவே பதிப்பிக்கப்பட்டிருந்தது. எல்லா நூல்களும் இராயல் சைஸ் வடிவில் 2325 பக்கங்கள் கொண்டிருந்தன. தொடக்கத்தில் மிக விரிவாக குறிப்புரைகள், பாடபேதங்கள், முகவுரை ஆகியவற்றோடு பதிப்பிக்கவேண்டுமென்றே திட்டம் தீட்டியிருந்தனர். ஆனால், மிக அதிக பக்கங்கள் இடம்பெற்றுவிட்டதால் பிறகு திட்டமிட்டவாறு செய்ய இயலாமல் போயிற்று என்பர். எதுவாய் இருப்பினும், அக்காலத்தில் இந்தி இலக்கிய உலகில் இது ஒரு மிகப்பெரிய சாதனை படைத்த பணியாகவே கருதப்பட்டு வந்தது.

'ராசோ' இலக்கியத்தின் இடையில் நம் நாட்டின் வரலாற்றின் அடிப்படை ஆதாரங்கள் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. இத்துடன் வீரர்களின் புகழ்பாடும் பாக்களின் விரிவான மரபுகளும் இடம்பெற்றுள்ளன. இதில் எத்தனையோ குறைபாடுகள் ஏற்பட்டன. வஞ்சகமாக மறைக்கப்பட்டவை பல;

கிடைக்காமல் போனவை பற்பல; கிடைத்தவற்றுள்ளும் மூலப்பாடங்கள் இல்லாமல் கிடைத்தவை பல; கிடைத்தவற்றுள் ஏராளமான இடைச்செருகல்; காலந்தோறும் சேர்க்கப்பட்டவையும் பற்பல; இருப்பினுங்கூட இந்திமொழிக்கு மட்டுமன்று பல இந்திய மொழிகளின் 'ராசோ' இலக்கியங்களுக்குப் பெருஞ்செல்வமாகவே கருதப்பட்டது எனலாம். அறிவுப்பூர்வமான ஆக்கப்பணிகட்கு இக்காப்பியத்தின் வாயிலாக ஏராளமான இலாபம் கிடைத்தது எனக் கூறலாம். எனவே, இப்படிப்பட்ட நூல்கூட சாதாரணமாகக் கருதப்படுவதற்கில்லை. இத்தகைய நூல்கள் கிடைத்த பிறகே ஆழமான ஆய்வுப்பணியும், திறனாய்வுப்பணியும் உருவாகத் தொடங்கிற்று எனக்கூறலாம். இந்நோக்கிலும் இஃது மிகச்சிறந்த ஒன்றாகவே கருதப்பட்டது.

**சத்ரபிரகாசம் :** லால் கவி அவர்களால் இயற்றப்பட்ட 'சத்ரபிரகாசம்' என்ற நூலை டாக்டர் சியாம்சுந்தர்தாஸ் சபையின் மூலமாக 1902ஆம் ஆண்டில் பதிப்பிற்கு ஏற்பாடு செய்தார். லால்கவி அவர்கள் புந்தேல்கண்ட் பகுதியின் மாமன்னர் சத்ரசால் அவர்களின் அரசவைக் கவிஞராகத் திகழ்ந்தவர். அம்மன்னரின் வேண்டுகோளுக்கிணங்கவே 'சத்ரபிரகாசம்' என்ற பிரபந்த காவியத்தை இயற்றினார். இதில் சத்ரசால் அவர்களின் வாழ்க்கை வரலாறும் சொல்லப்பட்டிருக்கிறது. இதில் கூறப்பட்ட நிகழ்ச்சிகள் அனைத்தும் வரலாற்றின் அடிப்படையில் இடம்பெற்ற உண்மையான நிகழ்ச்சிகளே ஆகும். முகஸ்துதி நோக்கைக் கொண்டு வெறும் பொழுதுபோக்கிற்காக எழுதப்பட்ட நூல் அன்று. உண்மையை வெளியிடுவதே இதன் அடிப்படை நோக்கமாக இருந்தது. டாக்டர் சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் இக்கவிஞரை அவர் காலத்தில் வாழ்ந்த கவிஞர்களுள் மிகச்சிறந்த கவிஞராகக் கருதி வந்தார். இந்த நூலில் புந்தேல் குலத்தின் தோற்றம், சம்பத்ராய் அவர்களின் வீரம், முகம்மதியர்களின் வெற்றி, புந்தேல்கண்ட் நாட்டில் சத்ரசால் அரசர் மூலம் செய்யப்பெற்ற சீர்திருத்தங்கள் மற்றும் அடிக்கடி முகம்மதிய மன்னர்கள் போரில் தோற்ற விதம் ஆகியவை வியக்கத்தக்க வகையில் விளக்கம் பெற்றிருந்தன. சத்ரசால் போரில் தோற்ற விபரமும் இந்த நூலில் இடம் பெற்றிருக்கிறது. இக்கவிஞரின் தேசிய பார்வை தொலைநோக்குடையதாகக் காணப்படுகிறது. இவருடைய காப்பியத்தில் தேசிய நிர்மாணத்திற்குரிய நல்லுணர்வுத் தத்துவம் ஆழமாக இடம்பெற்றிருந்தது. இக்கவிஞர் தம்மை ஆதரித்த மாமன்னரைப் புகழ்ந்து பாராட்டும் எண்ணம் கொண்டவராக மட்டும் இருக்கவில்லை. இவர் சிவாஜியின் பரந்த நாட்டின் பெருமைகளையும் தம் நூலில் வெளியிட்டு, சத்ரசால்

மாமன்னரின் மனதில் சிவாஜியைப் பற்றிய உயர் பக்தி உருவாகுமாறு செய்தார். அந்த இரு தேசியத் தலைவர்களின் சந்திப்பினைக்கூட சிறப்பாகவும், உள்ளவாறும் வர்ணித்துப் பாடுவதிலிருந்து . பின்வாங்கவில்லை. விக்கிரம ஆண்டு 1764 வரையில் நடந்த நிகழ்ச்சிகள் இந்நூலில் சிறப்பாக எடுத்துக்கூறப்பட்டுள்ளன. இதனால், விக்கிரம ஆண்டு 1765 ஆண்டிற்குப் பிறகுதான் சத்ரசால் மாமன்னர் காலத்திலேயே கவிஞர் இறந்திருக்கக்கூடும் எனத் தெரியவருகிறது. இக்காவியம் இயல்பாகவும் காப்பியத் தன்மை கொண்டும் மிகச் சிறப்பாக விளங்குகிறது. உதிரிநிலைக் காப்பியங்கள் காலத்தில் துளசிதாசரின் நூலுக்குப் பிறகு இதுவே முதலாவதாகக் கருதப்படுகிறது. இதில் காப்பியத்திற்குரிய எல்லாப் பண்புகளும் நிறைவாக அமைந்துள்ளன. இத்தகைய சிறப்புவாய்ந்த இந்த நூலினை நாகரி பிரச்சாரிணி சபையின் மூலம் வெளியிட்டனர். இக்கவிஞர் பரவை யாப்பு வடிவில் பல்வகைத் தலைவியர்களின் சிறப்பை 'விஷ்ணு விலாசம்' என்ற பெயரில் மற்றொரு நூலினை எழுதியிருந்தார். ஆனால், அது சாதாரண ஒரு நூல் ஆகும்.

அவர் இந்நூலில் ஒரு விரிவான வரலாற்றுச் சிறப்புமிக்க முகவுரை ஒன்றினை எழுதியுள்ளார். இந்த நூலுங்கூட ஒரு வரலாற்றுச் சிறப்புமிக்க நூலாகும். இதில் புந்தேல் வட்டார முகம்மதியர்களின் வரலாறும் மாமன்னர் சத்ரசால் வரலாறும் வீரச்செயலும் மிகச்சிறந்த முறையில் விளக்கம் பெற்றன. சத்ரசால் சுதந்தரத்தை விரும்பி, அதனைப் பெறத் தம் வீரத்தை முழுமையாகப் பயன்படுத்தி வெற்றிபெற்ற பெருமைமிக்க வடநாட்டு மாமன்னன் ஆவான். இவனுடைய தீரவீரச் செயல்கள் அனைத்தும் இக்காவியத்தில் இடம்பெற்றுள்ளன. இந்நூலுக்குத் தனிப்பட்ட முறையில் வரலாற்றுச் சிறப்பும் பெருமையும் கிடைத்துள்ளது. ஏனெனில், அதன் தொடர்பான உண்மை நிகழ்ச்சிகள் அதிகம் இடம்பெற்றுள்ளன. இது வெறும் முகஸ்துதிக் காவியமாக அமையாமல் அந்த எல்லைக்கு அப்பாற்பட்டதால் இதனை வரலாற்று நூல் எனக் கூறுவதில் தவறில்லை. இந்நூல் முதன்முதலாக 1829 ஆம் ஆண்டு மேஜர் ஃப்ராய்ஜ் அவர்கள் மூலம் ஃபோர்ட் வில்லியம் கல்லூரியின் சார்பாக அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது. அதன் ஆங்கில மொழிபெயர்ப்பினை கேப்டன் வார்ஸன் செய்திருந்தார். இதன் மறுபதிப்பும்கூட வெளிவந்தது. இந்நூலின் முகவுரை 12 பக்கத்திற்கு மட்டுமே சியாம்சுந்தர்தாஸ் அவர்களால் எழுதப்பட்டது. அதில் பற்பல வரலாற்று உண்மைகளை நயம்பட எடுத்துரைத்துள்ளார். வரலாற்றுத் துறையிலிருந்த பேரறிஞர்கள்

கூட இந்நூலை ஒரு வரலாற்றுச் சிறப்புமிக்க நூலாகவே கருதித் தம் ஆய்வுக்கு நன்கு பயன்படுத்தி வந்தனர். அந்த அளவிற்கு இந்நூலில் பல வரலாற்றுச் செய்திகள் தக்கச் சான்றுடன் இடம்பெற்றிருந்தன. ஆங்கிலத்தில் உள்ள இந்த நூலை இந்தி இலக்கிய உலகில் தக்கவாறு பதிப்பித்து வெளியிட்டதன் காரணமாக இந்திக்கு மிகுதியான கௌரவம் கிடைத்தது. இத்துடன், ரீதி காலத்திலுங்கூட சிறந்த வீரகாவியம் படைக்கும் மரபு இருந்தது என்பதற்கு சத்ரசால் தக்கச் சான்றாகத்திகழ்ந்துவந்தது. ரீதிகாலம் சிற்றின்பம் நிறைந்த இலக்கியங்கள் படைக்கப்பட்ட காலம் மட்டுமே என்று கருதிவிடாமல் அக்காலத்தில் வாழ்விற்கு இன்றியமையாத பிற எல்லா அம்சங்களும் நிறைந்த இலக்கியங்கள்கூட அவ்வப்பொழுது இயற்றப்பட்டு மக்கள் நலங்காக்கும் பெருமை மிகுந்த இலக்கியங்களாகத் திகழ்ந்து வந்திருக்கின்றன எனக் கூறலாம்.

**இந்திராவதி** : *1906* ஆம் ஆண்டில் காசி நாகரி பிரச்சாரிணி சபையின் மூலமாக கவிஞர் நூர்முகம்மது அவர்களால் இயற்றப்பெற்ற 'இந்திராவதி' என்ற நூலும் முதன்முதலாக டாக்டர் சியாம்சுந்தர்தாஸ் அவர்களால் பதிப்பாசிரியராக இருந்து வெளியிடப்பட்டது. இந்நூலின் கைப்பிரதி மிர்ஜாபூரில் வாழ்ந்த மௌல்வி அப்துல்லா மூலம் பாபு சியாம்சுந்தர்தாஸுக்குக் கிடைத்தது. மௌல்வி அப்துல்லா அவர்கட்கு இப்பிரதி கவிஞர் நூர்முகம்மதுவின் பேரன் மூலம் கிடைத்தது. மூலநூல் பாரசீக மொழியில் இருந்தது. மௌல்வி அப்துல்லா *1900* ஆம் ஆண்டு இதனை 'கைத்தி' எழுத்து வடிவில் எழுதியிருந்தார். இந்நூலினை அடிப்படையாகக் கொண்டே தேவநாகரி எழுத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டனர். இதன் இரண்டாவது பாகம் இன்றுவரை வெளியிடப்படவில்லை. கவிஞர் நூர்முகம்மது மாமன்னர் முகம்மது ஷா அவர்களின் காலத்தவர். ஜோன்பூர் வட்டாரத்தில் உள்ள சபர்தக் கிராமத்தில் வாழ்ந்துவந்தவர். இவருடைய மாமனார் ஜம்சுதீன், மற்றும் பல உறவினர்கள் ஆஜம்கட் பகுதியில் வாழ்ந்துவந்தனர். இக்கவிஞருக்கு குழந்தை இல்லாததால் இவர்களோடு வாழத் தொடங்கினார். இவர்தான் இந்தி மொழியின் புகழ்பெற்ற கடைசி சூஃபி கவிஞர் ஆவார். இந்திராவதியை இந்தி மொழியில் பாரசீக கவிஞராகிய இவரே எழுதினார். இவர் இந்திமொழி இலக்கியம் மற்றும் கலைகளில் மிகச்சிறந்த பெரும்புலவராகத் திகழ்ந்திருந்தார். *1756*ஆம் ஆண்டில் 'இந்திராவதி' எழுதப்பட்டது. பாரசீக மொழியில்கூட இந்நூல் 'ரோஜ்துல்ஹகாயக்' என்ற பெயரில் வெளிவந்தது. இந்திமொழியில் இதே நூல் 'அனுராக் பான்சூரி' என்ற பெயரில்

வெளியிடப்பட்டுள்ளது. மற்றைய சூஃபி கவிஞரைவிட இவரிடம் இருவகையான சிறப்பம்சங்கள் நிறைந்திருந்தன. முதலாவது, இவருடைய மொழியில் அதிகம் சமஸ்கிருதச் சொற்கள் இடம்பெற்றிருந்தன. இரண்டாவது, உருதுமொழியின் வளர்ச்சிக்குரிய அறிகுறிகள் பல இதில் தென்படுகின்றன. 'அனுராக் பான்சூரி' தத்துவம் நிறைந்த முழு உருவகத்தில் எழுதப்பட்ட ஒரு நூலாகும்.

இந்தப் பிரபந்தக் காவியத்தில் கலிங்க நாட்டின் அரசகுமாரன் ராஜ்கும்வர் மற்றும் ஆகம்பூர் நாட்டின் அரசகுமாரி இந்திராவதிக்கிடையே தோன்றி வளர்ந்த காதல் கதை சூஃபி காதற்காவிய மரபில் எழுதப்பட்டிருந்தது. இந்நூல் அவதிமொழியில் சூஃபி காப்பிய மரபின் மஸ்நவி நெறியில் தோகா, சௌபாயி, யாப்பு வடிவில் இயற்றப்பட்டுள்ளது. ஆனால், இது சமஸ்கிருதம் அதிகம் கலந்த மொழியாக இருக்கிறது. இவர் சூஃபி காவிய மரபிலிருந்து விலகி இவ்வாறு ஒரு புதிய மரபை மேற்கொண்டு எழுதியுள்ளார். இவர் எல்லாப் பண்புகளையும் இயல்பாகப் பெற்ற, சிறந்த இந்திக் கவிஞராகத் திகழ்ந்தார். இவர் இந்திமொழிமீது அதிகம் விருப்பம் கொண்டிருந்ததால் சமூகத்தில் சிலர் இவரை விரோதியாகவே கருதிவந்தனர். இத்தகைய இந்திமொழிப் பற்றாளராகத் திகழ்ந்த மிகச்சிறந்த இந்த சூஃபி முகம்மதியக் கவிஞர் மூலம் படைக்கப்பெற்ற இந்திமொழி இலக்கியங்கள் அனைத்தையும் பதிப்பித்து வெளியிட்டு பாபு சியாம்சுந்தர்தாஸ் இந்திமொழிக்குப் பலவிதமான தொண்டுகளைச் செய்திருக்கிறார்.

**ஹம்மீர் ராசோ :** *1908* ஆம் ஆண்டு கவி ஜோத்ராஜ் அவர்களால் இயற்றப்பெற்ற 'ஹம்மீர் ராசோ' நூல் வெளியிடப்பட்டது. இதன் பதிப்பாசிரியராக சியாம்சுந்தர்தாஸ் அவர்களே இருந்து வெளியிட்டார். நீவ்கட் (நீம்ராணா, அல்வர்) அரசன் சந்திரபானு சௌஹான் அவர்களின் வேண்டுகோளின்படி பண்டிட் ஜோத்ராஜ் அவர்கள் (பண்டிட் பாலகிருஷ்ணன் அவர்களின் மகன்) இந்நூலினை *1818*ஆம் ஆண்டில் இயற்றினார். இந்தப் பிரபந்தக் காவியத்தில் ரணதம்பௌர் நாட்டின் மகாராணாவாகத் திகழ்ந்த ஹம்மீர்தேவி அவர்களின் பண்பாட்டின் பெருமையை சப்பயி யாப்பு வடிவில் யாத்துள்ளார். இந்த நூலில் *71* பக்கத்திற்கு மிக விரிவான ஒரு முகவுரையை பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் எழுதியுள்ளார். இதில் 'ஹம்மீர் ராசோ' காப்பியத்தின் சிறப்பம்சங்களை நயம்பட சற்று விரிவாகவே எழுதியுள்ளார். ஹம்மீர் அரசரும் அலாவுதீன் அரசரும் கொண்ட தொடர்பு பற்றி கூறப்படும் எல்லாக்

கருத்துக்களும் இந்நூலில் முழுமையாக விளக்கம் தரப்பட்டுள்ளது. இந்த நூலில் இடம்பெற்ற வரலாற்று உண்மைகளை முறையாக எடுத்துக்காட்டியுள்ளார். ஹம்மீர் என்ற பெயரில் இரு புகழ்பெற்ற மாமன்னர்கள் இருந்த செய்தியையும் இதில் குறிப்பிட்டுள்ளார். அவர்களைப் பற்றிய செய்திகளைக் கூறி இறுதியில் மேவார் நாட்டு ஹம்மீர்சிங் அரசருடைய வரலாற்றிற்கும் இந்தக் காப்பியத்திற்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்று கூறித் தம் கருத்தை நன்முறையில் நிறுவியுள்ளார். கவிஞர் இந்த இரு மாமன்னர்களின் குணநலன்களை ஒருசில இடங்களில் ஒன்றுபோலவே கூறியுள்ளதையும் காணமுடிகிறது. பாபு சியாம்சுந்தர் தாஸ் காப்பியத்தில் கூறப்பட்டக் கதைகளில் இடம்பெற்ற வரலாற்று உண்மைகளை இவ்வாறு பல கோணங்களில் எடுத்துக் கூறியுள்ளதைக் காணலாம். இந்நூலில் வரலாற்று உண்மைகள் மட்டுமல்ல, கவிஞரின் கற்பனைத்திறனும் பல இடங்களில் நயம்பட வெளிப்படுகிறது. ஹம்மீர் இராஜஸ்தான் பகுதியின் இடைக்காலத்தில் இருந்த இறுதி மகாராணா வீரர் ஆவார். இவருடைய பெருமைவாய்ந்த வாழ்வே இந்நூல் தோன்றுவதற்குக் காரணமாயிற்று என்று கூறுவதும் பொருத்தமேயாகும். 'ராசோ' காவிய மரபில் இக்காவியம் மிகச்சிறந்த பிரபந்தக் காவியமாகக் கருதப்படுகிறது. 'ராசோ' இலக்கியத்தின்மீது விருப்பம்கொண்ட எல்லா மக்களும் இக்காவியத்தின் எல்லா நற்சுவைகளையும் நன்கு அசைபோட்டு ரசித்து வருகின்றனர் என்பது உண்மையேயாகும்.

**பரமால் ராசோ :** இந்நூலினை *1919ஆம்* ஆண்டு சபையின் வெளியீடாகச் சியாம்சுந்தர் தாஸ் அவர்களே பதிப்பாசிரியராக இருந்து வெளியிட்டார். இஃது கிட்டத்தட்ட *600* பக்கங்களைக் கொண்ட ஒரு பெரிய 'ராசோ' காவியமாகும். இதில் இவர் சிந்தனைக்கு விருந்தாக அமையுமாறு ஒரு சிறந்த முகவுரை எழுதி இடம்பெறச் செய்துள்ளார். *1901ஆம்* ஆண்டு சியாம்சுந்தர் தாஸ் அவர்கள் வங்காள ஏசியாடிக் சொஸைட்டியில் பாதுகாத்து வைத்திருந்த கையெழுத்துப் பிரதிகளை ஆய்ந்துவர கல்கத்தாவிற்குச் சென்றார். அப்பொழுது சொஸைட்டி 'பிருதிவிராஜ் ராசோ' காவிய நூல் அச்சிடும் பணியைச் செய்துகொண்டிருந்தது. ஆனால் ஒருசில நாட்களிலே ஏதோ ஒருசில அறிந்துகொள்ள இயலாத காரணங்களால் அச்சுப்பணி நின்றுவிட்டது. இச்சிறப்பு வாய்ந்த, ஆனால், அகில பாரதநாட்டின் பெருமைக்குரிய பணியாக இந்தச் சொஸைட்டி 'பிருதிவிராஜ் ராசோ' என்ற பெயரில் பல கையெழுத்துப் பிரதிகளைத் திரட்டிப் பாதுகாத்து வைத்திருந்தது. இவற்றை

ஆய்ந்து வந்த டாக்டர் சியாம்சுந்தர்தாஸ் அவர்களின் கண்ணில் 'பிருதிவிராஜ் ராசோ' என்ற பெயரில் ஒரு கைப்பிரதி தென்பட்டது. இந்நூல் இரு வெவ்வேறு பகுதிகளைக் கொண்டிருந்தது. ஒரு பகுதியின் பெயர் மகோபாகாண்டம் ஆகும். மற்றொரு பகுதியின் பெயர் கன்னோசி காண்டம் ஆகும். இந்த இருபகுதிகளும் எழுதப்பட்ட காலம் விக்கிரம ஆண்டு 1925 ஆகும். பிறகு ஜெகந்நாத்தாஸ் 'ரத்னாகர்' அவர்களுக்கு சதர்பூர் பகுதியில் மகோபாகாண்டம் மட்டும் விக்கிரம ஆண்டு 1849 ஆம் ஆண்டு எழுதப்பெற்ற ஒரு பிரதியும் கிடைத்தது. ஏசியாடிக் சொஸைட்டியிலிருந்த பிரதிகளும் புதியதாகக் கிடைத்த மகோபா காண்டம் பிரதியும் சிறிதளவே பாடபேதத்துடன் காணப்பட்டன. ஒரு மூலநூலின் இரு வேறுவகைப் பிரதி என அனுமானிக்கும் நிலை ஏற்பட்டது. இரண்டு நூலின் பெயரும் 'பிருதிவிராஜ் ராசோ' என்றும், ஆசிரியர் சந்த் பர்தாயி என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது. சபையின்மூலம் முன்பே வெயிடப்பட்டிருந்த 'பிருதிவிராஜ் ராசோ' என்ற நூலுக்கும் இதற்கும் வேறுபாடுகள் அதிக அளவில் தென்பட்டன. மகோபா காண்டத்தில் பிருதிவிராஜ் சௌஹான் மற்றும் பரமால் வட்டாரத்தின் பரமாத்திரிதேவன் அவர்கட்கும் இடையே நடந்த கொடும் போர் பற்றிய செய்தியும் கன்னோசிக் காண்டத்தில் பிருதிவிராஜ் சௌஹான் மற்றும் ஜெயசந்தன் இடையே நடந்த போரும் இடம்பெற்றிருந்தன. 'பிருதிவிராஜ் ராசோ' காவியத்தில் இந்நிகழ்ச்சிகள் மிகச் . சுருக்கமாகக் கொடுக்கப்பட்டிருந்தன. உண்மையிலேயே இந்நூல் 'பிருதிவிராஜ்ராசோ' காவியத்தில் இடம்பெறவேண்டிய பகுதிகளைக் கொண்டவையல்ல. ஆனால், அதன் அடிப்படையில் எழுதப்பெற்ற ஒரு புதிய தனிநூல் ஆகும். பாரநாட்டின் பழைய வரலாற்றில் இடம்பெற்ற தன்மான வரலாறும், அதன் தலைவிதியை நிர்ணயம் செய்த விபரமும் இக்காவியத்தில் இடம்பெற்றிருப்பதைக் காணலாம். ஆகையால், இந்நூலை ஒரு தனிநூலாகக் கருதிப் பதிப்பித்து வெளியிட்டனர். இந்நூலுக்கு டாக்டர் சியாம்சுந்தர்தாஸ் அவர்கள்தான் 'பரமால்ராசோ' எனப்பெயரிட்டு வெளியிட்டார். இதில் விவரிக்கப்படும் எட்டு நிகழ்ச்சிகளைப் பற்றிப் பதிப்பாசிரியர் சுருக்கமாக முதலில் அறிமுகப்படுத்தியுள்ளார். பாடபேதம் உடனுக்குடன் கொடுக்கப்பட்டிருந்தது. இந்நூலில் ஆல்ஹா-ஊதல் அவர்களின் வாழ்க்கை வரலாறு விபரமாகக் கொடுக்கப்பட்டது. வரலாற்று நிகழ்ச்சிகள், கல்வெட்டுகள், அறக்கட்டளைத் தொடர்பான செப்பேடுகள் ஆகியவற்றினையும் ஆய்ந்து பதிப்பாசிரியர், 'இந்நூல் வரலாற்று நோக்கில் கூறப்படும்

செய்திகள் ஏற்புடையதாக இல்லாவிடினும் நாட்டுப்பற்றுத் தொடர்பாகக் கூறப்பட்ட செய்திகள் நூல் முழுவதும்பரவலாகக் காணக்கிடக்கின்றன' எனக் குறிப்பிட்டுள்ளார். சியாம்சுந்தர் தாஸ் இதன் தொடர்பான கருத்துக்களாகக் கீழே உள்ளவற்றைக் குறிப்பிடுவார்:

"இந்தக் காவியத்தைப் படிக்கும்போது ஒரு அபூர்வமான நல்லுணர்வு தோன்றுவதை அறியலாம். நாட்டின் பழம்பெருமை, மகாபுருஷர்களின் போற்றத்தக்க சிறப்புவாய்ந்த நற்குண நற்செயல்கள் நம் கண்முன் வந்து காட்சியளிப்பதைக் கண்டு மகிழலாம். இவற்றைப் படித்தவுடனேயே மனதில் உற்சாகமும், ஆனந்தமும், பெருமிதமும் தோன்றி, நல்ல எண்ணங்கள் உருவாக வழிவகுக்கும். எனவே, இத்தகைய நற்சிந்தனைகள் நன்கு வெளிப்படட்டும் என்ற நோக்கில்தான் இந்த நூல் இன்றியமையாத ஒரு போற்றத்தக்க நூல் எனக் கருதி வெளியிடப்பட்டது".

இக்காவியத்தின் தனித்தன்மையைக் கண்டு மயங்கியே பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் இந்த நூலுக்குப் பதிப்பாசிரியராக இருந்து நற்றொண்டாற்றினார். இதன் இரண்டாவது பாகம் இன்றுவரை வெளியிடப்படாமலேயே இருக்கிறது.

**தீனதயாள் கிரிகிரந்தாவளி:** இதே ஆண்டில் 'தீனதயாள் கிரி கிரந்தாவளி' என்ற தொகுப்பு நூல் ஒன்றும் வெளியிடப்பட்டது. இதில் தீனதயாள் கிரி அவர்களுடைய ஐந்து நூல்களும் ஒன்றாகத் திரட்டிக் கொடுக்கப்பட்டிருக்கிறது. 'அனுராக் பாக்', 'திருஷ்டாந்த தரங்கிணி', 'அந்யோக்திமாலா', 'வைராக்கிய தினேஷ்', 'அந்யோக்தி கல்பத்திரும்' முதலியவையாகும். இந்தத் தொகுப்பு நூல் வெளியிடுவதற்கு முன்பே 'அனுராக் பாக்', 'திருஷ்டாந்த தரங்கிணி' மற்றும் 'அந்யோக்தி கல்பத்திரும்' ஆகியவை தனித்தனி நூலாக வெளியிடப்பட்டிருந்தன. ஆயினும், அவை கிடைக்கவில்லை.

தீனதயாள் கிரி காசிமாநகரின் புகர்பெற்ற பேரறிஞர் ஆவார். 19ஆம் நூற்றாண்டில் இவருடைய காவியங்களுக்கு அதிக மதிப்பும் புகழும் பரவலாக இருந்து வந்தது. இவர் சமஸ்கிருதம், இந்தி ஆகிய இருமொழிகளிலும் மிகச் சிறந்த புலமை பெற்று விளங்கினார். இந்தி இலக்கிய உலகில் இவர் அந்யோக்தி முறையில் அதாவது வேற்றுப்பொருள் வைப்பணி சிறப்பாக இடம்பெறுமாறு செய்யுள் படைப்பதில் வல்லவராகத் திகழ்ந்திருந்தார். எளிய சொற்களை வைத்து காவியம்

படைப்பதிலும் மனங்கவர் சொற்றொடர்களை வைத்துப் படைப்பதிலும் மிகச்சிறந்த ஆற்றல் பெற்றிருந்தார். இவர் உலக வாழ்வு தொடர்பான கருத்துக்களையும், ஆன்மீகம் தொடர்பான கருத்துக்களையும் கருப்பொருளாகக் கொண்டு பல நூல்கள் இயற்றியுள்ளார். உலக வாழ்வியல் இலக்கியத்தில் இனிமையும் ஆன்மீக இலக்கியத்தில் மறைபொருளும் வைத்துப் பாடுவதில் வல்லவர். இருபொருள்படுமாறு எளிய முறையில் உணர்வுகளை வெளிப்படுத்தல், சொற்களை ஆழ்ந்த பொருள்படுமாறு அமைத்தல் மற்றும் காப்பிய நயத்தோடு நற்கருத்துக்களை வெளிப்படுத்தல் போன்ற தனித்தன்மைகளை இவருடைய காவியத்தில் காணலாம். நூலினைப் படைப்பதற்காக இவர் தேர்ந்தெடுத்து அமைத்துத்துக்கொள்ளும் மரபுமுறைகள் மிச்சிறப்பு வாய்ந்தவை; தனித்தன்மை கொண்டவை. இந்நூல்கள் சம்வத் 1889 முதல் 1922 வரை உள்ள இடைப்பட்ட காலத்தில் படைக்கப்பட்டன. இக்கவிஞரின் வாழ்க்கை வரலாற்றினைத் தேடிக்கண்டறிந்து ஒன்றுதிரட்டி இந்தத்தொகுப்பு நூலில் விரிவாகத் தந்துள்ளார். இந்துடன் இக்கவிஞர் இயற்றிய தனிக்கவிதைகளையும் இத்தொகுப்பில் இடம்பெறச் செய்தார். இந்த தொகுப்பு நூலின் வாயிலாக இவர் தீனதயாள் கிரியின் பேரிலக்கியங்கள் நிரந்தரமாக வாழ்ந்து இந்தி இலக்கிய உலகத்திற்கு சுவைநிறைந்த காவியங்கள் கிடைக்குமாறு செய்தார். இவ்வாறு கவனிப்பாரற்றுக் கிடந்த பற்பல பயனுள்ள சிறந்த கவிஞர்களால் இயற்றப்பெற்ற ஏராளமான இலக்கியங்கள் வெளிவருமாறு செய்தார். பாபு சியாம்சுந்தர்தாஸ் மேற்கண்ட இத்தகைய நற்பணிகள் காரணமாக இந்தி இலக்கிய உலகிற்கு பழம்பெரும் பேரிலக்கியங்கள் கிடைக்குமாறு செய்த கருணை வள்ளலாகத் திகழ்ந்தார் என்று கூறலாம்.

**பாரதேந்துநாடகாவளி:** பாரதேந்து அரிச்சந்திரர் தற்கால இந்திக்குத் தந்தையாவார். அவர் நாடக ஆசிரியர் மட்டுமன்று; மிகச்சிறந்த நாடகக் கலைஞரும் கூட. அவர் இந்தி நாடகமேடை வளர்ச்சிக்காக ஆற்றிய தொண்டு அளப்பரிது. இந்தி நாடக வரலாற்றில் தொடர்ச்சியான நல்ல வளர்ச்சியை இவருடைய படைப்புகளின் மூலம் உருவாக்கமுடிந்தது. இவர் சில நாடகங்களை மொழிபெயர்த்தும் தந்தார். தம் மேற்பார்வையில் சிலரைக் கொண்டு மொழிபெயர்க்கவும் செய்தார். இத்துடன் புத்தம்புதிய நாடகங்களையும் எழுதிப் புகழ்பெற்றார். இவருக்கு முன் இருந்த இலக்கியக் கர்த்தாக்களைப் பின்பற்றி நாடகங்கள் எழுதியிருந்தாலும்கூட, அவர்களுடைய மரபுகளைத் தான் இவர் ஏற்றுக்கொண்டாரேயன்றி கருத்துக்களையன்று. 'சத்திய

ஹரிச்சந்திரா', 'வித்யாசுந்தர்' போன்ற நாடகங்களைத் தம் சிந்தனைக்கு ஏற்ப புதுமையாகப் படைத்துப் பெரும்புகழ் பெற்றவர். நாட்டில் பரவியிருந்த அறியாமை இருள், முறையற்ற ஆட்சி, கைமையுணர்வு, சமூகத்தின் இழிநிலை ஆகியவற்றை மட்டும் தம் நாடகத்தில் வெளிப்படுத்தவில்லை. தக்க முறையில் ஆங்கில அரசாட்சியையும் விமர்சனம் செய்துவந்தார். அக்காலத்தில் படைக்கப்பட்ட இவருடைய நூல்களை எடுத்துப்பார்த்தால் அவரைப்போன்ற சீர்திருத்தவாதி, தலைவர் மற்றும் இலக்கியக்கர்த்தா அக்காலத்தில் வேறு எவரும் இல்லை என்றே கூறவேண்டும். உணர்வுமிக்க கற்பனை இலக்கியங்கள் (ரோமாண்டிக்) மீது தனி கவனம் செலுத்திப் பார்த்தாலும்கூட இவருடைய 'சந்திராவளி' இந்தி மொழியில் எழுதப்பெற்ற முதல் ரோமண்டிக் நாடகம் மட்டுமன்று; இதில் மிகச்சிறந்த தெய்வீகக் காதல் தொடர்பான கருத்துக்கள் நயம்பட வெளியிடப்பட்டிருப்பதைக் காணலாம். இந்நூல் ஆசிரியரின் தனித்தன்மையையும் பேராற்றலையும் எடுத்துக்காட்டும் சிறந்த நூலாகக் காணப்படுகிறது. இவருடைய மொழிபெயர்ப்பு நாடகங்களுள் 'இரத்னாவளி' (ஆரம்ப அம்சம்), 'பாகண்ட் விடம்பன்', 'பிரபோத் சந்திரோதயம்' (மூன்றாவது அம்சம்), 'தனஞ்சய்விஜய்', 'முத்ராராட்சஸ்', 'கர்பூர் மஞ்சரி', 'பாரத் ஜனனி', 'துர்லப பந்து' முதலியவை இடம்பெற்றுள்ளன. அவருடைய பலதரப்பட்ட நாடகங்கள் இயற்றிய காலவரிசை இம்முறையில் உள்ளது:

'வித்யாசுந்தர் 2ஆம் பாகம்' -1862; 'இரத்னாவளி' (முழுமை பெறவில்லை) - 1868; 'பாகண்ட் விடம்பன்' - 1873; 'வைதிகி ஹிம்சாஹிம்சாநபவதி' - 1873; 'தனஞ்ஜய் விஜய்' - 1873; 'முத்ராராட்சஸ்' -1875-77; 'சத்யஹரிச்சந்திரர் 1875;' பிரேம்-ஜோகினி', 'காசி கே சாயாசித்ர அல்லது தோ பலேபுரே-ஃபோடோகிராஃப்' -1874; 'விஷஸ்ய விஷமௌஷதம்' - 1876; 'கர்பூர் மஞ்சரி' - 1876; 'சந்திராவளி' - 1876; 'பாரத்துர்தஷா' - 1876; 'பாரத் ஜனனி' - 1878; 'நீல்தேவி' - 1878; 'துர்லப பந்து' - 1887; 'அந்தேர் நகரி' - 1881; - 'சதிபிரதாப்' - 1884 ஆகும்.

டாக்டர் சியாம்சுத்ர்தாஸ் பாரதேந்துவின் நாடகங்களின் தொகுப்பு நூலினையும் தொகுத்தார். அதில் ஒரு விரிவான முகவுரையையும் எழுதியுள்ளார். இது எல்லாச் செய்திகளையும் தன்னகத்தே கொண்டு பாரதேந்துவால் படைக்கப்பட்ட எல்லா நாடகங்களும் இந்திமொழி நாடக உலகில் நிரந்தரமாகப்

போற்றப்பட வேண்டியவை என்பதை நன்முறையில் நிலைநாட்டியுள்ளார். இவர் காலத்தின் தேவையையறிந்து அதற்கேற்ப நாடகத் திறனாய்வு நெறி முறைக்கேற்ப பாரதேந்து அவர்களின் எல்லா நாடகங்களையும் மதிப்பீடு செய்து தம் கருத்தை வெளியிட்டுள்ளார்.

**கபீர் கிரந்தாவளி:** கபீர் காசி மாநகரில் 1399ஆம் ஆண்டில் பிறந்தவர். முகம்மதியர் குடும்பத்தில் வளர்ந்துவந்தார். இராமானந்தர் இவருடைய குரு ஆவார். இவர் ஒரு இல்லறத் துறவி ஆவார். கபீர் கல்விமானாகவும் திகழவில்லை, வாழ்வில் காகிதத்தையோ, மையையோ தொட்டதும் இல்லை. அவருடைய நோக்குகூட இலக்கியம் படைக்க வேண்டுமென்று இருந்ததில்லை. அவரோ தம்முடைய எண்ணங்களையும், கொள்கைகளையும் பிரச்சாரம் செய்வதற்காகவே பதங்களைப் படைத்தார். இக்கருத்து அவருக்கு நாத் சம்பிரதாயத்தின் பரம்பரையிலிருந்து கிடைத்தது. ஏனென்றால், பதங்களின் வாயிலாக மதப்பிரச்சாரம் செய்வது மிக எளிதாக இருந்தது. கபீர் அவர்களின் 64-வது வயதில் அவருடைய சீடர் தர்மதாஸ் என்பவர் அவருடைய பதங்களையெல்லாம் எழுத்து வடிவில் கொண்டுவந்து நூலாகத் தொகுக்க முயன்றார் எனச் சொல்லப்படுகிறது. ஆனால், அந்தக் கைப்பிரதி இன்றுவரை கிடைக்கவில்லை. இன்றுவரை கிட்டத்தட்ட 69 வெவ்வேறு வகைப்பட்ட கபீர் பதங்கள் தொகுக்கப்பெற்ற நூல்கள் கிடைத்துள்ளன. ஆனால், அவையனைத்தும் ஒன்றிற்கு ஒன்று வேறுபட்டும், மாறுபட்டும் சம்பிரதாய முறையில் அமைந்துள்ளன. க்ஷிதிமோகன் சேன் அவர்களால் பதிப்பித்து வெளியிடப்பட்ட நான்கு பாகங்கள் கொண்ட போல்பூர் தொகுப்பு நூல்கூட ஆய்விற்கு ஓரளவு உதவி செய்யக்கூடியதாக இருக்கிறது. இதில் இடம்பெற்ற நூறு பதங்களைக்கூட கவிகுரு இரவீந்திரநாத் டாகூர் அவர்கள் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். ஆனால், இதில் மற்றவர்கள் எழுதிய பதங்களும்கூட கபீரின் பெயரால் அச்சிடப்பட்டிருக்கின்றன. 'பீஜக்' தகுதிவாய்ந்த ஒரு சான்றாதார நூலாகக் கருதப்பட்டாலும்கூட, டாக்டர் பீதாம்பர்தத்த படத்வால் இதனை ஒரு முழு ஆதாரமும் நிறைந்த நூலாக ஏற்கவில்லை. ஏனென்றால், சுவாமி சுகானந்தர் முதலானோர் இயற்றிய பதங்கள் எனக் கருதக்கூடியவையும் இந்நூலில் இடம்பெற்றுள்ளதாகக் கருதுவர். பூரணதாஸ் அவர்கள் மூலம் வெளியிடப்பெற்ற 'பீஜக்' பதிப்புதான் எல்லாவற்றிலும் மிகச்சிறந்த பழைமையான நூலாகக் கருதப்படுகிறது.

கபீரின் பாடல்கள் தம் கொள்கையைப் பிரச்சாரம் செய்வதற்காக எழுதப்பட்டனவாகும். இந்தப் பதங்களின் கருத்துக்களை அவர் தம் காலத்திய சமூகத்தில் பரவியிருந்த பிற சம்பிரதாயக்காரர்கள் செய்த பிரச்சார முறைகளைக் கண்டறிந்து உருவாக்கியவை என நினைக்க இடம் ஏற்படுகிறது. குறிப்பாக நாத்-சம்பிரதாயத்தினரின் ஹடயோகியர்களின் பிரச்சார முறைகளே அதிகம் இவரால் பின்பற்றப்பட்டிருக்கிறது. கபீர் படிக்காதவராக இருந்தாலும்கூட, பதங்களில் இசைத் தத்துவத்தின் முறையைப் பயன்படுத்த அறியாதவராக இருக்கவில்லை. இவருடைய நூலில் இடம்பெற்ற முக்கிய கருத்துக்கள் சமூகத் தொடர்பாகவும் மற்றும் ஆத்ம சாதனைக்குரியதுமாகும். நல்ல சமூகத்தை உருவாக்குவதற்குத் தொடர்பான கருத்துக்களில் இவர் வருணபேதம், வர்க்கபேதம் போன்றவற்றுள் ஆழ்ந்த சிந்தனைக்குரியவை இடம்பெற்றுள்ளன. ஜாதி, மத வேறுபாட்டால் சமூகத்தில் உருவான குறுகிய மனப்பான்மை அதிகமாகப் பரவிவிட்டதைக்கண்டு, அதனை எதிர்த்து குரல் எழுப்பும் நிலையை உருவாக்குவதற்கேற்ற விழிப்புணர்ச்சியைக் கபீர் தம் நூலில் இடம்பெறச் செய்துள்ளார். வெறும் ஐம்புலன்களான பொம்மை மட்டுமே என்பது போல் உருவாகியுள்ளவனை அவர் ஒரு பரந்த உணர்வுள்ள மனிதன் வடிவில்கற்பனை செய்கிறார்.

"இந்து என்று கூறுவயோ, முகம்மதியன் என்று கூறுவயோ
ஐந்து தத்துவப் பொம்மை"

,இத்தகைய பாக்கள் வாயிலாக சமத்துவக் கருத்துக்கள் நன்கு சமூகத்தில் இடம்பெற்று சமூக முன்னேற்றத்திற்கு பெரிதும் துணைநின்றன என்று கூறலாம். சமத்துவநோக்கோடு கபீர் வெளியிட்ட கருத்துக்கள் அவரது நூலில் பரவலாக இடம்பெற்று எல்லோராலும் விரும்பி ஏற்கப்பட்ட கருத்தாக இன்றும் நிலவிவருகிறது. சான்றாக:

"குருநாதன் சீடருக் குபதேசம் செய்தார்
நற்சீடன் நன்கறிந்தான் சமநோக் கினையே;
ஒருஉப தேசத்தால் ஒழிந்தது அங்கே
அறியாமை யோடு அந்த மயக்கமும்;
பெருஞானத் தால்எல்லாம் பரமன் என்றே
சிறுகண் களுக்கங்கே தோன்றிப் பரவியது
உருவும் திருவும் மற்றெதுவும் அங்கே

ஒன்றே என்றே நற்காட்சி நல்கினவே"

சமூகத்தில் சத்தியத்தைப் போற்ற வேண்டுமென்ற வேண்டுகோளை விடுத்த கபீர் சமூகத்தில் இடம்பெற்ற கயவர்களையும் கண்டிக்கத் தவறியதில்லை. அவர்களை வெறுத்து ஒதுக்கித் தூற்றவும் செய்தார்:

"முட்டாள் என்றும் பேசிக் கொண்டே
எதையும் செய்ய விரும்பா திருப்பான்
வெட்ட வெளியில் எப்பொழுதும் காரணமின்றி
கத்திக் கொண்டிருக்கும் நாயது போலவே!"

வஞ்சகத்தையும் ஆடம்பரத்தையும் தீவிரமாக எதிர்த்து சத்தியம் என்னும் சநாதன தர்மத்தின் சிறப்பை அனைவரும் விரும்பி ஏற்குமாறு கபீரின் பாக்கள் வலியுறுத்துகின்றன. ஆடம்பரத்தின் லீலைகள், பயனற்ற வேறுபாடுகள், அழியும் தன்மை கொண்ட மக்களது பேராசை ஆகியவற்றின் தொடர்பான கருத்துக்களைச் கபீர் விரிவான தொலைநோக்கோடு சிந்தித்து வெளியிட்டுள்ளார். இவர் எல்லா நிலையையும் உருவாக்கி விரும்பிய புதிய மாற்றங்கள் பற்றிக்கூறிய எல்லாக் கருத்துக்களும் இன்றைய சமூகத்தின் நல்வளர்ச்சிக்காக இன்றியமையாதவை யேயாகும். அவருடைய எல்லா கருத்துக்களும் படிப்பதற்கு ஏற்ற ஒருவித ஈர்ப்பு சக்தியுடன் நிறைந்து காணப்படுகின்றன. வெளிப்படையான விசித்திரமான நற்கருத்துக்களை, தம் விருப்பம்போல் கூறவிரும்பும் மாமன்னரைப் போல திகழ்ந்திருந்த கபீர் ஆன்ம ஈடேற்றத்திற்குரிய நல்வழிகளைத் தம் அனுபவத்தால் கண்டறிந்த உண்மைகளை நன்கு வெளியிட்டுள்ளார். அவர் ஓரிடத்தில் கீழ்க்கண்டவாறு எழுதியுள்ளார்:

"ஆசை யழிந்தால் அழியும் இடுக்கண்
மாசற்ற வாழ்வு மனிதன் பெறுவான்
யாருக்கு இங்கே எதுவும் வேண்டாமோ
அவரே அரசருக் கரசராய் ஆவாரே!"

கபீர் தம்முடைய வாழ்வில் கண்டறிந்த உண்மைகளைச் சமூகத்தின் நலங்கருதி நீதிப்பாடல்களில் இடந்தோறும் நயம்பட வெளியிட்டிருப்பதைக் காணலாம். அவருடைய சில பாக்கள் யோகியர்க்குரிய தவநெறி முறைகளை எடுத்துக்கூறுகிறது.

''இங்க்லா, பிங்க்லா, சுசும்னா' ஆகிய ஹடயோகம் தொடர்பான பாக்கள் சந்தேகமின்றி யோக சாத்திரத்தின் பெருஞ்செல்வமாகக் கருதப்பட வேண்டியவையாகும். இவர் ஒருசில பதங்களில் பிரம்மத்தை அல்லது எல்லாம் வல்ல பரம்பொருளைக் கணவனாகவும் தன்னை மனைவியாகவும் கருதிப் பாடிய கருத்துக்கள் அனைத்தும் அவருடைய ரகசியவாதத்தின் தனிவடிவாகவே கருதப்பட்டு வருகிறது. சான்றாகக் கீழே ஒரு பாடல் கொடுக்கப்பட்டுள்ளது:

"மந்த மயக்கத்தில் நிறைந்த கண்களே
அன்பரோடு உறங்க மஞ்சம் செல்க!
அங்கே கம்பத்தில் ஆடும் பூச்சியோ
இனிய குரலில் இயம்பிடும் ஒன்றே
மலர்மெத்தை இங்கே விரிக்கப் பட்டுள்ளது.
தலைவி யின்றித் தவித்துக் கொண்டிருக்கிறது.
மஞ்சத்தில் மெதுவாகக் காலை எடுத்துவை.
நாத்தியும் அண்ணியும் அங்கே நடமாடுவர்.
கபீர்நான் சொல்கிறேன்! துறவியே கேளும்!
இந்தச் சூழலில் உங்கட்கு இருக்குமோ?!
உலகப் பற்று! இருக்காது இனிமேலே!
எல்லாம் அழிந்து மறைந்தே போகும்!"

மற்றொருவிதமான படைப்பில் அன்ஹத் நாத் (அதாவது யோகப்பயிற்சியில் ஒன்று. யோக சாத்திரத்தின்படி இப்பயிற்சி பெற்றோர் இருகாதுகளையும் தம் விரல்களால் மூடியபடி தவம் செய்யும்போது காதின் உள்ளே ஒருவித நாதம் கேட்டுக்கொண்டேயிருக்கும். அதனைத்தான் அன்ஹத் நாதம் என்றும் அனாஹத் நாதம் என்றும் அழைத்துவருகின்றனர்.) மற்றும் ஜோதி-பிந்து தொடர்பான கருத்துக்கள் ரகசியவாத முறையில் கூறப்பட்டுள்ளன. இதற்குச் சான்றாக இதனைக் காட்டலாம்:

"அழிவற்ற பிர்ம நாதத்தைக் கேட்டால்
பக்தன் இதயத்தில் அமுதமழை பொழியும்
ஆனந்தம் என்னும் மேகம் சூழும்
அறிவெனும் மின்னல் ஒளிவீசிப் பரவும்
ஆனந்த வெள்ளத்தில் மூழ்கி மகிழ்வான்"

மூன்றாவது விதமாக ஒருவகை ரகஸ்ய பாவம் அவருடைய பதங்களில் காணக்கிடக்கிறது. இப்பகுதியில் பரமாத்மாவின் அருகாமையில் இருக்கும் நற்பேறு பெறும் விதம் பற்றிய கருத்தை நன்கு வெளியிட்டுள்ளார். (ஊமை, வெல்லத்தைச் சாப்பிட்டுவிட்டு

அதன் ருசியைச் சொல்ல இயலாது. அது போன்றது சாமீபம் என்னும் பதவி). ஆகையால் உருவக மொழியில் அதை எடுத்துக்கூறுகிறார். சில சிறப்பு வாய்ந்த சொற்கள், ஆழ்ந்த பொருளோடு உருவகமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளதைக் காணலாம். கபீர் இத்தகைய ரகஸ்ய பாவங்களை ஒருசில இடங்களில் சொற்களில் கட்டுவித்து தம்முடைய ரகஸ்யமான உணர்வுகளை தெய்வத்தொடர்பான பேரின்பத்தோடு கட்டுவித்து வெளிப்படுத்த முயல்வதைக் காணலாம்.

பக்தி உலகின் முப்பெரும் மகாகவிஞர்களாகிய கபீர், ஜாயசி மற்றும் துளசிதாசர் ஆகியோர்தொடர்பான நூல்களைப் பதிப்பிக்கும் பணிகளில் சியாம் சுந்தர் தாஸ் அதிகம் ஈடுபட்டுள்ளார்.இதில் 'கபீர் கிரந்தாவளி' இவருடைய பதிப்பாளர் பணியின் மாண்பை நன்கு எடுத்துக்காட்டக்கூடியதாக இருந்தது. இதுவரை இந்நூல் கிட்டத்தட்ட 14-15 பதிப்புகள் வரை வெளிவந்துவிட்டன. இந்தப்பணி 1930ஆம் ஆண்டு பாபு சியாம்சுந்தர் தாஸ் அவர்களால் தொடங்கப்பட்டது. விக்கிரம ஆண்டு 1561 மற்றும் விக்கிரம ஆண்டு 1881 ஆகிய ஆண்டுகளின் இரு பழைய பிரதிகளை ஆதாரமாகக் கொண்டுதான் இந்தக் 'கபீர் கிரந்தாவளி' நூலினைப் பதிப்பிக்கும் பணியில் ஈடுபட்டார். இந்தத் தொகுப்பு நூலுக்குரிய ஆதார நூலாக அவர் மலூக்தாஸ் அவர்களால் எழுதப்பெற்ற பிரதியையே ஏற்றுக்கொண்டார். இதைத்தவிர இந்த நூலின் பிற்சேர்க்கையில் 'குருகிரந்த் சாஹப்' என்ற நூலில் இடம் பெற்ற கபீர் தோஹாக்களும் பதங்களும்கூட கொடுக்கப்பட்டிருந்தன. இவ்வாறு இந்தக் கையெழுத்துப்பிரதிகளில் கிடைத்த செய்திகளைத் தவிர 192 தோஹாக்களும் 200 பதங்களும் 'குருகிரந்த் சாஹப்' என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டன. கபீர்தாசரின் பெயரால் அன்று வரை கடைகளில் கிடைத்துவந்த பதங்களுக்கும் தோஹாக்களுக்கும் இந்த நூலில் இடம்பெற்ற தோஹாக்களுக்கும் பதங்களுக்கும் பெரிதும் வேறுபாடு இருந்தது. இவற்றில் கபீர் காலத்திய பேச்சுமொழிகளின் வடிவம் கிடைத்திருக்கிறது. பிற நூல்களில் கிடைத்த தோஹா மற்றும் பதங்களை இவர் நன்கு முழுமையாக ஆய்வு செய்துதான் தம் கிரந்தாவளியில் இடம்பெறுமாறு செய்தார். இந்த நூலில் கபீர்தாசரின் இருவகைப்பட்ட படங்களையும் இடம்பெறச் செய்திருந்தார். ஒன்று கல்கத்தா மியூசியத்தில் கிடைத்தது. மற்றொன்று கபீர்சம்பிரதாய மகாத்மா ஹீராநந்த் அவர்களிடமிருந்து பெற்றது. விக்கிரம ஆண்டு 1561இன் கையெழுத்துப் பிரதியின் புகைப்பட நகல்கூட இந்நூலில் இடம் பெற்றிருந்தது. இந்நூலில் 51 பக்கத்திற்கு

மிகச்சிறந்த விரிவான முகவுரையும் கொடுக்கப்பட்டிருந்தது. இம்முகவுரையில் கவிஞரின் பிறப்பு, பக்தத்துறவியாரின் பரம்பரை, இளமைக்காலம், தாய், தந்தை, குரு, சீடர்கள், இல்லற வாழ்வு, அதிசயச் செயல்களின் விபரம் மற்றும் ஆற்றல் ஆகியவற்றின் தொடர்பான கருத்துக்கள் நன்கு ஆய்ந்தறிந்து தேர்ந்தெடுக்கப்பட்டு கொடுக்கப்பட்டிருந்தன. கபீரின் தத்துவக் கருத்துக்களும் நடைமுறைச் சித்தாந்தங்களும் ரகஸ்யவாதமும் நன்கு விளக்கம் பெற்று இடம்பெற்றிருந்தன. கபீரின் காப்பியப் பண்புகள் தொடர்பாக பேராசிரியர் இராமச்சந்திர சுக்லா எந்த வினாவை எழுப்பியிருந்தாரோ அதற்குரிய தமது கருத்தினை இம்முகவுரையில் தெளிவாகக் கொடுத்திருந்தார். அவர் கபீரைத் துறவியாகக் கருதிப் போற்றியதோடு சிறந்த கவிஞராகவும் கருதிவந்தார். ஏனெனில், 'அவர் கருவில் திருவுடையாராகி இயல்பாகவே கவிதைகள் அவருடைய நாவில் நடமாடிக்கொண்டிருந்தன. இதில் யாதொரு சந்தேகமும் எழ இடமில்லை. கபீரின் கவிதைகளில் கவிதைக்குரிய தனித்தன்மைகளைப் பெற்றிருக்கவில்லை என்பது உண்மைதான். இப்படிப்பட்ட சில பதங்களும் இடம்பெற்றுத்தான் உள்ளன. ஆயினும்,கபீரின் உண்மையான காவியத்தன்மை இவற்றால் குறைந்துவிடவில்லை. அவையனைத்தும் மிக உயர்ந்தவைகளாகவே கருதப்படுகின்றன' என்று கூறப்பட்டக் கருத்தை உற்று நோக்குவார்க்கு உண்மை புலப்படும். கபீரின் காவியத்தின் குறைபாடுகளையும் அவர் நன்கு கண்டறிந்து ஆராய்ந்திருந்தார். அவருடைய கோணாங்கித்தன்மை வாய்ந்த, தெளிவாகப் புரிந்துகொள்ள முடியாத மொழிநடைபற்றியும் நன்கு ஆய்ந்து தம் கருத்தை வெளியிட்டிருந்தார். மக்களிடையே பிரபலமடைந்த நிலையின் அடிப்படையில் துளசிதாசருக்குப் பிறகு கபீர்தாஸ்தான் சிறப்பாகக் கருதப்படுகின்றார் என்ற கருத்தையும் இவர் ஏற்றுக்கொண்டிருந்தார். டாக்டர் சியாம்சுந்தர்தாஸ் கபீரை ரகஸ்யவாதக் கவிஞர்களில் மிகச்சிறந்த கவிஞர் எனக் கருதுகிறார். இலக்கியத்தரம் பற்றிக் கூறும்பொழுது அவர் பூஷண் மற்றும் ஜாயசி போன்றோரைப்போல மிகச் சிறந்த கவிஞர் என்றும் குறிப்பிடுகிறார். இத்தொகுப்பு நூலில் மூலப்பாடங்களோடு பாடபேதங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. கபீரின் காவியம் தொடர்பான இந்தத் தொகுப்பு நூல் இந்தி இலக்கிய உலகில் மிகச்சிறந்த உயர்ந்த இடத்தில் வைத்துப் போற்றத்தக்க நூல் ஆகும். இந்நூலுக்குரியமூலாதாரத்தில் ஒருசில குறைபாடுகள் இருப்பினும் கூட, கபீரின் எல்லாப் பதங்களும் பிற செய்திகளும்

முழுமையாக இடம்பெற்ற நூல் இன்றுவரை வேறு எங்கும் வெளியிடப்படவில்லை என்று கூறலாம்.

**சுருக்கமான பத்மாவத்:** மலிக் முகம்மது ஜாயசி இந்திமொழியில் மிகச்சிறந்த போற்றத்தக்க சூஃபி கவிஞர் ஆவார். ஹிஜ்ரி 9ஆம் நூற்றாண்டில் தோன்றியவர். இவர் அழகற்ற தோற்றம் கொண்டவர். அம்மைநோயால் இவருடைய கண் ஒன்று மங்கிக்கொண்டிருந்தது. இவர் தன் அழகற்ற தோற்றத்தைத் தாமே வர்ணித்துள்ளார். தம்மைச் சுக்ராச்சாரியாருடன் ஒப்பிட்டுக் கூறுவர். இவருடைய நூல்களைப்படித்தால், இவர்தம் மதத்திற்குரிய வேதநூலாகிய 'குர்-ஆன்' மீது பெரும் பக்தி கொண்டிருந்தாலும் பிற மதங்களின்மீது வெறுப்பு இருந்ததில்லை எனத் தெரியவரும், இவர் ஹடயோகம், வேதாந்தம், இரசாயனம், சோதிடம், தத்துவம் மற்றும் காவியக் கலை ஆகியவற்றின்மீது விருப்பம் வைத்திருந்தார் எனத் தெரியவருகிறது. இவர் சாதுக்களிடமும் துறவியர்களிடமும் அதிகம் தொடர்பு வைத்துக்கொள்ளாதிருந்தும்கூட சூஃபி மதத்தின்மீது ஈடுபாடு கொண்ட ஒரு பக்கீர் ஆவார். ஜாயசி அவர் காலத்தில் வாழ்ந்த சித்தர்களுள் ஒருவராகக் கருதப்பட்டுப் புகழ்பெற்று விளங்கினார். அக்காலத்திய மக்கள் அவரை மிக உயர்வாகக் கருதிப்போற்றிப் பக்தியுடன் பாராட்டி வந்தனர். இறுதிக்காலத்தில் அவர் அமேதியில் வாழ்ந்துவந்தார் எனக் கூறுவர். அரச குடும்பத்தில் இவருக்கு அதிகம் மரியாதையும் கௌரவமும் இருந்துவந்தது. அமேதியின் அரசர் இவர் இறந்தபிறகு இவரை மங்க்ரா வனத்தில் அடக்கம் செய்து சிறப்பித்தார். இன்றும்கூட அங்குள்ள அவரது சமாதியில் விளக்கு ஏற்றப்பட்டு வருகிறது. இவருடைய இறப்பு 1609ஆம் விக்கிரம ஆண்டு என்று செவிவழிச் செய்தியாகக் கூறுப்பட்டு வருகிறது. காஜி நாசருத்தீன் ஹு¯சைன் இவருடைய இறப்பு ஹிஜ்ரி 949ஆம் ஆண்டு எனக் குறிப்பிடுவர். இவர், சையத் அஷரஃப், ஷேக் முஹைறதீன் ஔலியா ஆகிய இருவர்களையும் தம்முடைய குருமார்கள் எனக் குறிப்பிட்டுள்ளார்.

ஜாயசி இயற்றிய நூல்கள் கிட்டத்தட்ட 21 நூல்கள் எனக் கூறப்பட்டு வந்தாலும், இதுவரை மூன்று நூல்கள் மட்டுமே கிடைத்திருக்கின்றன. அம்மூன்று நூல்களின் பெயர்களாவன:- 'பத்மாவத்', 'அகராவட்' மற்றும் 'ஆகிரிகலாம்' ஆகியவையாகும்.

'பத்மாவத்' என்ற நூல் ஹிஜ்ரி 927ஆம் ஆண்டில் இயற்றப்பட்டதென்பர். ஒருசிலர் 947ஆம் ஆண்டு எனக் கருதுவர். அலாஉல் என்பவரால் 'பத்மாவத்' வங்காள மொழியில்

மொழிபெயர்க்கப்பட்டது. அந்த நூலில் 927ஆம் ஆண்டுதான் ஏற்கப்பட்டுக் குறிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், 'பத்மாவத்' காவியத்தில் ஷேர்ஷா குறிப்பிடப்படுவதால் 947ஆம் ஆண்டு என்பதை ஏற்றால் தான் வரலாற்றுத் தேதிக்குப் பொருத்தமாக அமையும். பேராசிரியர் இராமச்சந்திர சுக்லா காதற்கதைப் பரம்பரையில் இந்த நூல் மிகச்சிறந்த முழுமையான சிறப்புவாய்ந்த நூல் எனப் போற்றிக் குறிப்பிட்டுள்ளார். இந்தப் பிரபந்த காவியம் பாரசீகத்தின் மஸ்நவி மொழிநடையில் எழுதப்பட்டிருந்தாலும் பாரதப் பண்பு முழுமையாக இடம்பெற்றிருப்பதைக் காணமுடிகிறது. அலாவுதீன் காலத்திய சித்தௌட் (சித்தூர்) நாட்டின் மகாராணி பத்மினியை மையமாகக்கொண்டு இக்காப்பியம் இயற்றப்பட்டுள்ளது. 'பத்மாவத்' காப்பியத்தின் கதைச்சுருக்கம் இதுதான். சித்தூர் நாட்டின் ராணா ரத்னசிங், சிங்கள நாட்டின் ராஜகுமாரி பத்மாவதியின் பேரழகு பற்றிக் கேள்விப்பட்டு துறவி வேடம் பூண்டு சிங்கள நாடு செல்கிறான். அவளுடைய பேரழகைக் கண்டு வியப்புற்று விரும்பித் தன் நாட்டிற்குத் தூக்கி வந்துவிடுகிறான். அப்பொழுது தில்லியை ஆண்டுவந்த அலாவுதீன் பத்மாவதியின் பேரழகைப்பற்றிக் கேள்விப்பட்டு அவளைத் தன் வசப்படுத்தும் நோக்கோடு சித்தூருடன் போர்தொடுக்க முற்படுகிறான். போரில் ரத்னசிங் தோற்று கைது செய்யப்படுகிறான். மிகச்சிறந்த வீரர்களாகிய கோரா மற்றும் பாதல் ஆகியயோரின் உதவியோடு பத்மாவதி ராணாவை விடுவித்து விடுகிறாள். மீண்டும் தொடங்கிய போரில் ராணா தேவபாலனைக் கொன்றுவிடுகிறான். ஆனால், ராணாவும் படுகாயம் அடைந்து இறந்துவிடுகிறான். இதற்குள் அலாவுதீன் சித்தூர் நாட்டைக் கைப்பற்றிவிடுகிறான். இதைக் கேள்விப்பட்ட ராணாவின் இருமனைவியர்களாகிய பத்மாவதியும் நாகமதியும் ராணாவுடன் உடன்கட்டை ஏறி அமரராகிவிடுகின்றனர்.

ஜாயசி முழுக் கதையையும் கற்பனையாகவே படைத்துக் காட்டுகிறார். இக்கதையின் அடிப்படையில் ஒரு உருவகம் வெளிப்படுகிறது. இதன் காரணமாக இக்கதை ரஹஸ்யவாதமாக உருப்பெற்று விடுகிறது. இதில் கவிஞர் நாகமதியை உலகமாகவும், பத்மாவதியைப் புத்தியாகவும், அலாவுதீனை மாயையாகவும், சித்தூரை மானுட தேகமாகவும், ரத்னசிங்கை ஆத்மாவாகவும், எந்தக் கிளியின் மூலம் ரத்னசிங் பத்மாவதியின் பேரழகைக் கேட்டு வியந்தானோ, அக்கிளியை குருவாகவும் உருவகப்படுத்திக்

கூறியுள்ளார். 57 காண்டங்களில் கதை முழுவதும் விரிவாக விளக்கப்படுகிறது.

சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் மலிக் முகம்மது ஜாயசியின் 'பத்மாவத்' காப்பியத்தைச் சுருக்கமாக ஒரு சிறு நூலாகப் பதிப்பித்து வெளியிட்டார். ஜாயசியின் வாழ்க்கை வரலாறும், காப்பியத்தின் மாண்பு பற்றிய செய்திகளும் இடம்பெற்ற ஒரு முகவுரையை எழுதி இடம்பெறச் செய்தார். இந்நூல் அக்காலத்தில் மேல்நிலை வகுப்புகளுக்குப் பாடப்புத்தமாக வைக்கும் நோக்கோடு தயாரித்து வெளியிடப்பட்டது.

**ராமசரிதமானஸ்:**துளசிதாசர் இந்திமொழியில் மிகச்சிறந்த பெருங்கவிஞராகத் திகழ்ந்ததோடு உலக இலக்கிய அரங்கில் அவர் நூல் மிக உயர்ந்த இடத்தைப் பெற்று விளங்குகிறது. இவர் 12 நூல்களை இயற்றிருந்தாலும்கூட 'ராமசரித மானஸ்' என்ற ஒரு நூல் மட்டும்தான் பெரிதும் விரும்பி ஏற்றுப் போற்றும் நூலாகத் திகழ்கிறது. உலகில் இதுபோன்ற புகழ்பெற்ற காவியம் வேறு ஒன்றும் இல்லை என்றே கூறலாம். இந்நூல் மக்கள் பாராட்டை மட்டும் பெற்றிருக்கவில்லை. உலக இலக்கியப் பேழையில் இரத்தினமாகத் திகழ்ந்து வருகிறது.

நாகரி பிரச்சாரிணி சபையின் தோற்றத்தோடு 'ராமசரித மானஸ்' நூலும் நன்முறையில் பதிப்பித்து வெளியிடவேண்டுமென சியாம்சுந்தர்தாஸ் நினைத்திருந்தார். சபையின் ஐந்து செயற்குழு உறுப்பினர்களிடம் இந்தக் காரியம் ஒப்படைக்கப்பட்டது. சியாம்சுந்தர்தாஸ் அவர்களைத் தவிர மகாமகோபாத்யாய சுதாகர் துவிவேதி, பாபு ராதாகிருஷ்ணதாஸ், திரு. அமீர்சிங் மற்றும் பாபு கார்த்திக் பிரசாத் ஆகியோர் இப்பதிப்புக் குழுவில் இடம்பெற்றிருந்தனர். 1903ஆம் ஆண்டு பணி சிறப்பாக முடிந்தது. விக்கிரம ஆண்டு 1961இல் வெளியிடப்பட்ட அயோத்யாவில் கிடைத்த ஒரு துறவியின் பாலகாண்ட நூல், ராஜாபூரில் கிடைத்த அயோத்யா காண்ட நூல், காசிமாநகரின் மன்னர் நூலகத்தில் கிடைத்த 1704ஆம் ஆண்டில் அச்சிடப்பட்ட ஒரு நூலும், விக்கிரம ஆண்டு 1729இல் வெளிவந்த ஒரு இராமாயண நூலும், சங்கன்லால் அவர்கள் பதிப்பித்த நூலும், பந்தன் பாடக் மற்றும் காசிமாமன்னர் ஈஸ்வரி பிரசாத் நாராயணன் அவர்களால் அச்சிடப்பட்ட நூலும் இந்தப் பதிப்பிற்கு அடிப்படை ஆதாரமாக இருந்தன. காசி மாமன்னரின் நூலில் இடம்பெற்ற 80 படங்கள் இந்த முதற்பதிப்பில் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டன. இந்நூலைக்கண்டு பெரிதும் பாராட்டி மகிழ்ந்த மக்கள் எதிர்காலத்தில் உரையுடன் இந்த நூலை

வெளியிட வேண்டும் எனக் கேட்டுக்கொண்டனர். அதன்படி 1938 ஆம் ஆண்டு மீண்டும் இந்நூல் தக்க உரையுடன் பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்களின் மேற்பார்வையில் வெளியிடப்பட்டது. இதில் துளசிதாசரின் படமும் இராமாயணம் தொடர்பான படங்களும் மொத்தம் 55 படங்கள் இடம்பெற்றிருந்தன. இது டபுள் டெமி எட்டு பக்க வடிவம் கொண்டதாகக் கிட்டத்தட்ட 1200 பக்கங்கள் கொண்டதாக இருந்தது. நூலின் இறுதியில் இராமாயண தியானம் மற்றும் இராமாயண ஆரத்தியும் அச்சிடப்பட்டிருந்தது. 'இராமசரித மானஸ்' தொடர்பான கதைகளின் விபரப்பட்டியலும் படங்களின் விபரப்பட்டியலும் முறையாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்நூலில் 77 பக்கங்களில் விரிவான ஒரு முகவுரை கொடுக்கப்பட்டிருக்கிறது. இதில் கோஸ்வாமி துளசிதாஸ் அவர்களின் பிறப்பு, வாழ்க்கை வரலாற்றின் மூலாதாரங்கள், பிறந்த நேரம், பிறந்த இடம், ஜாதி, தாய்-தந்தை மற்றும் குரு ஆகியோர்களின் பெயர்கள், கல்வி-தீக்ஷை பெற்ற விபரம், திருமணம், மக்கட்பேறு, துறவு மேற்கொண்ட விபரம், அவர் மேற்கொண்ட பயணங்கள், நண்பர்கள், அறிமுகமானவர்கள், அவருடைய சிறப்புக்கள், இறுதிக்காலம் முதலானவை மிக விரிவாக ஆய்வு நோக்கோடு நன்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. பிறகு இவரால் எழுதப்பெற்ற பிறநூல்களின் விபரங்கள் கொடுக்கப்பட்டு, மானஸ் நூலில் இடம்பெற்ற காண்டத்தின் கதைச்சுருக்கம், யாப்பு வடிவம், காப்பிய மாண்பு போன்ற விபரங்கள் விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளன. இறுதியில் கோஸ்வாமி துளசிதாசரின் இத்தகைய பேராற்றலைப் பெறக் காரணமாக இருந்த விபரங்கள் அனைத்தும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இந்த முகவுரையில் இடம்பெற்ற எல்லா விபரங்களையும் தொகுத்து தனித்து ஒரு நூலாக, 'கோஸ்வாமி துளசிதாசர்' என்ற பெயரில் தனியாக வெளியிட்டனர். இராமசரித மானஸ் நூலில் ஒவ்வொரு பகுதியின் யாப்பு வடிவத்தின் பெயர், பாக்களின் பொருள், அவற்றின் தொடர்பாகக் கூறப்பட்டுவரும் கதைகளும்கூட கொடுக்கப்பட்டிருந்தது. பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் மானஸ் பிரேமிகள் நன்கு முறையாகக் கற்று புரிந்துகொள்ளும் வகையில் நன்முறையில், சிறப்பாகவும் தெளிவாகவும் நன்நடையில் தயாரித்து வெளியிட்டு இவ்வுலகிற்குச் சமர்ப்பித்து பெருமை பெற்றார்.

**சத்சயி சப்தக்:** அவர் பிரயாகையிலுள்ள இந்துஸ்தானி அக்காதெமியிடமிருந்து 'சத்சயிசப்தகம்' என்ற பெயருள்ள நூலினைப் பெற்று பதிப்பாசிரியர் பொறுப்பேற்று வெளியிடச்

செய்தார். இந்திமொழியில் 'பிகாரி சத்சயி' அதிகம் புகழ்பெற்ற ஒரு சிறப்புவாய்ந்த நூலாகக் கருதப்பட்டு வந்தது. இதுபோல பல நூல்கள் இடைக்காலத்தில் புலவர் பெருமக்கள் இந்தியில் தோஹா வடிவில் இத்தகைய சத்சயி நூல்களை மிகுதியாகவே இயற்றியிருந்தனர். அவற்றுள் சில மிகச்சிறந்த பாராட்டுதற்குரியவை. விருந்தர், ரஹீம், இராம் மற்றும் துளசிதாசரின் சத்சயி நூலின் சிறப்பான நிலை 'பிகாரி சத்சயி' நூலோடு எண்ணத்தக்கதாக இருந்தது. ஏழு புகழ்பெற்ற சத்சயி நூல்களை இவர் ஒரு நூலாகத் தொகுத்து பதிப்பித்து வெளியிட்டார். இக்கவிஞர்கள் அறிமுகமும் சுருக்கமாக இந்த நூலில் கொடுக்கப்பட்டது. 'சத்சயி' காவிய மரபுத் தொடர்பான கருத்துக்களும் சிறப்பாக நூலின் முகவுரையில் இடம்பெறுமாறு செய்தார். இந்த நூல் தமக்கென்ற தனிச்சிறப்பைப் பெற்று விளங்கிற்று. ஒரு நூலில் 7 சத்சயி நூல்களைத் தொகுத்துக் கொடுத்து கற்பார்க்குப் பேருதவியாக விளங்குமாறும் எல்லாச் செய்திகளும் ஒன்றாகக் கிடைக்குமாறும் பதிப்பாசிரியர் செய்திருந்தார்.

**அசோகரின் கல்வெட்டுகள்:** இந்திமொழியின் பழைமை வாய்ந்த காவியங்களையும் தற்கால இலக்கியங்களையும் வெளியிட்டதோடு அவர்தம் எழுத்தாற்றலை தொல்பொருள் தொடர்பானவற்றிலும் வெளிப்படுத்த முயலலானார். அசோகரின் கல்வெட்டுகள் கிட்டத்தட்ட 2500 ஆண்டுகளுக்கு முந்தையது. அதில் பாரதநாட்டின் நிலைமை, ஆட்சிமுறை, நாட்டினை விஸ்தரிக்கும் நிலை, மதச்சிந்தனைகள், சமூக வாழ்வு மற்றும் அக்காலத்திய மொழி பற்றிய எல்லாச் செய்திகளும் இடம்பெற்றிருந்தன. அசோகரின் பெரும்புகழ், அவர் காலத்திய வரலாறு போன்றவை அவருடைய மதக்கல்வெட்டுகளில் காணக்கிடந்தன. அதுவரை அசோகரின் கல்வெட்டுகள் கிட்டத்தட்ட 136 தொடர்பான கருத்துகள் தெரியவந்திருந்தன. அவற்றை முறைப்படுத்தி இந்த நூலில் இவர் சிறப்புவாய்ந்த கல்வெட்டுக்கள், பிற கல்வெட்டுக்கள், முக்கிய கற்றூண் கருத்துக்கள், பிற கற்றூண் கருத்துக்கள் மற்றும் குகைக் கல்வெட்டுக்கள் என வகுத்து அச்சிட்டிருந்தார். இவற்றில் தர்ம லிபிகள் பயன்படுத்தப்பட்டிருந்தன. இவை எங்கெங்கு கிடைத்தனவோ, அந்த இடங்களைப் பற்றிய செய்திகளையும் கொடுத்திருந்தார். கொடுத்திருந்த கருத்துக்களைக்கூட முறையாக ஆராய்ந்து வெளியிடும் முயற்சியையும் மேற்கொண்டிருந்தார். இவற்றின் இந்தி மொழிபெயர்ப்பும் கொடுக்கப்பட்டிருந்தது. இப்பணியை இவர் ராய்பகதூர் கௌரிசங்கர் ஹீராசந்த் ஓஜா

அவர்களின் உதவியோடு சிறப்பாகச் செய்து முடித்தார். பண்டிட் சந்திரதர் சர்மா குலேரி அவர்களிடம் முதலில் இப்பணி ஒப்படைக்கப்பட்டிருந்தது. ஆனால், அவர் திடீரென்று அமரர் ஆனதால் அப்பணி டாக்டர். ஓஜா அவர்களின் உதவியோடு தாமே முன்நின்று செய்து முடித்தார். 1913ஆம் ஆண்டு டபுள் டெமி எட்டு பக்க அளவு வடிவில் சிறந்த முறையில் 'அசோகரின் கல்வெட்டுக்கள்' நூல் வடிவில் வெளியிடப்பட்டது. ஆனால், அது ஒரு பாகம் மட்டும்தான் வெளிவந்தது. இருப்பினும்கூட மிக முக்கியமான சிறப்புவாய்ந்த எல்லாக் கல்வெட்டுகளும் அதில் இடம்பெறுமாறு செய்திருந்தனர்.

பழைய பாரதத்தின் வரலாற்றினை ஆய்வு செய்வார்க்கு இந்த நூல் பெரிதும் பயன்பட்டு வந்தது. பிறகு இதன் தொடர்பான பிற கல்வெட்டுகளும் சமீபத்தில் இந்தியில் முழுமையாக வெளியிடப்பட்டது. இந்த நூல் மிக உயர்ந்த இடத்தைப்பெற்று விளங்கியதோடு வரலாற்று மகத்துவம் பெற்றும் விளங்கி வருகிறது. அக்காலத்தில் இத்தகைய பணிகளால் இந்தியின் கௌரவம் ஓங்கி வளர்ந்தது எனலாம்.

**பாலர் மற்றும் மங்கையர் இலக்கியம்:** பாபு சியாம்சுந்தர்தாஸ் இத்தகைய இலக்கியங்கள் மற்றும் வரலாறு தொடர்பான நூல்களை வெளியிட்டதோடு நில்லாமல் பாலர் இலக்கியங்களையும், மங்கையர் இலக்கியங்களையும் வெளியிட கவனம் செலுத்தினார். 'பால-விநோதம்' என்ற குழந்தைகள் பத்திரிக்கையின் ஆசிரியர் பொறுப்பையும் கவனித்துவந்தார். பெண் கல்வி தொடர்பாக 'வனிதை-விநோதம்' என்ற பெயரில் ஒரு நூலினை 1906ஆம் ஆண்டு பதிப்பித்து வெளியிட்டார். ராஜா பின்கா அவர்கள் இந்த நூலுக்குரிய அமைப்பினை உருவாக்கித் தந்தார். இதில் மொத்தம் 16 கட்டுரைகள் இடம்பெற்றிந்தன. இக்கட்டுரைகளை எழுதியோர் பலர் ஆவர். அவர்களுள் மிக முக்கியமானோர் - டாகுர் கதாதர்சிங், பண்டிட் சியாம் பிகாரி மிஸ்ரா, பாபு மாதவ பிரசாதி, பண்டிட் சுகதேவ் பிகாரி மிஸ்ரா, பி.ஏ., ஒரு வங்கப்பெண் (ஸ்ரீமதி ராஜேந்திரபாலா கோஷ்). பண்டித் காளிசங்கரி வியாஸ், லாலா தேவராஜ், பாபு மகேந்துலால் கர்க், பாபு கோபால்தாஸ் மற்றும் பாபு காளிதாஸ் ஆகியோர் ஆகும். இதில் இடம்பெற்ற கட்டுரைகளின் தலைப்புக்களாவன: ஆன்ம மறதியும் பதிபக்தியும், குரோதமும் அமைதியும், தைரியமும் சாகசமும், கல்வியின் பயன், பிறரைப் புரிந்துகொள்ளும் பண்பு, பாலர் விவாகம், பலதார மணம், மனம் மகிழுமாறு செய்யும் உபாயம், சங்கீதமும் ஊசியின்

பணியும், உடல்நலம் பேணுதல், உடற்பயிற்சி, கர்ப்பத்தைக் காத்தல் மற்றும் குழந்தை வளர்ப்பு, பூதங்களையும் பிசாசுகளையும் கண்டு பயப்படுவதால் ஏற்படும் தொல்லைகள், இல்லற சர்ச்சை, பொய்கள், காக்காய் பிடிப்பவர்களிடமிருந்தும் தொண்டர்களின் தீய நடத்தையிலிருந்தும் காத்துக்கொள்ளல் முதலியவையாகும். இவ்வாறு பெண்களின் தற்கால வாழ்க்கைத் தொடர்பாகச் சம்பந்தப்பட்ட காலத்தில் தேவைக்கேற்ப போற்றப்படவேண்டிய நெறிமுறைகள் பற்றிய கருத்துக்கள் இந்நூலில் வெளியிடப்பட்டு பெண்களின் முன்னேற்றத்திற்காக நல்ல இலக்கியங்களை வெளியிடும் முயற்சி இந்த நூலின் வாயிலாகத் தொடங்கப்பட்டது. பெண்கல்விக்குரிய பிரச்சாரத்திற்கென இந்தி எழுத்தாளர்கள் ஒன்றுகூடி முதன்முதலாக பயனுள்ள நல்ல சமூக நோக்கோடு பெண்ணுலகிற்குச் செய்யப்பட்ட ஒன்றாகும். இந்நூலில் இடம்பெற்ற கட்டுரைகளின் ஆசிரியர்கள் யார் யார் எனத் தனிப்பட்ட முறையில் குறிப்பிட்டுக் காட்டப்படாத முறையாலேயே இதன் தனிச்சிறப்பு நன்கு வெளிப்படலாயிற்று. இதன் தொடர்பாக சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் குறிப்பிட்ட கருத்து இதுவேயாகும்: 'இப்பெயர்கள் தனித்தனி எழுத்தாளர்களோடு கொடுக்கப்படாததற்கு சில காரணங்கள் உண்டு. முதலில் இந்தக் கட்டுரைகளை எழுத்தாளர்களின் பெயரோடு இணைத்துப்பார்த்து விமர்சிக்கக்கூடாது. ஆனால், ஒவ்வொரு கட்டுரையிலும் எழுதப்பெற்ற கருத்துக்கள் அத்தலைப்பின் அடிப்படையில் நன்கு ஆய்ந்து அறியப்படவேண்டும். மேலும், சில கட்டுரைகளை ஒருசில எழுத்தாளர்கள் கூடி இருந்து சிந்தித்து எழுதிய கட்டுரைகளாகும். கட்டுரையோடு எல்லா எழுத்தாளர்களையும் ஒரே இடத்தில் இடம்பெறச்செய்து எல்லோரும் அதற்குரிய பொறுப்பாளர்கள் எனக் குறிப்பிடுவதும் நியாயமானதன்று. எனவேதான் ஆசிரியர்களைத் தனித்தனியாகக் குறிப்பிடவில்லை.' கூறப்பட்ட கருத்துக்களின் அடிப்படையில் ஒட்டுமொத்தமாகப் பொறுப்பேற்கும் முறை முதன்முதலாக இந்த நூலின் கட்டுரைகளின் வாயிலாகத்தான் அறிமுகம் செய்யப்பட்டது. இது ஒரு கன்னி முயற்சி. இந்நூலின் மொழிநடைகூட எளிதாகவும், தெளிவாகவும் இருந்தது. 16 பாயிண்ட் எழுத்துக்களால் அச்சிடப்பட்டிருந்தது கிட்டத்தட்ட 325 பக்கங்களைக் கொண்டிருந்தது. பெண்களின் கல்வி நிலையங்களில் இது மிகச்சிறந்த வரலாற்றுப் பெருமையை உருவாக்கி சிறப்பித்தது எனலாம். இந்நூலில் கொடுக்கப்பட்ட எல்லாக் கருத்துக்களும்

இன்றும்கூட பெண்களின் வாழ்விற்குப் பெரிதும் பயன்படக்கூடிய சிறந்த கருத்துக்களாகும்.

இவர் மூலம் பதிப்பிக்கப்பட்ட எல்லா நூல்களையும் ஆய்வார்க்கு இலக்கியத்தில் பழம்பெரும் ராசோ கிரந்தங்கள், பக்தி காலத்தைச் சார்ந்த துளசிதாசரின் நூலும், கபீர் மற்றும் ஜாயசி போன்ற பெரும்புலவர்களின் நூல்களும், இதே காலத்தைச் சார்ந்த தீனதயாள்கிரி போன்ற சிறந்த கவிஞர்களின் நூல்களும், பாரதேந்து போன்ற சிறந்த நாடக ஆசிரியரின் நாடகாவளியும் வெளியிடப்பட்டிருப்பதைக் கண்டறியலாம். மேலும், ராஜா லட்சுமண சிங், இன்சா அல்லாகான் மற்றும் சதல் மிஸ்ரா ஆகியோர் எழுதிய நூல்களையும் பதிப்பித்து இந்தி இலக்கியத்தை மிக விரிந்த ஒன்றாக உருவாக்கும் நற்பணியை அவர் செய்தார். ஒருபுறத்தில் இலக்கிய நூல்களை வெளியிட்டு ஒளிபெறச் செய்ததுபோல மற்றொரு புறத்தில் 'அசோகரின் கல்வெட்டுகள்' மற்றும் 'சத்ரபிரகாஷ்' போன்ற நூல்களை வெளியிட்டு வரலாற்றிற்குத் தக்க சான்றுகளுடன் கூடிய பல கருத்துக்களை விரிவாக வெளியிட்டுவந்தார். இந்தி இலக்கியங்களைத் தேடும் பணிகளைப் பற்றிய விரிவான அறிக்கைகளை வெளியிட்டு, பல நூல்கள் வெளிவருமாறு செய்து, மிக விரிந்த இந்தி இலக்கியத்தை மக்களுக்கு அறிமுகம் செய்துவைத்தார். மற்றொரு புறத்தில் 'இந்தி சொற்களஞ்சியம்' (இந்தி சப்த சாகர்) வெளியிட்டு, அதன் வாயிலாக சொற்களுக்குரிய சரியான பொருளை அறிந்துகொள்ளுமாறு செய்தார். இந்தியின் அறிவியல் அகராதி வாயிலாக இந்தியில் பேரிலக்கியக் கட்டுரைகள் எழுதுவதற்குரிய வழிமுறைகளை உருவாக்கித் தந்தார். அக்காலத்தில் கிட்டத்தட்ட *10,000* பக்கங்கள் கொண்ட ஒரு நூலைப் பதிப்பிக்கும் பெரும்பொறுப்பை ஏற்று, நன்கு பயன்படுமாறு வெளியிட்டு ஒன்றுமே இல்லாதிருந்த இந்திமொழியை எல்லாச் செல்வங்களையும் பெற்று பெருமைபெறுமாறு செய்தார். இந்தி இலக்கியத்தைப் பொறுத்தமட்டிலும் அவருடைய மாண்பின் சிறப்பு வெளிப்பட்டாலும் கூட, இந்திமொழியை ஞான மற்றும் விஞ்ஞான மொழியாக உருவாக்குவதற்கு அவர் செய்த எல்லாப் பணிகளும் அவர் மிகச்சிறந்த ஒரு நிர்வாகி என்பதையும், சிறந்த சாதனையாளர் என்பதையும் உறுதிசெய்ய போதுமானவை எனத் துணிந்து கூறலாம்.

## சொந்தப்படைப்புகள் :

**இலக்கியத்திறனாய்வு:** அவர் பல இலக்கிய நூல்களைப் புதிதாக எழுதியும் வெளியிட்டுள்ளார். அவற்றுள் மிகச்சிறந்ததாய்

போற்றப்பட்ட நூல்தான் இந்த இலக்கியத் திறனாய்வு என்னும் 'சாகித்யாலோசன்' என்னும் நூல். இந்நூல் முதன்முதலாக 1922ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. இலக்கியத்தின் பல்வகைப் பிரிவுகளின் தொடர்பான ஆய்வினையும், கற்பிப்பதையும் இவர் எம். ஏ. வகுப்பில் முதன்முதலாக தொடங்கிவைத்தார். ஆனால், இந்திமொழியில் இதன் தொடர்பான நற்கருத்துக்கள் நிறைந்த ஒரு நூலும் அன்றுவரை யாராலும் எழுதப்படவில்லை. அதுவரை மேற்படிப்புக்கு உதவும் பொருட்டு இத்தகைய நூல் யாராலும் எழுதப்படவில்லை. அன்று வரை போற்றப்பட்டுவந்த இலக்கியம் தொடர்பான சாத்திரங்கள் அனைத்தும் இந்தியமரபை ஒட்டி எழுதப்பட்டிருந்தாலும்கூட தற்கால இலக்கியங்களை மதிப்பிட்டு ஆய்வு செய்வதற்கு அந்த நூல்கள் தகுதியுடையனவாக இல்லை. மேற்கத்திய நாட்டில் போற்றிவந்த பல புதிய துறைகளைப் பின்பற்றி புதிய இலக்கியங்கள் எழுதப்பட்டு ஆய்வு செய்வதற்கு அந்த நூல்கள் தகுதியுடையனவாக இல்லை. மேற்கு நாடுகளில் தோன்றிய பல புதிய துறைகளில் நூல்கள் எழுதப்பட்டன. இந்நோக்கில் மேற்கத்திய காவிய சாஸ்திரம் உன்னத நிலையில் இருந்தது. திறனாய்வுத்துறையில் அன்று போற்றப்பட்ட நெறிமுறைகள் அனைத்தும் மேற்கத்திய இலக்கியத் திறனாய்வுநெறிமுறைகளை ஒட்டியதாக இருந்தாலும் கூட கிழக்கத்திய இலக்கியத் திறனாய்வு நெறிமுறைகளும் இதற்கு ஓரளவு துணையாக நின்றுவந்தன. பாடப்புத்தகத்திற்கு ஏற்ப எழுதப்படும் எந்த நூலும் இலக்கியத் தரம்வாய்ந்தவையல்ல என ஒதுக்கிவிட முடியாது. அறிவின் தரமும் தனித்தன்மையும் எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் போற்றப்பட்டுப் பாராட்டு பெறும் என்பது உண்மைச் செய்தியானது. இந்நோக்கில் 'சாகித்யாலோசன்' என்ற இலக்கியத் திறனாய்வு நூல் பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்களால் வழங்கப்பெற்ற ஈடு இணையற்ற வரப்பிரசாதமாகும். இந்நூல் இன்றுவரை கிட்டத்தட்ட 18 பதிப்புகள் வெளிவந்துவிட்டன. அவர் 1942ஆம் ஆண்டு இந்நூலினை நன்கு திருத்தி வெளியிட்டார். இந்நூலில் கலை, இலக்கியம், காவியம், உரைநடை இலக்கியம், மெய்ப்பாடு மற்றும் மொழிநடை தொடர்பான திறனாய்வு நெறிமுறைகள் விரிவான எளிய இனிய முறையில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. இது அக்காலத்தில் மிகச்சிறந்த புதிய முறையில் எடுத்துக்கூறப்பட்ட முதற்முயற்சியாகும். முதன்முதலாக வெளியிட்ட ஆண்டு வரை மேற்கத்திய நாட்டில் வெளிவந்த திறனாய்வு நூல்களின் கருத்துக்களும் இந்திய இலக்கியத் திறனாய்வு நூல்களின் கருத்துக்களும் இந்நூல் வெளிவர தக்கத் துணையாக நின்றன.

உண்மையான நற்கருத்துக்களை ஒன்றுதிரட்டி ஒரு புதிய படைப்பாக வெளியிடும் பேராற்றல் ஒரு ஆசிரியருக்கு மிகச்சிறப்பாக அமைந்த நுண்மாண் நுழைபுலத்திறனை இந்த நூலில் நாம் சிறப்பாகக் கண்டறியமுடிகிறது. இதில் இந்தி இலக்கியச் சாத்திரத்தில் கூறப்பட்ட குறியீட்டுச் சொற்களுக்குரிய சமமான சொற்களும் கொடுக்கப்பட்டிருந்தன. டாக்டர் சியாம்சுந்தர்தாஸ் இலக்கியச் சாத்திரத்தின் குறியீட்டுச் சொற்களை இந்திமொழியில் தக்கவாறு எடுத்துக்கூறி - புரியவைக்கும் முயற்சியில் நன்கு வெற்றிபெற்றிருந்தார் எனச் சொல்லலாம். இறுதியில் வடமொழி மற்றும் இந்தி மற்றும் ஆங்கில நூல்களின் ஒரு பட்டியலும், அகரவரிசையும் கொடுத்திருந்தார். அவை அனைத்தும் இந்த நூலில் கூறப்பட்ட நற்கருத்துக்களுக்கு அடிப்படை ஆதாரங்களாக இருந்தவை என்றும், அவை இந்தத்திறனாய்வு நூலுக்குப் பெரிதும் துணைநின்றவை என்றும் சுட்டிக்காட்டப்பட்டன.

ஒருசிலர் இந்த நூல் ஒரு புதிய படைப்பு என்று கூறுவதைக் காட்டிலும் பல நூல்களை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்ட ஒரு நூல் என்று கூறிவந்தனர். இந்த உண்மையை சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் தாமே ஏற்றுக்கொண்ட ஒன்றுதான். மேற்கண்ட குறையைக் கூறி வருவார் ஓர் உண்மையை மறந்துவிட்டனர். எந்த ஒரு திறனாய்வு நூலாக இருப்பினும், அது தான் கூறவேண்டிய கருத்தைக் கூறி விளக்க முற்படும்போது அதனோடு தொடர்புடைய பல நூல்களின் கருத்துக்களையும் எடுத்துக்கூறித் தம் கருத்தை நிலைநாட்டவே முயலும் என்பதை யாவரும் அறிவர். அதுதான் உண்மையான ஒரு திறனாய்வு நூலாகக் கருதப்படும். அக்கொள்கைக்கேற்ப இவரும் இந்தநூலில் பிற நூல்களின் கருத்துக்களைச் சான்றாதாரமாக எடுத்துக்கூறி விளக்கியுள்ளார் என்பது மறந்துவிடக்கூடாது. திறனாய்வு செய்தல் என்பது வேறு திறனாய்வுக் கருத்துக்களை ஒன்றுதிரட்டிக் கூறுவது என்பது வேறு. இதன் தொடர்பான கருத்தை சியாம்சுந்தர்தாஸ் அவர்களே இந்நூலில் வெளியிட்டுள்ளார்:

'இந்த நூல் கடந்த 20 ஆண்டுகளாக மாணவர்களுக்குப் பேருதவி புரிந்துவருகிறது. மேலும், இன்றுவரை இது எல்லோராலும் விரும்பிப் போற்றப்பட்டு வருகிறது. இந்தக்கருத்து எனக்கு மகிழ்ச்சியை மட்டும் அன்று கௌரவத்தையும் தரக்கூடிய ஒன்று என்றாலும்கூட இந்த நூலின் கருத்துக்களை ஆதாரமாகக் கொண்டு புதிய கருத்துக்களை வெளியிட யாரும் முன்வரவில்லையே என்று நினைக்கும்பொழுது பெரும்

வேதனையாக இருக்கிறது. இந்த நூலை ஆயிரக்கணக்கான மாணவர்கள் ஆழ்ந்து கற்று முடித்தாலும்கூட ஒருவர்கூட இதனினும் சிறந்த புதிய கருத்துக்களை வெளிக்கொணர முயலாது போய்விட்டனர். இதனால், 'இனிமேலும் எழுதவேண்டிய கருத்துக்கள் ஒன்றும் இல்லை என்று கருதவேண்டியிருக்கிறது' என்று கூறுவது கர்வப்பேச்சாகிவிடும். இந்திமொழியில் இலக்கியத் திறனாய்வு நாள்தோறும் வளர்ந்துகொண்டே வருகிறது. இதற்கேற்ப தகுதிவாய்ந்த மாணவர் இந்தி இலக்கியத்தில் இடம்பெற்ற ஒவ்வொரு வகையையும் வடிவையும் தனித்தனியாக எடுத்து ஆய்ந்து புதிய கருத்துக்களைத் தனி நூல்களாக வெளியிட முயன்றால் இந்தி இலக்கியக் கருவூலம் முழுமையாக நிறைந்து சிறக்கப் பேருதவியாக இருக்கும்'.

எது எப்படி இருப்பினும், ஒருசில குறைகள் இருப்பினும்கூட, 'சாகித்யாலோசன்' என்னும் இந்தித் திறனாய்வு நூல் அத்துறைக்குரிய ஒரு ஆதார நூலாகவும், மிகச் சிறந்த திறனாய்வு நூலாகவும் திகழ்ந்து வருகிறது என உறுதியாகக் கூறலாம். இதில் இருவேறுபட்ட கருத்து இருக்க இடமில்லை. இந்தியில், இந்தி இலக்கியத்திற்கென எழுதப்பட்ட முதல் திறனாய்வு நூல் இதுவேயாகும். மேலும், இது எந்தச் சூழலில், ஆண்டுகளில் எழுதப்பட்டதெனக் கண்டறிய முற்படுவோமானால் இதன் பெருமையும் பயனும் நன்கு புலனாகும். ஆப்ரகாம் ஜார்ஜ் கிரியர்சன் போன்ற மேதைகள் இத்தகைய சிறப்புத்தன்மைகளைக் கண்டே இந்நூலை மிகச்சிறந்ததாய்ப் போற்றிப் பாராட்டினர்.

**பாஷா விஞ்ஞான், பாஷா ரகஸ்யம்:** 'சாகித்யாலோசன்' நூல் வெளியிட்ட பிறகு *14* மாதங்கள் கழித்து *1924*ஆம் ஆண்டில் 'பாஷா விஞ்ஞான்' என்னும் மொழிநூல் ஒன்றினை எழுதி வெளியிட்டார். இந்நூல்கூட உயர்கல்விக்குரிய இந்திமொழித் தொடர்பான நூல் எதுவும் இல்லாத காரணத்தால் எழுதப்பட்டு வெளியிடப்பட்டது. பண்டிட் சந்திரதர் சர்மா குலேரி அவர்கள் இப்பணியைச் செய்து முடிக்கவேண்டுமென உறுதி எடுத்துக்கொண்டிருந்தார். ஆனால், திடீரென அவர் இறைவன் மலரடியைச் சேர நேரிட்டது. வேறு சிலரும்கூட இத்துறையில் முயன்றும்கூட இப்புதிய கருத்தினை முன்வைத்து நூல் எழுத எவரும் தயாராக இல்லை. இத்துறை புதியதாகவும் மிகக்கடினமானதாகவும் இருந்ததால் மாணவர்களும் இதற்கேற்ற நூல் இன்றிப் பெரிதும் துன்பப்பட்டுவந்தனர். பிற பாடங்களுக்குரிய நல்ல புத்தகங்கள் கிடைத்துவந்தன. இந்தியில் இத்தகைய புதிய துறையைச் சார்ந்த நூல்கள் தக்க சமயத்தில்

வெளிவராவிடில் மாணவர்கள் இத்துறையை விரும்பாது பிற துறைகளுக்குச் சென்றுவிடக்கூடும் என்ற பயம் இருந்து வந்தது. இதனால் உலகந் தழுவிய நிலையில் இந்தியின் தொடர்பான கருத்துக்களும் பரவுவதற்கும் தடை ஏற்படலாம். இத்தகைய சூழ்நிலையில் இத்துறைக்குத் தக்க அடிக்கல் நாட்டும் பெரும்பணியைச் சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் செய்யவேண்டிய நிலை ஏற்பட்டது. இந்த நூலுக்குரிய கருத்துக்களை பண்டார்கர், மாக்ஸ்முல்லர், கிரியர்சன், ஹார்லி, பீம்ஸ், கேலாக், குணே, தேவதியா, ஹேமசந்திரன், லக்ஷ்மிதர், புளும்ஃபீல்டு, ஸ்வீட், லகோடே முதலிய பேரறிஞர்களின் நூல்களிலிருந்து தேர்ந்தெடுத்துக்கொண்டார். இவ்வாறு முயன்று இந்நூலை எழுதும்போது மொழியியலுக்குத் தேவையான அடிப்படைக் கொள்கைகளை மிக எளியமுறையில் எடுத்துக்கூறவேண்டுமென்ற நோக்கோடு நன்முறையில் முயன்று எழுதினார். இதனால் பாரதநாட்டின் பழம்பெரும் மொழிகளின் குறிப்பாக ஆரிய மொழிகளின் தொடர்பான மொழியியற் கருத்துக்களை இந்திமொழியோடு இணைத்து விரிவாக விளக்கமுடியும் என எண்ணினார்.

மொழியியல் என்பது ஒரு கடினமான விஷயமாகும். இதனை எளிதாக்க அவர் பெரும் முயற்சி செய்தார். இந்நூலில் ஒருசில இடங்களில் கூறியது கூறல் என்னும் குற்றம் வெளிப்படினும் கருத்துக்கள் நன்முறையில் விளக்கம் பெற்றுள்ளன. 1938ஆம் ஆண்டு அவர் இந்நூலை மறுபதிப்பாக வெளியிட்டபோது முதற்பதிப்பில் இருந்த எல்லாக் குறைகளையும் நிவர்த்தி செய்து நன்முறையில் திருந்திய பதிப்பாக வெளியிட்டார். முதற்பதிப்பில் சியாம்சுந்தர்தாஸ் அவர்களுக்கே மனநிறைவு ஏற்படவில்லை. இக்குறையைப் போக்கவே இவர் 'பாஷா ரஹஸ்யம்' (மொழி இரகசியம்) என்றொரு புதிய நூலை எழுதி வெளியிட விரும்பினார். சியாம்சுந்தர்தாஸ் 'பாஷா விஞ்ஞான்' நூலில் நல்ல திருத்தங்களையும் விரிவான முறையில் செய்தார். இதில் வடிவம். பொருள் பற்றிய கருத்துக்கள்கூட கொடுக்கப்பட்டிருந்தன. மொழியியலின் துணையைக்கொண்டு தொன்மைக் காலத்தின் மொழி பற்றி எவ்வாறு ஆய்வு செய்யமுடியும் என்பதையும் நன்கு எடுத்துக்கூறியுள்ளார். இவ்வாறு கூறவேண்டிய எல்லாக் கருத்துக்களையும் இந்த 2ஆம் பதிப்பில் விடாமல் விரிவாக எடுத்துக்கூறியிருந்தார். மேலும் இவர் மூன்றாம் பதிப்பில்கூட சில திருத்தங்களையும், மாற்றங்களையும் செய்ததோடு எழுத்துக்கலை பற்றியும், நாகரி லிபியின் வளர்ச்சி பற்றிய வரலாற்றுச் செய்திகளையும் எடுத்துக்கூறியிருந்தார்.

மொழியியல் தொடர்பான அடிப்படைக் கருத்துக்களையும் பிற சாத்திரங்களோடு இதற்கு இருந்த உறவுகளையும், மொழியியலின் வரலாற்றினையும், மொழி மற்றும் மொழிதல், மொழிகளின் வகைப்பாடுகள், ஒலியியல், வடிவவியல், பொருளியல், பாரதநாட்டின் எழுத்துக்களின் வளர்ச்சி முதலானவற்றை ஏழு இயல்களாகப் பகுத்து நன்முறையில் அமைத்து வெளியிட்டார். பிற்சேர்க்கையில் இந்திமொழியின் உயிர் எழுத்துக்களையும் மெய்யெழுத்துக்களையும் மொழியியற் கருத்தின் அடிப்படையில் விளக்கம் தந்திருந்தார். தொடக்கத்தில் மொழியியலில் பயன்படுத்தப்பெறும் ஆக்கச்சொற்களைக் கொடுத்து அவற்றிற்குச் சமமான இந்திச் சொற்களையும் கொடுத்திருந்தார். இத்துடன் பொருளடக்கமும் கொடுக்கப்பட்டிருந்தது. அவரைப் பொறுத்தவரையில் இது ஒரு கன்னி முயற்சியாக இருந்தாலும்கூட இதன் சிறப்பால் கல்வித்துறையில் பல ஆண்டுகள் வரை இதை மிக உயர்வாகக் கருதிப் போற்றிவந்தனர். அந்தக்காலத்தில் மொழியியல் தொடர்பாக இந்திமொழியில் எழுதப்பட்ட ஒரு விரிவான நூலாக இது கருதப்பட்டது. இந்நூல் வரலாற்றுச் சிறப்புமிக்கதாகத் திகழ்ந்தது.

மொழியியல் துறையில் அவருடைய மாணவராகத் திகழ்ந்த ஸ்ரீ பத்மநாராயண ஆச்சார்ய அவர்களின் உதவியோடு எழுதப்பெற்ற நூல்தான் 'பாஷா ரஹஸ்யம்' என்ற பெயரில் மூன்று பாகமாக விரிந்த ஒரு பெருநூல் வடிவில் தயாரிக்கப்பட்டு முதல் பாகம் முதலில் வெளியிடப்பட்டது. இதில் மொழியியல் கருத்துக்கள், மொழியும் மொழிதலும், மொழியின் வடிவமைப்பு வகைப்பாடுகள், மொழிக்குடும்பத்தின் வகைப்பாடுகள், இந்திய மொழிகள், ஒலியும் - ஒலியின் சாரமும் தொடர்பான கருத்துக்களும், பிற்சேர்க்கையில் புதிய எழுத்து வடிவங்களும், கருத்துக்களைத் தக்க ஆதாரத்துடன் நிரூபணம் செய்யும் பழைய மரபு, ஒலியின் வரிவடிவு, மொழியியலின் சொற்களஞ்சியம், துணைநூற்பட்டியல், பொருளடக்கம் ஆகிய அனைத்தும் இடம்பெற்றிருந்தன. மொழியியல் போன்ற மிகச்சிறந்த விரிவான ஒரு கலைத்துறையைப் பற்றிய அறிவியல் கருத்துக்களின் அறிமுகம் இந்திமொழியில் வெளிவரவேண்டுமென்ற நோக்கில்தான் இந்த நூல் எழுதப்பெற்று வெளியிடப்பட்டது. அந்தச் சமயத்தில் மொழியியல் தொடர்பாகக் கற்பிக்கப்பட்ட துறையில் வெளிநாட்டு மொழிகள்தான் உதாரணமாகச் சொல்லப்பட்டு வந்ததால் பயிற்சிபெற்ற மாணவர்கட்கு அஃது புரிவதிலும், சுவையாக மற்றும் அறிவியல் முறையாக இருப்பதிலும் பல குறைபாடுகள் இருந்தன. ஆகையால், இந்த நூலில் உதாரணங்கள்

சமஸ்கிருதம், பிராகிருதம் மற்றும் இந்திமொழிகளிலேயே கொடுக்கப்பட வேண்டும் என்ற உறுதியுடன் எழுதப்பட்டது. இதனால் இந்திய மாணவர்கட்கு இந்திய ஆரிய மொழிகளைப் பற்றி அறிந்துகொள்ளும் வாய்ப்பு ஏற்பட்டதெனலாம். இந்தப் புத்தகத்தின் வாயிலாக ஒரு விரிவான சொல்லகராதி இந்திமொழிக்குக் கிடைத்தது என்று சொல்லலாம். இது ஒரு அரிய காரியமாக கருதப்பட்டது. இது முழுமை பெற்றவுடன் இத்துறையில் ஒரு மிகப்பெரிய சான்றாதாரமாகத் திகழ்ந்துவரும் சிறப்பைப் பெற்றது.

மொழியியல் தொடர்பாக எழுதப்பெற்ற இந்த இருநூல்களும் மாணவர்களுக்கு நன்கு பயன்பட்டு வந்தது. சாதாரணமாக நூல் படிக்கும் மக்களுக்கும், புலவர் பெருமக்கட்கும்கூட மிகச்சிறந்த மகத்தான நூலாகத் திகழத்தொடங்கியது. இது இந்திமொழிக்குப் புத்தம்புதியதாக இருந்தாலும்கூட இந்திய இலக்கியத் துறைக்கு பாபு சியாம்சுந்தர் தாஸ் உருவாக்கிக்கொடுத்த பயனுள்ள தமக்குரிய தனித்தன்மை கொண்டு விளங்கிய புதிய துறையாகத் திகழத்தொடங்கியது. ஒருசிலர் இந்த நூல் மொழியியல் கருத்தின் தொடக்க நிலையை மட்டும் எடுத்துக்கூறும் நூலாக மட்டும் கருதலாமே ஒழிய பாராட்டத்தக்க கருத்துக்கள் அதிகம் இல்லை என்று குறை கூறி வந்தனர். இத்தகையோர் நூல் படைக்கப்பட்ட நாடு, காலம், சமூகம் முதலியவற்றை மறந்துவிட்டு இப்படித் தம் விருப்பம்போல் விமர்சனம் செய்துவந்தனர். மொழித்துறையில் 2ஆம் உலகப் போருக்குப் பிறகு எழுந்த விரிவான ஆய்வு, கொள்கை மற்றும் கோட்பாடுகள் மேற்கத்திய இலக்கியத்தில் உருவானவற்றை முன்வைத்து அவற்றோடு இவற்றை ஒப்பிட்டுப் பார்த்து தம் மனம்போல முடிவு கூறுவதென்பது நடைமுறைக்கு ஒவ்வாததொன்றாகும். இதனை வரலாற்று நோக்கில் மதிப்பீடு செய்து இதன் தராதரத்தைக் கண்டறிய முயலவேண்டும். அப்பொழுதுதான் இந்த நூல் அந்தச் சமயத்தில் இந்திமொழியில் உருவான ஈடு இணையற்ற ஒன்று எனப் புலப்படும்.

**கட்டுரைத் தொகுப்பு:** கத்ய குசுமாவளி என்ற பெயரில் பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் 1911 ஆம் ஆண்டு முதல் 1924 வரை எழுதிய எட்டு கட்டுரைகளின் தொகுப்பு ஒரு நூலாக வெளிவந்தது. இதில் கவின் கலைகளும் காவியமும் (1922), கவிதையின் மதிப்பீடு (1922), நடையின் மாண்பு (1923), மொழியும் மொழிதலும் (1923), இந்தி மொழியின் வளர்ச்சி (1924), சமூகமும் இலக்கியமும் (1915). சந்த்பர்தாயி (1911).

கோஸ்வாமி துளசிதாஸ் (1924) ஆகிய இந்த எட்டுக் கட்டுரைகளும் அதில் இடம்பெற்றுள்ளன. உண்மையில் இது ஒரு புதிய புத்தகம் அன்று! பல சமயங்களில் (அவ்வப்பொழுது) எழுதிய புத்தகங்களில் இடம்பெற்ற ஒருசில கருத்துக்களின் தொடர்பாக எழுதிய கட்டுரைகளே இவ்வாறு தொகுத்து வெளியிடப்பட்டது. இதன் முதல் மூன்று இயல் சாகித்யாலோசன் என்ற நூலிலிருந்தும், நான்காம், ஐந்தாம் இயல்கள் மொழியியல் என்ற நூலிலிருந்தும், இந்தி சாகித்ய சம்மேளன் 1915இல் நடைபெற்றபோது, அதன் தலைவராக இருந்து ஆற்றிய தலைமைச் சொற்பொழிவுதான் ஆறாவதாகவும் இடம்பெற்றுள்ளது. பிருதிவிராஜ் ராசோவின் நூலிலிருந்து ஏழாவது கட்டுரையும், துளசிதாசரின் கிரந்தாவளி மூன்றாவது பாகத்திலிருந்து எட்டாவது கட்டுரையும் எடுத்துக் கொடுக்கப்பட்டுள்ளது. முதல் மூன்று இயல்களும் இலக்கியங்கள் தொடர்பான கட்டுரைகள் ஆகும். இரண்டு மொழியியல் தொடர்பானவை. இலக்கியப் பயன் தொடர்பான கருத்துக்கள் ஆறாவது கட்டுரையிலும், ஏழாவது, எட்டாவது கட்டுரைகள் இந்திமொழியின் மிகப்பெரும் புலவர்கள் தொடர்பானவையும் ஆகும். இவையனைத்தும் இவருடைய எழுத்தாற்றலுக்குப் பெருமை சேர்க்கும் மிகச்சிறந்த கட்டுரைகள் ஆகும். இந்நூலில் ஹீராலால் அவர்களின் முகவுரை சிறந்த கருத்துக்கள் நிறைந்தவையாகவும், பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்களின் வாழ்க்கை வரலாறும் இடம்பெற்றுள்ளன. பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்களின் மொழிநடையில் ஒரு தனிச்சிறப்பு இருந்தது. இவர்தம் கவனம் முழுவதையும் கூறப்படும் கருத்துக்களைத் தெளிவாகக் கூறவேண்டும் என்பதில் அதிகம் செலுத்தியிருந்ததால் இலக்கியம் தொடர்பான அடிப்படைக் கருத்துக்கள் கற்பார்க்கு மிகத் தெளிவாகப் புரிந்துகொள்ள முடிந்தது. இதனடிப்படையில் இவரை ஒருபுறம் இலக்கியத்தின் சூத்ரதாரி என்றும் மற்றொருபுறம் மிகச்சிறந்த திறனாய்வாளர் என்றும் கூறலாம். இலக்கியம் சமூகத்தின் நல்லறிவை வளர்க்கவும், சிறந்த ஆக்கப்பூர்வமான செயல்களில் ஈடுபடத் தூண்டவும் துணைநிற்க வேண்டுமென்ற கருத்தை முழுமையாக ஏற்றுப் போற்றினார். மக்களின் மனத்தின் ஆவேச உணர்வுகளைத் தூய்மைப்படுத்தி மிகச்சிறந்த சஞ்சீவி மருந்துபோல பயன்பட்டு, பண்பாட்டினையும், அறிவையும் நன்முறையில் வளர்க்க வழி வகுக்கும் இலக்கியங்களே உருவாக்கப்பட வேண்டுமென்ற கருத்தினைக் கொண்டவர். இப்பணிகூட தூய்மையாகவும், எளிதாகவும், நன்மொழியுடனும் அமைய வேண்டும். இவர் மானுடத்தை இலக்கியத் திறனாய்வில் மையமாகக் கொண்டு

ஆய்வு செய்யவேண்டுமென்ற கருத்தை அதிகம் விரும்பியவராகத் திகழ்ந்தார். உண்மையான இலக்கியம் என்பது மக்களிடையே புதிய உணர்வுகளை நன்கு வளர்க்கும் ஆற்றலைப் பெற்று, வாழ்வின் பல நிலைகளை முறையாக எடுத்துக்காட்டும் ஆற்றலையும் பெற்றதாகத் திகழ வேண்டும் என்பதே அவர்தம் கருத்தாகும். ஆகையால்தான் அவர் இக்காலத்தில் இந்தியில் பாணரும், தண்டியும் வேண்டாம், வால்மீகி, வியாசர், பர்க், கால்ஹிட், ரஸ்கின் ஆகியோர் எழுத்தாளர்களுக்கு முன்னுதாரண மாக அமையட்டும் என விரும்பினார். இக்கட்டுரைத் தொகுப்பு 1925இல் வெளியிடப்பட்டது.

**இந்திமொழியும் இலக்கியமும் :** பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் 'இந்திமொழியும் இலக்கியமும்' என்ற பெயரில் இந்திமொழியின் வரலாற்றையும் அதன் இலக்கிய வரலாற்றினையும் விரிவாக எழுதி 1930 ஆம் ஆண்டு முதற்பதிப்பினை வெளியிட்டார். இந்திமொழியின் வரலாறு இதற்கு முன்பே எழுதப்பட்டுவிட்டது. ஆனால், இந்தி இலக்கிய வரலாறு அன்றுவரை அவரால் எழுதமுடியவில்லை. இந்திமொழியின் வரலாறு முதன்முதலாகக் கிரியர்சன் பயன்படுத்திய அடிப்படையைக் கொண்டு மகாவீர்பிரசாத் துவிவேதியால் தயாரிக்கப்பட்டது. பண்டிட் இராம்நரேஷ் திரிபாடி அவர்களும் ஒரு வரலாறு எழுதினார். அது மொழி வரலாற்றுடன் இலக்கிய வரலாறும் கலந்து ஒரு கலப்பட நூலாக அமைந்திருந்தது. 'இந்தி மொழியும் இலக்கியமும்' என்ற இந்த நூலில் இதற்குமுன் வெளியிட்ட 'பாஷா விஞ்ஞான்' என்ற நூலின் கடைசி இயல்தான் முதற்பகுதியாக இந்தி மொழியின் வரலாறு என்ற பெயரில் இடம்பெற்றிருந்தது. இப்பகுதி மட்டும் ஒரு தனி நூலாகவும் வெளியிடப்பட்டிருந்தது. இஃது ஒருசில மாற்றங்களுடனும் திருத்தத்துடனும் 'இந்தி சப்தசாகர்' என்ற இந்திப் பேரகராதியின் முகவுரையில் முதற்பகுதியாக இடம்பெற்றிருந்தது. அப்பகுதியைச் சுருக்கியும் ஒருசில மாற்றம் செய்தும் ஒரு கட்டுரையாக இந்தப் புத்தகத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதில் மொழி மற்றும் இலக்கியம் ஆகிய இரண்டின் வளர்ச்சி பற்றிய விளக்கம் தனித்தனியாக இடம் பெறுமாறு முயற்சி செய்யப்பட்டிருக்கிறது. இந்தி இலக்கிய வரலாற்றுத் துறையில் 'சிவசிங்சரோஜ்' என்ற நூல் முதல் முயற்சியாக சிவசிங் சேங்கர் அவர்களால் எழுதப்பட்டு வெளியிடப்பட்டது. இம்முயற்சி பாராட்டுதற்குரியதாகக் கருதப்படினும் செய்திகளின் தொகுப்பு நூலாகத்தான் அமைந்திருந்தது. இதை அடிப்படையாகக் கொண்டு ஜார்ஜ்

அபிரகாம் கிரியர்சன் அவர்கள் ஆங்கிலத்தில் ஒரு இலக்கிய வரலாற்று நூலை எழுதி வெளியிட்டார். இதில் புலவர்கள் பற்றிய ஆய்வுக் கருத்துக்களும்கூட ஓரளவிற்கு இடம்பெற்றிருந்தது. 'மிஸ்ரபந்துவிநோத்' என்ற நூல் மிஸ்ரபந்து சகோதரர்களால் தம் கருத்துக்களையும் சபையின் மூலம் ஆய்வு செய்து சேகரித்து வைத்திருந்த ஒருசில மூலாதாரங்களைக் கொண்டும் எழுதப்பட்ட நூல் ஆகும். அவர்கள் இந்நூலை அதிகம் முயன்று எழுதி வெளியிட்டிருந்தாலும்கூட, உண்மையிலேயே இது ஒரு வரலாற்று நூலாக அமையவில்லை. செய்திகளைத் தொகுத்துக் கூறும் நூலாக அமைந்திருந்தது. இலக்கியத்தைப் பாராட்டிக் கூறும் கட்டுரைகளாக இருந்தன. ஆயினும்கூட ஒருசில இலக்கிய வரலாற்று நூலுக்குரிய சிறப்பமைப்பை ஒருசில இடங்களில் காணமுடிந்தது. இதனை அடிப்படையாகக் கொண்டு மாஸ்டர் கீ என்பவர் ஆங்கிலத்தில் ஒரு இந்தி இலக்கிய வரலாற்றை எழுதி வெளியிட்டார். மிஸ்டர் கிரிப்ஸ் என்பவர்கூட இந்தி இலக்கியங்களை அறிமுகப்படுத்தும் நோக்கோடு ஒரு சிறிய நூலைத் தனிப்பட்ட முறையில் எழுதி வெளியிட்டார். இதன் பிறகு பேராசிரியர் இராமச்சந்திர சுக்லா அவர்களின் இந்தி இலக்கிய வரலாறு தக்க சான்றர்தாரங்களுடன் வெளிவந்தது. இஃது முதலில் 'இந்தி சப்த சாகரம்' என்னும் 'இந்திப் பேரகராதி' நூலின் முகவுரை வடிவில் வெளியிடப்பட்டு, பிறகு தக்க திருத்தங்களுடனும் மாற்றங்களுடனும் 'இந்தி இலக்கிய வரலாறு' என்ற பெயரில் தனி நூலாக வெளியிடப்பட்டது. இருந்தும்கூட சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் தம் தனித்த பார்வையில் கண்டறிந்த செய்திகளைத் தொகுத்து ஒரு தனி நூலாக அதன்பிறகு வெளியிட்டார். இவர் ஒவ்வொரு காலத்தின் சிறப்புக்களை முறையாக வெளியிட்டு, இலக்கிய வளர்ச்சி மாற்றங்களை முறையாக அறிவியல் நெறிமுறையில் எடுத்துக்கூறி, அவற்றின் மாண்புகளைத் தக்க வழியில் காலத்தின் சிறப்போடு இணைத்துக்கூறி விளக்கந் தந்திருந்தார். புலவர்களின் படைப்புக்களைத் தனித்தனியாக ஆய்வு செய்து அதன் அடிப்படையில் கருத்துக்களை வெளியிடவேண்டும் என்பது அவரது நோக்காக அமைந்திருக்கவில்லை. அவர் புலவர்களின் உள்ளத்துணர்வுகள், கருத்துக்கள் மற்றும் பழக்கவழக்கங்களின் வளர்ச்சி மாற்றங்கள் பற்றிய வரலாற்றை இந்த நூலில் நன்கு வெளியிட்டிருந்தார். இந்த வரலாற்றுக் கட்டுரைகளில் அவர் காலத்தின் தாக்கம், நாட்டு நிலைமை, பண்பாடு, அரசியல் நிலை, கலைச்சிறப்பு, சமூகநிலை போன்றவற்றை இலக்கியத்தில் இணைத்துக் கூறும் முயற்சியில் ஈடுபட்டார். இவ்வாறு வரலாற்று

நெறிமுறையில் இந்தி இலக்கிய வரலாற்றை முறைப்படுத்திக் கூறும் முயற்சியில் ஈடுபட்டு நன்கு வெளியிட்டுள்ளார் என்று கூறலாம். மொழியின் வெளிப்பாடு தொடர்பான எண்ணங்களையும் திரிசொல்லின் சிறப்பான தனித்தன்மைகளையும் இன்னபிறவற்றை வெளிப்படுத்தும் * நோக்கோடு இலக்கியம் இவற்றின் துணையோடு எவ்வாறு தோன்றி வளர்ச்சி பெறுகிறது என்பதையும் இணைத்துக் கூறும் நோக்கோடுதான் மொழி வரலாற்றினையும் இலக்கிய வரலாற்றினையும் இணைத்துக்கூற முயன்றார். இவையிரண்டும் தனித்தனியாக இருப்பினுங்கூட ஒன்று மற்றொன்றோடு பின்னிப்பிணைந்து கிடப்பது; தனித்துப் பிரிக்க இயலாதது. இந்த வரலாற்று நூலுக்கு இத்தகைய பெருஞ்சிறப்பு இயல்பாகவே அமைந்துவிட்டது. இந்த வரலாற்று நூல் கிட்டத்தட்ட 40 படங்களுடன் வெளியிடப்பட்டிருந்தது. 'இந்தி இலக்கியம்', 'இந்தி மொழியின் வளர்ச்சி' ஆகிய இரண்டும்தான் இந்த நூலின் சிறப்புப் பொருள்களாக இடம்பெற்றிருந்தன. இவை பிறகு தனித்தனியாக வெளியிடப்பட்ட பொழுதும்கூட பல்வகை சிறப்பம்சங்களின் காரணமாக இந்தி இலக்கியத்திற்கு அதிகம் ஆதரவு மக்களிடையே கிடைக்கலாயிற்று. உண்மையாகவே பாபு சியாம்சுந்தர் தாஸ் அவர்கள் 'இந்திமொழியும் இலக்கியமும்', 'இலக்கியத் திறனாய்வு' மற்றும் 'மொழி நூல்' ஆகியவற்றை எழுதி மொழிச்சாத்திரம் மற்றும் இலக்கியத்தின் மாண்பை இந்தியில் வெளிப்படுத்த உருவாக்கிய திரிவேணி சங்கமம் என்றே கூறவேண்டும். இம்மூன்று நூல்களும் ஒன்றோடொன்று பெருந்தொடர்பு கொண்டவை என்பது வெளிப்படை.

**ரூபக ரகஸ்யம்** : டாக்டர் சியாம்சுந்தர் தாஸ் அவர்கள் இலக்கியத்தின் எல்லாப் பிரிவுகளின் தொடர்பான சாத்திர நூல்களையும் தனித்தனியாக தக்க முறையில் மற்றும் பல அறிஞர்களும் எழுத வேண்டுமென விரும்பினார். ஆனால், மக்களின் கவனம் அதன்மீது அதிகம் செல்லவில்லை. அவர் 'ரூபக ரகஸ்யம்' என்ற நூலை 1931ஆம் ஆண்டு வெளியிட்டார். இந்நூலில் இந்திய நாட்டிய சாத்திரத்தின் பல்விதமான தத்துவங்கள் மற்றும் இலக்கணங்கள் தொடர்பான விளக்கங்கள் இடம்பெற்றிருந்தன. 'நாகரி பிரச்சாரிணி பத்திரிக்கை'யில் 1922ஆம் ஆண்டு டாக்டர் சியாம்சுந்தர் தாஸ் அவர்கள் எழுதிய நாட்டிய சாத்திரம் தொடர்பான கட்டுரை ஒன்றினை அரைகுறையாக வெளியிட்டிருந்தனர். டாக்டர் சியாம்சுந்தர் தாஸ் அவர்கள் காசிமாநகர் இந்து பல்கலைக்கழகத்தில் இதன் தொடர்பான பாடங்களைக் கற்பித்து வந்தார். இதற்கென எல்லாச் செய்திகளையும் முறையாகத் தொகுத்து வைத்திருந்தாரே தவிர

அவற்றை நூல் வடிவில் தயாரிக்க முடியவில்லை. டாக்டர் பீதாம்பர் தத்த படத்வால் இக்குறிப்புக்களை சியாம்சுந்தர்தாஸின் ஆலோசனை பெற்று மெருகேற்றினார். நாடகம் தொடர்பான அரிச்சந்திரர் கட்டுரையும் பண்டிட் மகாவீர் பிரசாத் துவிவேதி அவர்கள் எழுதிய ஒரு கட்டுரையும்தான் இந்நூலின் முதற்பகுதியில் இடம்பெற்றிருந்தன. இதன்பிறகே பிற கருத்துக்கள் இடம்பெறலாயின. இந்திய நாட்டிய சாத்திரத்தின் தத்துவங்களை விளக்கிக் கூறவே இந்த நூல் எழுதப்பட்டது. சமஸ்கிருதத்தில் எழுதப்பட்டிருந்த நாட்டிய சாத்திரங்கள் அனைத்தும் நாட்டிய இலக்கிய உலகில் தம் சிறப்பின் காரணமாகத் தனிப்புகழ் பெற்று விளங்கியதோடு எல்லாக் கருத்துக்களையும் முழுமையாகப் பெற்றிருந்தன. இந்த நூல் தனஞ்சயன் எழுதிய 'தசரூபகம்' என்ற நூலை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டிருந்தாலும்கூட, பரதமுனிவரின் 'நாட்டிய சாத்திரம்', 'சாகித்ய தர்ப்பணம்' மற்றும் 'இரசார்ணவ சுதாகர்' போன்ற நூல்களின் கருத்துக்களும் சான்றாகத் தரப்பட்டிருந்தன. தேவையான இடத்தில் கருத்துக்களை நன்கு விளக்கும் பொருட்டு மூலநூல்களின் கருத்துக்களை அப்படியே இடம்பெறச் செய்திருந்தார். உதாரணங்கள் சமஸ்கிருதத்திற்குப் பதிலாக இந்தி இலக்கியங்களே கொடுக்கப்பட்டிருந்தன. இந்நூல் வரலாற்றுச் சிறப்புடையது. இவ்விஷயம் பற்றி இந்தியில் இதுதான் அதிகாரப் பூர்வமான முதல்நூல். இந்நூலில் மொத்தம் ஒன்பது இயல்கள் உள்ளன. 'ரூபகத்தின் வளர்ச்சி' என்ற இயலில் உலகில் ரூபகம் மற்றும் நாடகம் எப்படி வளர்ச்சி பெற்றன என்று காட்டப்பட்டுள்ளது. 2வது இயலில் 'ரூபக அறிமுகம்' இடம்பெற்றிருந்தது. மூன்றாவது இயலில் 'கதைக்கரு விளக்கம்' இடம்பெற்றிருந்தது. நான்காவது இயலில் 'மாந்தர்களின் பயன்பாடு' தொடர்பான கருத்தும், ஐந்தாவது இயலில், உணர்வுகள் பற்றிய கருத்துக்களும் ' விரிவாக இடம்பெற்றிருந்தன. ஆறாவது இயலில், 'ரூபகத்தின் படைப்பு' என்ற கருத்தும், ஏழாவது இயலில் 'ரூபகமும் உபரூபகமும்' என்ற கருத்தும், எட்டாவது இயலில், 'இரகசியம்' என்ற கருத்தும், ஒன்பதாவது இயலில், 'இந்திய நாட்டிய அரங்கங்களும் கலையரங்கங்களும்' என்ற கருத்துக்களும் விரிவாக இடம்பெற்றிருந்தன. இந்நூல் இன்றும்கூடத் தம் துறை தொடர்பான மிகச்சிறந்த சான்றாதார நூலாகக் கருதப்பட்டுப் பாராட்டப்பட்டு வருகிறது.

**என் வாழ்க்கை வரலாறு** : டாக்டர் சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் தம் வாழ்க்கை வரலாற்றினை 'சரஸ்வதி' பத்திரிக்கையில் தொடர்ச்சியாக எழுதிவந்தார். பிறகுதான் அதை 1941ஆம் ஆண்டு

'என் வாழ்க்கை வரலாறு' என்ற பெயரில் ஒரு நூலாக வெளியிட்டார். இந்நூல் மட்டும்தான் மிகச்சிறந்த தரம் வாய்ந்த படைப்பிலக்கிய நூலாகத் திகழ்கிறது. தன் வரலாற்று நூல் வரிசையில் இஃது மிக உன்னத நிலையைப் பெற்று விளங்குகிறது. அவருடைய இந்த வாழ்க்கை வரலாற்றின் ஒவ்வொரு பக்கமும் தற்கால இந்தி இலக்கிய வரலற்றின் ஒரு சிறந்த அங்கமாகத் திகழ்ந்து வருகிறது. அவர் இந்நூலில் யாதொரு அச்சமுமின்றிக் கூறவேண்டிய கருத்துக்களைத் துணிந்து எளிய நடையில் எடுத்துக் கூறியுள்ளதைக் காணலாம். அவர் தம் வாழ்க்கைப் பாதையில் கடக்க வேண்டிய முட்புதர்களைக் கண்டு என்றும் அஞ்சி ஒதுங்கியதில்லை. அவற்றைத் தம் திறமையால் மெல்லிய மலர்களாக மாற்றி எளிதாகக் கடந்து வெற்றி பெற்றார் எனக் கூறலாம்.

ஒவ்வொரு நூலையும் படைக்க முயன்ற பொழுதெல்லாம் இவர் சந்தித்த தொல்லைகளும் துன்பங்களும் எண்ணிறந்தன. அவற்றை அச்சமின்றி எதிர்த்து மோதி முன்னேறியதால் அவையனைத்தும் தூள் தூளாகி மண்ணோடு மண்ணாகி மறைந்தன. இத்தகைய பேராற்றலுக்கு எல்லாம்வல்ல இறைவனின் கருணையே முதற்காரணமாகத் திகழ்ந்திருந்தது. அந்த இறைவனே இவருக்குத் தேவைப்பட்ட ஆற்றலை வழங்கி, சரியான நற்பாதையையும் காட்டிவந்தான். இந்நோக்கில் பார்த்தால் இவருக்கு இறைவனின் திருவருள் சற்று அதிகமாகவே கிடைத்தது எனக் கூறலாம். வாழ்வில் தோன்றிய மேடு பள்ளங்களைக் கண்டு தளர்ந்து துன்பப்பட்டதுண்டு. ஆனால் அவற்றை ஒரு தோல்வியாக அவர் ஏற்றுக்கொண்டதில்லை. என்றும் அதன் காரணமாகத் தம் கொள்கைகளிலிருந்து பின்வாங்கிச் சென்றதுமில்லை. எதைச் செய்ய உறுதிபூண்டாலும் தக்கவாறு துணிந்து அதைச் செய்து முடித்து முன்னேறிய வண்ணம் இருந்தார். இவர் இவ்வாறு செய்ததால், அவருக்கென யாதொரு இலாபம் தோன்றாவிடினுங்கூட வாழ்விலும் மொழியிலும் என்றும் வெற்றி நாதம் கேட்கச் செய்வதில் தோல்வியடைந்ததே இல்லை. ஒருபுறம் இந்நூல் இவருடன் தொடர்பு கொண்டிருந்த நபர்கள், அவர்களது திறமை மற்றும் பலவீனம் பற்றிக் கூறிய ஆய்வாகவும், மறுபுறம் அவர்வாழ்ந்த யுகத்தின் தன்மையை நமக்குக் காட்டும் தூய முயற்சியாகவும் விளங்குகிறது.

ஒருசிலர் இவருடைய நூல்கள் அனைத்தும் புதிய படைப்பாக இருந்ததில்லை எனக் குறை கூறிவந்ததும் உண்டு. சிறப்பாக, 'திறனாய்வு இலக்கியம்' போன்ற நூல்களின்

தொடர்பாக இக்குறையை மிகுதியாக எடுத்துக்கூறி வந்தனர் எனலாம். இவைகள் சமஸ்கிருதம் மற்றும் ஆங்கில இலக்கியங்கள் தொடர்பாக எழுதப்பட்டிருந்த சாத்திர நூல்களை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பெற்ற நூல்களே என்று கூறிவந்தனர். மேலும், சாத்திரங்களின் அடிப்படையில் தம் சித்தாந்தங்களை வெளிப்படுத்தி நிலைநாட்ட முயன்றபோது ஒரே நிலையை உருவாக்க முடியாமல் போனதுண்டு என்று மற்றொருபுறம் குறைகூறி வந்தவர்களும் உண்டு. பல இடங்களில் மேற்கத்திய மற்றும் கிழக்கத்திய இலக்கியக் கோட்பாடுகளைத் தனித்தனியாக இடம் பெறச்செய்திருந்தார். இவற்றையும் சுட்டிக்காட்டிக் குறை கூறியோர் காலத்தின் தேவையையும், நூலின் பயனையும் மறந்து கூறிவந்தனர். அவருடைய எல்லா நூல்களும் உயர்கல்விக்குரிய பாடதிட்டத்தைச் சார்ந்தவையாகும். இதன் தொடர்பாக அன்றுவரை இந்திமொழியில் ஒரு நூலும் யாராலும் எழுதப்படவில்லை. இக்குறையைப் போக்கவே அவர் அறிவியல் அடிப்படையில் இந்த இலக்கியத் திறனாய்வு நூலினை எழுதி வெளியிட்டார். அக்காலத்தில் கிழக்கத்திய வழிமுறையிலோ, நெறிமுறையிலோ மட்டும் எந்த நூலும் எழுதப்பட்டு வெளியிடப்பட்டதுமில்லை; பழைய குருகுல முறையில் எந்தப் பள்ளிக்கூடமும் நடைபெற்றதுமில்லை. ஆனால், ஒருபுறம் இலக்கியங்கள் புதிய துறையில் வளர்ச்சிப் பெற்று வந்தவண்ணம் இருந்ததோடு, மற்றொருபுறம் மேற்கத்திய கல்வி முறையால் தோன்றிய பல்கலைக்கழகங்கள் புதிய பாடங்கள் கற்பிக்கும் நெறிமுறையைப் பின்பற்றி வளர்ந்து கொண்டிருந்தன. பழைய காலத்தில் போற்றிவந்த மரபுகளுடன் விரும்பி ஏற்ற புதிய மரபுகளையும் இணைத்து நன்முறையில் அறிவுபூர்வமாக ஏற்று போற்றிவந்தார். இந்த நூல்கள் அவர்தம் ஆழ்ந்த புலமைகளை எடுத்துக்காட்ட எழுதப்பட்டவை அன்று; முதுகலை வகுப்பிற்கு நன்கு உதவும்பொருட்டு எழுதப்பெற்றவையாகும். மாணவர்கள் எந்த அளவிற்கு அறிந்தால் போதுமோ அந்த அளவிற்கு இந்த நூல்கள் கருத்துக்களை வழங்கும் நோக்கில் எழுதப்பட்டிருந்தன. இந்த நூல்களில் பாடத்திட்டங்கள் தொடர்பான கருத்துக்கள் எழுதப்பட்டதோடு மட்டுமன்றி, பல்கலைக் கழகங்களில் முறையாகச் சிறந்த ஆசிரியர்களால் நன்கு புரியும்படி நடத்தப்பட்டும் வந்தன. அந்த அளவிற்கு அவர் புதிய கருத்துக்களை நன்கு எழுதியிருந்தார். ஒவ்வொரு நூலிலும் கூறப்பட்ட கருத்துக்களோடு தொடர்புடைய கருத்துக்களை அடிக்குறிப்பில் முறையாகக் கொடுத்துவிட்டதால் இதனினும் ஆழமான கருத்துக்களை அவரால் எவ்வாறு எழுதி வெளியிட

முடியும். பிறகு இத்தகைய நூல்கள் பல வேறுசில பேராசிரியர்கள் மூலம் எழுதப்பட்டு வெளிவந்திருந்தாலும்கூட இவர் எழுதிய இந்த நூல் பெற்ற சிறப்பை வேறு எதுவும் பெறவில்லை என்றே கூறவேண்டியிருக்கிறது. இவர் எந்த நூல்களை ஆதாரமாகக்கொண்டு எழுதித் தம் நூலை வெளியிட்டாரோ, அந்த நூல்கள் கூட அவருடைய நூலின் இடத்தை எட்ட முடியவில்லை. சான்றாக ஒன்றினை எடுத்துக்கூறலாம். 'ஆன் இன்ட்ரோடக்ஷன் டு தி ஸ்டடி ஆஃப் லிட்ரெச்சர்' மற்றும் 'ஜட்ஜ்மெண்ட் இன் லிட்ரெச்சர்' ஆகிய நூல்களை ஆதாரமாகக் கொண்டுதான் இந்த 'இலக்கியத் திறனாய்வு' நூல் எழுதப்பட்டது. ஆனால், இந்த நூலைப்போல் வேறு எந்த நூலும் அமையவில்லை. மேலும், அந்த இரு ஆங்கில நூல்களையும்விட அதிகமான பதிப்புகளாக இந்த இந்தி இலக்கியத் திறனாய்வு நூல் விற்பனையாகியுள்ளது. இதுவே இவரது இந்த நூலின் சிறப்பிற்குத் தகுந்த சான்றாகும். எனவே, இவர் ஒரு வரலாற்று சிறப்புமிக்க மாபெரும் பேராசிரியராக விளங்கியதோடு, மிகச்சிறந்த திறனாய்வாளராகவும் திகழ்ந்திருந்தார். அதுமட்டுமன்று; பல இந்திமொழிப் பேராசிரியர்களும் திறனாய்வாளர்களும் தோன்றக் காரணமாகத் திகழ்ந்தவர் எனலாம்.



## 7. வலம் வருதல்

19ஆம் நூற்றாண்டில் தோன்றிய பேரறிஞர்களுள் பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்கள், பாரதேந்து மூலம் போடப்பட்ட அடிக்கல்மீது, இந்திமொழிக்குரிய மிகச்சிறந்த மாளிகையை நன்கு எழுப்பிச் சிறப்படையச் செய்தார். நாட்டின் வளர்ச்சி மாற்றத்தில் காங்கிரஸ் கட்சிக்கு எத்தகைய பெருமை இருந்ததோ; சமுதாய முன்னேற்றத்தில் ஆர்ய சமாஜத்திற்கு எத்தகைய பெருமை இருந்ததோ; அத்தகைய பெருமை இந்திமொழியின் முன்னேற்றத்தில் நாகரி பிரச்சாரிணி சபைக்கு (1893) இருந்ததெனலாம். பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்கள்தான் இந்த நிறுவனத்தை நிறுவியவர்; செயற்பட வைத்தவர் மற்றும் புரவலர் ஆவார். ஒன்றினை நன்கு போற்றிப் புரப்பது என்பது மிகப்பெருஞ்செயலே! அதனினும் மிகப்பெரிதாகக் கருதப்பட்டது, தக்கபடி திட்டங்கள் தீட்டுவதாகும்! அதனினும் மிகப்பெருஞ்செயலாகக் கருதப்பட்டது, கண்ட கனவினை நினைவாக்கி நிரூபிப்பது! பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் இந்நோக்கில் ஒரு தனி மனிதராகத் திகழ்ந்து, இந்திமொழிக்கெனக் கண்ட கனவுகள் பலவற்றிற்கும் தக்க வடிவம் தந்து, வெற்றி பெறுவதற்கான நன்முயற்சியில் தனித்துநின்று, ஈடு இணையற்ற வெற்றியும் பெற்றார்.

நிறுவனங்கள் உருவாகிக்கொண்டுதான் இருக்கின்றன; உடன் மூடப்பட்டும் வருகின்றன. இல்லையெனில் மற்றொரு நிறுவனத்தின் பெயரில் புதியதாக மாற்றப்பட்டும் வருகின்றன. ஆனால், வேறு எந்த நிறுவனத்திற்கும் அமையாத, ஓர் அடிப்படை, கங்கை நதியைப்போல எல்லாச் சக்தியும் திரண்டு வந்தாற்போல, பகீரதப் பிரயத்தனம் செய்து, இந்த நாகரி பிரச்சாரிணி சபைக்குப் பிறப்பைத் தந்து சாதித்த சாதனை, இவரையும் இந்திக்குரிய ஒரு பகீரதன் என அழைக்கும் நிலை ஏற்பட்டது எனலாம். இவர் நாகரி பிரச்சாரிணி சபையைத் தோற்றுவித்து மௌனமாக இருந்துவிடவில்லை. இந்தி சாகித்ய சம்மேளனத்திற்கும் இவரே ஆரம்பகர்த்தா ஆவார். இந்த இந்தி சாகித்ய சம்மேளனத்திலிருந்துதான் தக்ஷிண பாரத் இந்தி பிரச்சார சபை, ராஷ்ட்ர பாஷா பிரச்சார சமிதி மற்றும் பற்பல இந்தி நிறுவனங்கள் உருவாயின. இவ்வாறு, சபையானது இந்தி நிறுவனங்களின் தாய் எனவும், இந்தி நிறுவனங்களுக்கு அவர் பாட்டனார் எனவும் கருதும் நிலை உருவாயிற்று.

தமக்குரிய அறிவுக்களஞ்சியத்தைப் பெருக்கிக் கொள்ளாவிடினும், சொற்செல்வத்தால் அறிவை வளர்க்கும் ஆற்றலைப் பெற்றிருக்காவிடினும், மக்கள் நலங்காக்கும் பேரிலக்கியத்தைப் பெற்றிருக்காவிடினும், ஞானத்தாலும் - விஞ்ஞானத்தாலும் நிறைவு பெற்றிருக்காவிடினும் - இந்திமொழி என்ன - வேறு எந்த மொழியாயினும் தம்மை வளர்த்துக்கொள்ள இயலாது. பாபு சியாம்சுந்தர்தாஸ் இந்திமொழி ஞானத்தாலும் விஞ்ஞானத்தாலும் நிறைவு பெறுமாறு தக்க முயற்சியை மேற்கொண்டார். அவர் முதன்முதலாக தற்கால இந்திய மொழிகளின் பேரகராதி ஒன்றினை 'இந்தி சப்தசாகரம்' என இலட்சக்கணக்கான ரூபாய்ச் செலவில் நான்கு பகுதிகளாக வெளியிடச் செய்தார். இந்திமொழிக்குரிய ஆதாரப்பூர்வமான இலக்கண நூல் ஒன்றினை காமதா பிரசாத் குரு மூலம் பதிப்பித்தார். ஆச்சார்ய இராமச்சந்திர சுக்லா அவர்கள் மூலம் இந்தி இலக்கிய வரலாற்றினை எழுதச்செய்தார். சிறப்புவாய்ந்த கவிஞர்களின் பாடல் திரட்டு என்ற பெயரில் பல தொகுப்பு நூல்களை வெளிக்கொணர்ந்தார். சந்த்பர்தாயி அவர்கள் இயற்றிய இந்தியின் மிகப்பெரிய நூலாகிய 'பிருதிவிராஜ் ராசோ' என்னும் காப்பியத்தை வெளியிட்டு ஒளிபெறச் செய்தார். இந்தியின் மிகப்பெரும் கவிஞர்களாகிய துளசிதாஸ், சூர்தாஸ், ஜாயசி ,கபீர் ஆகியோரின் புகழ் நிலைத்திருக்கும் வண்ணம் அவர்களின் பாடல் திரட்டுகளின் தொகுப்பு நூல்களைப் பதிப்பித்தார். இவ்வாறு, இலக்கிய நூல்களை மட்டும் அவர் பதிப்பிக்கவில்லை. ஞான - விஞ்ஞானம் தொடர்பான பற்பல கருத்துக்கள், அதாவது தத்துவம், மனநூல், இரசாயன சாத்திரம், இயற்பியல், பொருளாதாரம், தொல்பொருள், வரலாறு தொடர்பான நூல்களையும் பதிப்பிக்க ஏற்பாடு செய்தார். இதுமட்டுமின்றி, அவ்வத்துறையில் தேர்ச்சிபெற்ற சிறந்த அறிஞர்களின் நூல்களையும் வெளியிட்டு, அந்நூல் அத்துறைக்குரிய சான்றாதார நூலாகத் திகழுமாறு செய்தார். ஆய்வாளர்கட்கு அவை இன்றும் தக்கவாறு பேருதவி புரிந்து வருவதைக் காணலாம்.

இவர் இச்சபையில் இந்திமொழிச் சம்பந்தப்பட்ட சிறப்புவாய்ந்த பயனுள்ள ஓலைச்சுவடிகளையும், கையெழுத்துப் பிரதிகளையும் தேடிக் கண்டறிந்து தொகுத்துப் பாதுகாக்கவும் ஒரு துறையை உருவாக்கினார். அத்துறையைச் சார்ந்தோர் பட்டிதொட்டிகளை நாடிச் சென்று அங்குள்ள வீடுகள்தோறும் தேடியலைந்து கிடைத்தவற்றைக் கொண்டுவந்து முறைப்படுத்தி அவற்றின் விபரம் அடங்கிய நூல்களையும் வெளியிட ஏற்பாடு செய்திருந்தார். நற்புகழ்பெற்ற பல படைப்புகளின் கையெழுத்துப்

பிரதிகளையெல்லாம் தொகுத்து முறைப்படுத்திப் பாதுகாத்துவரும் ஏற்பாட்டினையும் செய்திருந்தார். இதன் தொடர்பாக அவ்வப்பொழுது வெளியிட்டுவந்த அறிக்கைகள் தான் இந்திமொழிக்கு உயிர்நாடியாகத் திகழ்ந்து வந்தன. இவற்றைக் கற்காமலும், அடிப்படையாகக் கொள்ளாமலும் எந்த நபரும் இந்திமொழிக்குரிய ஆணித்தரமான ஆய்வினைச் செய்ய இயலாதென்பது உண்மையாகும். இன்று பிஎச்.டி., டி.லிட்., பட்டம் பெற்ற ஆயிரக்கணக்கானோர் இந்த அறிக்கைகளின் துணையால் வந்தவர்களேயாவர். இவர் இத்தகைய இந்திமொழிக்குரிய கைப்பிரதிகளைச் சேகரிக்கும் பணியில் மட்டும் கவனம் செலுத்தவில்லை. இந்திமொழிக்குரிய மிகப்பெரிய நூல் நிலையம் ஒன்றினையும் உருவாக்கும் பணியில் அதிகம் கவனம் செலுத்தி வெற்றிபெற்றார் எனலாம். நாகரி பிரச்சாரிணி சபையின் நூல் நிலையத்தில் கையெழுத்துப் பிரதிகள் மட்டுமன்று; இந்தி மொழியில் வெளிவந்த பத்திரிக்கைகளின் தொகுப்பும், நூல்களின் தொகுப்பும் விரிவாகத் தொகுக்கப்பெற்று மிகப்பெரிய நூல் நிலையமாகத் திகழ்ந்தது. இதனால் உலகிலுள்ள எல்லா அறிஞர்களும் இன்றும் நற்பயனைப் பெற்றுவருகின்றனர்.

பாபு சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் இந்தியைத் தேசிய மொழியாக மட்டுமன்றி, உலகத் தொடர்பு மொழியாகவும் கருதிவந்தார். ஆகையால், நாகரி பிரச்சாரிணி சபையின் செயற்குழுவில் வெளிநாட்டைச் சார்ந்த மூன்று பிரதிநிதிகளையும் நியமித்திருந்தார். மேலும், உலகிலுள்ள எல்லா மொழிகளுக்குமுரிய உயர்நிலை ஆய்வு மையங்கள், நிறுவனங்கள் ஆகியவற்றோடு தொடர்புகொண்டு மொழித் தொடர்பான கொடுக்கல்-வாங்கல் நடைபெற வழிவகுத்தார். அவர் இந்திமொழியின் எதிர்காலம் எப்படி இருக்கும் என்பதை நன்கு உணர்ந்திருந்தார். ஆகையால், அவர் அதற்கான எல்லா ஏற்பாடுகளையும் தம் காலத்திலேயே உருவாக்கிவிட முனைந்தார். ஞான-விஞ்ஞானம் மற்றும் சட்டம் முதலியவற்றுள் பயன்படுத்தப்படும் தொழில்நுட்பச் சொற்களைத் தொகுத்து இந்தியில் 60 ஆண்டுகளுக்கு முன்பே நூலாக வெளியிடச் செய்தார். இன்று சுதந்தர பாரதத்தில் உருவாக்கப்படும் எல்லாச் சொற்களஞ்சியங்களும் அன்று அவரால் உருவாக்கப்பெற்ற அந்த நூல்களுக்கும், பணிகளுக்கும் அதிகம் கடன்பட்டனவே. அவருடைய அந்த நூல்களை முன்வைத்து சிந்திக்காமல் புதிய சொற்களஞ்சியங்களை உருவாக்குவதென்பது இயலாத ஒன்றே! அரசியல் நிர்ணயச் சட்டத்திலுள்ளபடி இந்திமொழியின் அமைப்பை அவர் ஆமோதித்தார்; பரப்பினார். இதை அவர் காலமான பின் நம்நாடும் ஏற்றுக்கொண்டது. இவர்

பாரதநாட்டின் எல்லா மொழிகளையும் தக்கவாறு பாராட்டி வருபவராதலால் சபையில் எல்லா மொழிகளுக்குமுரிய பிரதிநிதிகளையும் நியமனம் செய்திருந்தார். மேலும், அவர் உருதுமொழியை இந்திமொழியின் தனிச்சிறப்பு வாய்ந்த ஒரு வடிவமாகவே கருதியிருந்தார். பாரசியும், அரபியும் பெற்றிருந்த பயனுள்ள சிறந்த சான்றாதாரங்களையும், வரலாற்றுத் தொடர்பான சாதனங்களையும்கூட இந்தியில் மொழிபெயர்த்து வெளியிடச்செய்தார்.

இந்தி மொழியை மிகச்சிறந்த உயர்வான ஓரிடத்திற்குக் கொண்டுசெல்ல வேண்டுமென்ற அவர்தம் பெருமுயற்சி அளவிடமுடியாதது. நாகரி பிரச்சாரிணி சபையின் மூலம் 19ஆம் நூற்றாண்டின் இறுதியிலேயே ஆய்வுப் பத்திரிக்கை ஒன்றினை வெளிக்கொணர்ந்து, அஃது தன் கம்பீரத்தாலும் நற்பணியாலும் உலகின் ஆய்வுப் பத்திரிக்கைகளில் ஒன்றாக ஏற்றுப் போற்றப்படும் தகுதியைப் பெற்றுத் திகழுமாறு செய்தார். அறிஞர்கள் தம் கட்டுரை இதில் பிரசுரமாவதைப் பெரும்பேறாக எண்ணி வந்தது மட்டுமன்று, உலகம் தழுவிய எல்லா ஆய்வு மன்றங்களும் இதனை மிகச்சிறந்த ஆய்வுப் பத்திரிக்கையாக ஏற்றுப் போற்றிவரவும் தொடங்கின. மேலும், மிகச்சிறந்த இலக்கியக் கர்த்தாக்களைத் தயார் செய்வதற்காக 'சரஸ்வதி' என்ற பெயரில் அவர் ஒரு பத்திரிக்கையும் வெளியிடச் செய்ததோடு, தாமும் அதன் ஆரம்பக்கால பொறுப்பாசிரியர் பணியையும் ஏற்று செய்துவந்தார். இதன்மூலம் இந்தி இலக்கிய வரலாற்றில் ஒரு புதிய திருப்பம் ஏற்படலாயிற்று.

காசி இந்து பல்கலைக் கழகம் 1921ஆம் ஆண்டில் மாளவியா அவர்களின் முயற்சியால் இந்தித் துறையின் தலைவராக்கப்பட்டார். அச்சமயத்தில் நாட்டில் இந்தி மொழியில் எம்.ஏ. வகுப்பு வரைப் படிக்கும் நிலை இருந்ததில்லை. அவர் இதற்குரிய திட்டங்களை உருவாக்கினார். பாடத்திட்டங்களைத் தயாரித்தார். பாடப்புத்தகங்களை உருவாக்கச் செய்தார். இவையனைத்தும் நாடு முழுவதும் ஒருமனதாக ஏற்கப்பட்டன. இன்று இந்திமொழியில் உயர்கல்விக்குரிய வடிவம் எவ்வாறு கொடுக்கப்பட்டிருக்கிறதோ, அதனைப் படைத்தவர் என்ற நிலையில் அவர்க்கு மிக்சிறந்த பெருமை உண்டு.

இந்தியின் சேவைக்கென அவர், நாட்டிலுள்ள அறிஞர்களையெல்லாம் தேர்ந்தெடுத்து தக்க வழியில் நன்கு பயன்படுத்தினார். தம் சீடர்களைக் கொண்டு ஒரு அறிஞர் குழு உருவாக்கி அதன்மூலம் எதிர்காலத்தில் திட்டமிட்டபடி

நற்காரியங்கள் செய்துவர ஏற்பாடு செய்திருந்தார். அவருடைய இப்பணி மிகச்சிறந்ததாக அமைந்திருந்தது. இந்நோக்கில் பார்த்தால் அவர் இந்திமொழி அறிஞர்களுக்கெல்லாம் அறிஞராகத் திகழ்ந்தார் எனலாம்.

ஓர் அமைப்பு யாதேனும் ஒரு நோக்கோடு அமைக்கப்படும்பொழுது அதற்கெனப் போராட வேண்டிய நிலையும் உருவாகக்கூடும். அவ்வாறு போராடுவதென்பது சாதாரண செயலாகாது. மேலும், ஆக்கப்பூர்வமான செயலில் அது ஈடுபடும்பொழுது மேலும் பெருங்கஷ்டத்திற்குள்ளாக நேரிடும் எனலாம். சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் அமைப்பினைத் தோற்றுவித்தவர் மட்டுமல்லர்; வெற்றி கண்ட போராட்ட வீரராகவும் திகழ்ந்தார். அவர் 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் இந்திமொழி வழக்கு மன்றத்தில் தக்க இடம்பெறச் செய்வதற்காக மாளவியா அவர்களின் தலைமையில் மக்கள் போராட்டமாக உருவாக்கிச் செய்த பெருஞ்செயற்கண்டு ஆங்கிலேயர்களும் தலைவணங்க நேரிட்டதோடு வழக்கு மன்றத்திலும் அரசு அலுவலகங்களிலும் இந்திமொழி தக்க இடத்தைப் பெற்றதெனலாம். அவர் இந்திமொழியில் அறிவியல் அடிப்படையில் அந்த நேரத்தில் தயாரித்து வெளிவரச்செய்த இலக்கியங்கள் அனைத்தும் இன்றும்கூட அப்பண்பினை வெளிப்படுத்திப் பாராட்டுப் பெறுவதைக் காணலாம். மேலும், ஆங்கிலேயர் காலத்தில் வானொலியில் பயன்படுத்திவந்த மொழித்தொடர்பான விதிமுறைகளையும் அவர் எதிர்த்து, தக்கவாறு அவ்விதியை மாற்றும் பணியிலும் வெற்றி பெற்றார் எனலாம். இராஜேந்திர பிரசாத் அவர்களும், டண்டன் அவர்களும் இந்துஸ்தானி மொழிக்கு ஆதரவு தெரிவித்து, அதன் சார்பாகச் செயல்பட முனைந்தபொழுது சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் இந்திமொழிக்கு ஆதரவு திரட்டுவதற்காக மேற்கொண்ட பணி வெற்றிபெற்று அவர்களையும் ஆதரவு தெரிவிக்குமாறு செய்த செயலை யாவரும் அறிவர். அந்நோக்கில் இந்திமொழியின் கௌரவத்தைப் பிரகாசிக்கச் செய்த மிகச்சிறந்த தொண்டர் இவரைப்போல வேறு எவரும் இல்லையென்றே கூறவேண்டியிருக்கிறது. இவர்தம் நற்கருத்துக்கள் இவரை இந்திமொழிச் சார்பாக வாதிடும் சிறந்த சிந்தனையாளராக உருவாக்கப் பெருந்துணைபுரிந்தது எனலாம்.

அவர் அறிவியல் அடிப்படையில் இந்திமொழித் திறனாய்வு முறையைத் தோற்றுவித்ததோடு, மொழியியலின் சிறப்பு வாய்ந்த முதல் எழுத்தாளராகவும் திகழ்ந்தார். அவர் எழுதிய

நூல்களாகட்டும், அல்லது பதிப்பாசிரியராக இருந்து வெளியிட்ட நூல்களாகட்டும், அவை அனைத்தும் வராற்றுச் சிறப்புப் பெற்றவைகளாகித் திகழ்கின்றன. இந்தியின் எழுத்தாளர் என்ற நிலையிலும்கூட அவருடைய பங்கு மிகச்சிறந்ததாகவும் முதற்தரமாகவும் இருந்ததோடு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்ததாகவும் விளங்கிற்று எனலாம். அவர் குழந்தைகள் இலக்கியம் மற்றும் மகளிர் இலக்கியம்கூட படைக்க வழிவகுத்தார் எனலாம்.

அவர் இந்திமொழிக்கென மேற்கொண்ட விரிவான பிரச்சாரம் இத்தகைய நற்பணிகளுக்கெல்லாம் நற்சான்றாகத் திகழ்ந்தன என்று கூறின் அது மிகையாகாது. எத்திசையிலும் அவர் விரும்பியவாறே இந்திமொழி நன்கு முன்னேறியதெனலாம். அவர் படைத்த நூல்களெல்லாம் இந்திமொழியிடம் கடன்பட்டவைகளாக என்றும் நிலைத்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

இன்று உலகில் பாராட்டப்பட்டுவரும் மிகச்சிறந்த பெருமைக்குரிய மொழிகளில் இந்திமொழியும் ஒன்றாகும். தேசத்தை இணைக்கும் பணியை இது நிறைவேற்றவேண்டியுள்ளது. நாட்டிலுள்ளபிற மொழிகளை மேம்பாடடையச் செய்யும் பணியும் இதற்குண்டு. ஞான-விஞ்ஞான மற்றும் புதிய இலக்கியங்களையும் கொண்ட மொழியாக அது மலரவேண்டும். அப்போது தான் அது தன் சிறப்பியல்புகளின் காரணமாக முன்னேற்றத்தின் மிக உயர்ந்த சிகரத்தைச் சென்றடைய முடியும். இருப்பினும்கூட, இந்திமொழியில் புதிய தன்மைகளை மேடையேற்ற வழிவகுக்கும் திட்டங்களின் மீது கவனம் செலுத்துவதும் இன்றியமையாததாகும். இந்திமொழி இன்று எந்நிலையில் உள்ளது என்பதைப் பரிசீலனைச் செய்து மேலும் முன்னேற்றமடையத் தேவையான நல்ல திட்டங்களைப் பயனுள்ள முறையில் உருவாக்கப்பட வேண்டியது முன்னிலும் மிகமிக இன்றியமையாததாகும். இந்திமொழிக்குரிய வரலாற்றின் புதிய அத்தியாயம் உருவாகும் நிலை ஏற்பட்டுள்ளது. பிறமொழிகள் தத்தம் வட்டாரத்தின் ஆட்சிமொழியாகவும், இந்திமொழி இந்நாட்டின் ஆட்சிமொழியாகவும், தேசிய மொழியாகவும் இடம்பெற வேண்டியுள்ளது. வழக்கு மன்றம் முதலாக சாதாரண கடை வரையிலும், ஏடுகள் முதல் பாடல்கள் வரையிலும் இந்திமொழிக்குரிய அந்தஸ்து மேலும் உயர்ந்திட வேண்டும். நாட்டின் மக்கள் மனதிலும், வாழ்விலும் நல்ல முன்னேற்றம் கண்டிட இத்தகைய உயர்வு தேவைப்படுகிறது எனலாம்.

அன்று டாக்டர் சியாம்சுந்தர்தாஸ் அவர்கள் மொழி, இலக்கியம் தொடர்பாக வகுத்துக்கொடுத்த ஆக்கப்பூர்வமான கொள்கைகளையும் நல்வழிகளையும் நாமும் மேற்கொண்டு சென்றால்தான் இத்தகைய நற்பணிகள் விரைவில் நிறைவேற சாத்தியமாகும் என அறுதியிட்டுக் கூறலாம். தற்கால இந்திமொழிக்குரிய வழியை வகுத்துத்தந்த இம்மாமேதை தொடர்பாக தேசிய கவி மைதிலிசரண்குப்தா அவர்கள் ஒரு சூத்திர வடிவில் அன்று சொன்னது பற்றிய சிந்தனை நமக்குத் தக்கவாறு தோன்றாவிடின் அவரைப்பற்றி செய்யப்படும் இத்தகைய அறிமுகப்பணிகூட அரைகுறையாக நின்று நிலைத்துவிடும் எனலாம். மைதிலிசரண் குப்தா கூறினார்:

"தாய்மொழிக் கெனக்கழிந்த ஆண்டுகள் ஐம்பதும்
வாய்மொழியால் கூறிடும் தம்பெயர்
சியாம்சுந்தர்தாஸ் எனவே!"



டாக்டர். சியாம்சுந்தர்தாஸ் தற்கால இந்தி மொழிக்கு நல்ல வடிவை வழங்கி, அதன் வளர்ச்சிப் பெருநிலைக்காகப் பாடுபட்ட சான்றோருள் மூத்தவராவர். இம் மொழிக்குரிய வரலாற்றில் இவர், தம் காலத்தில் ஆற்றிய நற்பணிகள் சிறப்பாக இடம் பெற்றிருப்பதைக் காணலாம். இதன் வளர்ச்சி மாற்றத்திற்கு இவர் ஆற்றிய தொண்டு அளப்பரிது. அதற்குரிய திட்டங்களைத் தீட்டியதோடு நின்று விடாமல், எதிர் காலத்து ஆக்கப் பணிகளின் சிருஷ்டிகர்த்தாவாகவும் திகழ்ந்திருந்தார். இம்மொழி வளர்ச்சிக்கு மட்டுமன்று, இதன் உயர் கல்வி முறைக்கும் தொடக்க காலத்தில் இவர் ஆற்றிய பணியானது, தத்தம் மொழிக்குப் பாடுபட்ட பிறமொழிப் பணியாளர்கட்கும் ஒரு கலங்கரை விளக்கமாகத் திகழ்ந்தது எனலாம். அவர் தம் நற்பணியைப் பாராட்டி காசி இந்து பல்கலைக் கழகம் டி.லிட். பட்டம் வழங்கிப் பாராட்டியது. இந்தி இலக்கிய வட்டத்தினர் 'சாகித்திய வாசஸ்பதி' என்ற பெரும் பட்டத்தை வழங்கி கௌரவித்தனர். அன்றைய அரசு 'ராய் பகதூர்' என்ற கௌரவ பட்டத்தை வழங்கிச் சிறப்பித்தது. இந்தி இலக்கிய வட்டம் மட்டுமன்று, பிறமொழி இலக்கிய வட்டமும் பாராட்டும் பெரும்பேறு பெற இவர்தம் சிறந்த படைப்புகளே காரணமாக அமைந்திருந்தன.

இந்த நூலில், அவர்தம் வாழ்க்கை வரலாறு, சிறப்புப் பண்புகள், இலக்கியப் படைப்புகள், மேற்கொண்ட ஆக்கப் பூர்வமான நற்பணிகள் தொடர்பான கருத்துக்களைக் கூறுவதோடு, இலக்கிய உலகிற்கு அவ்வப் பொழுது நற்கருத்துக்களை வழங்கி, ஒரு இலக்கியச் சக்ரவர்த்தியாகத் திகழ்ந்து பெருமை பெற்ற வரலாறு கூறப்பட்டிருக்கிறது.

**Shyamsundardas** (Tamil) **Rs.15**
ISBN 81-7201-750-2